திருவோணம், ரோகிணி, ஹஸ்தம், அனுஷம், ஸ்வாதி, ரேவதி, மூலம், உத்திரம், உத்திரட்டாதி, சதயம் ஆகிய இந்த பதினொரு நக்ஷத்திரங்கள் உள்ள இரவுக்கால நாட்கள் உத்தமம், உயர்வானவை என்றும்; பூசம், அவிட்டம், மிருகசீர்ஷம், அச்வினி, சித்திரை, புனர்பூசம் இந்த ஆறு நக்ஷத்திரங்கள் மத்யமம் என்றும்; பிற நக்ஷத்திரங்கள் பயனற்றவை அதமம் என்றும் கூறப்பட்டுள்ளது.

முன்னால் சில குறிப்பிட்ட நக்ஷத்திர நாட்கள் (இரவுகள்) கூறப்பட்டன. இங்கு உகந்த திதிகளும், கிழமை களும் கூறப்படுகின்றன. வளர்பிறையானாலும் தேய்பிறை யானாலும் ஷஷ்டி (6வது நாள் ), அஷ்டமீ (எட்டாம் நாள்), சதுர்த்தி (நான்காம் நாள்), சதுர்தசி (பதிநான்காம் நாள்), பௌர்ணமி, அமாவாசை இந்த திதிகளும் மற்ற திதிகள் சுபம் என்றும்; திங்கள், வியாழன், வெள்ளி, புதன்கிழமைகள் உத்தமம் என்றும் கூறப்படுகிறது. (விரதங்களுக்கு உகந்த நாட்களும் விலக்கத்தக்கவையே என்பதால் ஏகாதசி, பிரதோஷ நாட்களும் விலக்கத்தக்கவைதான்.)

முதலில் குறிப்பிட்ட நக்ஷத்திரங்கள் உள்ள இரவு நாட்கள் என்று வரையறை செய்யப்பட்டது. அடுத்து குறிப்பிட்ட திதிகளும், கிழமைகளும்தான் உகந்தவை என்று வரையறை செய்யப்பட்டது. எனவே, கட்டுப்பாடு அதிகமாகக்கப்பட்டுள்ளது. இந்த ச்லோகத்தில் சில குறிப்பிட்ட லக்னங்கள்தான் சிறந்தவை என்று கூறப்படுவதால் காலங்களும் இந்தக் கட்டுப்பாட்டை அதிகமாக்குகிறது. இரவுக் காலங்களில் இந்த சுலோகத்தில் சொல்லப்படும் லக்னம் (நேரம்) வரவேண்டும் என்பதால் இவ்விஷயத்தில் கட்டுப்பாடு அதிகமாகிவிடுகிறது.

விருஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், தனுஸ், கும்பம், மீனம் ஆகிய ஒன்பது லக்னங்கள் சுபகிரஹங்களுடன் கூடியிருந்தால் நன்மை உண்டு. இந்த லக்னங்களுக்கு எட்டாமிடத்தில் எந்த கிரஹமும் இருக்கலாகாது என்பதும் வலியுறுத்தப்படுகிறது.

இந்த ச்லோகத்தின் கருத்து மேலே சொல்லப்பட்டுள்ள கட்டுத்திட்டங்களை மேலும் இறுக்கமடையச் செய்கிறது. தம்பதிகளின் ஜன்ம நக்ஷத்திரமும், அனுஜன்ம நக்ஷத்திரமும், த்ரிஜன்ம நக்ஷத்திரமும் இவ்விஷயத்தில் விலக்கத்தக்கவை.

புருஷனுக்கு அச்வினி பிறந்த நக்ஷத்திரமானால் அச்வினி-மகம்-மூலம் விலக்கத்தக்கவை. மனையாளுக்கு ரோகிணியாகில் ரோஹிணி-ஹஸ்தம்-திருவோணம் விலக்கத் தக்கவை. இவ்வாறு கூறப்பட்டுள்ள கட்டுப்பாடு விதிகளைப் பின்பற்றி இல்லற சுகம் அமையுமானால் நல்ல ஆரோக்கியமான சந்ததி ஏற்படும் என்பது திண்ணம். மனக் கட்டுப்பாடுள்ள தம்பதிகளால் மட்டுமே இவை பின்பற்றப் படமுடியும். அவ்வாறு கட்டுப்பாடுடன் இல்லற வாழ்க்கை நடத்தும் தம்பதிகளுக்குப் பிறக்கும் சந்ததிகளுக்கும் சிறந்த நல்ல குணநலன்கள் அமையவே செய்யும்.

இந்த ஜன்ம-அனுஜன்ம-திரிஜன்ம நக்ஷத்திர நாட்களில் விலக்கத்தக்கவை என கூறப்படுபவையாவன சடங்குகள், யாத்திரை, வைத்திய சிகிச்சை, பத்னீ ஸங்கமம், எண்ணெய் தேய்த்துக் குளிப்பது, முடிவெட்டிக்கொள்வது (முகம் வழித்தல்), உபநயனம், திருமணம் ஆகியவை. சடங்குகள் இதில் சேர்க்கப்பட்டதன் பொருள், பொதுவாக சடங்குகள் திதிகளை அனுசரித்துத்தான் செய்யப்படும். குறிப்பிட்ட திதியில் ஜன்ம-அனுஜன்ம-த்ரிஜன்ம நக்ஷத்திரங்கள் கூடிவந்தால் சடங்குகள் செய்வதா? கூடாதா? என்ற கேள்வி எழுகிறது. இதற்கு விளக்கமாவது :- ஒருவர் காலமாகி விட்டால் சிலர் பன்னிரெண்டு நாட்கள் வரையிலும், சிலர் பதினைந்து நாட்கள் வரையிலும், சிலர் ஆறு நாட்களும் மற்றும் சிலர் இன்னும் குறைவான நாட்களும், சிலர் ஒரு ஆண்டு வரையிலும்கூட சடங்குகள் செய்கிறார்கள். மரணம் அடைந்த நாள் முதல் முக்ய சடங்கு மேற்கொள்ளப்படுகிற பன்னிரெண்டாவது நாளில் அல்லது பதினைந்தாவது நாளில் சடங்கு செய்பவருடைய ஜன்ம நக்ஷத்திரமோ-அனுஜன்ம நக்ஷத்திரமோ-த்ரிஜன்ம நக்ஷத்திரமோ இணைய நேர்ந்தால்

அந்த பன்னிரெண்டாவது அல்லது பதினைந்தாவது நாள் சடங்கை மறுநாள் தள்ளிச் செய்யலாம். அந்தணர்களின் குடும்பங்களில் ஒருவர் காலமாகிவிட்டால் ஒரு ஆண்டுவரை சடங்குகள் தொடரும். அதில் "ஊனமாஸிகம்" என்ற சடங்கு குறிப்பிட்ட நாளில் அமையும்பொழுது சடங்கு செய்பவரின் ஜன்ம-அனுஜன்ம-த்ரிஜன்ம நக்ஷத்திரங்கள் குறுக்கிட்டால் மறுநாள் தள்ளிவைத்துச் செய்யலாம் என்பதனை உணர்த்தவே இந்த ச்லோகத்தில் ஜன்ம-அனுஜன்ம-த்ரிஜன்ம நக்ஷத்திரங்களில் விலக்கிவேண்டியவற்றுடன் "சடங்கு" என்பதும் சேர்க்கப்பட்டது. விபத்து காரணமாக இறந்தவர் களுக்கு ஈமச்சடங்குகளை உடனே தொடங்குவதில்லை. ஒருமாதம் சென்றுதான் தொடங்குவர். அவ்விஷயத்திலும் கூறப்பட்ட இந்த விதிமுறை பின்பற்றப்படும்.

## *பும்ஸவன காலம்*

கர்பம் உறுதிப்பட்டபிறகு, அதற்கான ஸம்ஸ்காரத்தைக் கணவன் மூன்றாவது மாதத்தில் வளர்பிறையில் பூசம், திருவோணம் ஆகிய நக்ஷத்திர நாட்களில், கடகம், மிதுனம், கன்னி லக்னம் தவிர 8-ஆமிடத்தில் கிரஹங்கள் இல்லாதிருக்கும் விதத்தில் அஷ்டமசுத்தி உள்ள லக்னத்தில், ரிக்தை இல்லாத - அதாவது ***சதுர்த்தி, நவமி, சதுர்தசியல்லாத திதிகளில்; வெள்ளி, திங்கள் வியாழன், புதன்*** ஆகிய கிழமைகளில் செய்யவேண்டும்.

## *ஸீமந்தம் (தனியாகச் செய்வதானால்) செய்வதற்கான காலம்*

சித்திரை, வைகாசி என்ற முறையில் வழங்கப்பெறும் மாதக்கணக்கின்படி நான்கு, ஆறு, எட்டு ஆகிய மாதங்களி (ஏதோ ஒரு மாதத்தில்) முதலாவது கர்பம் ஏற்பட்ட சமயத்தில் அந்தணர் குலப்பெண்டிர்க்கு ஸீமந்தம் என்னும் சடங்கைச் செய்யவேண்டும். எட்டாவது மாதத்தில் விஷ்ணுபலியையும் செய்யவேண்டும்.

ஸீமந்தம் நடத்தும் விஷயத்தில் பூசம், ஹஸ்தம், புனர்பூசம், திருவோணம், மிருகசீர்ஷம், ரேவதி, ரோஹிணி, உத்தரம் மூன்று (உத்தரம்-உத்தராடம்-உத்தரட்டாதி) ஆகிய நக்ஷத்திரங்கள் உத்தமம். பக்ஷச்சித்ரைகளான சதுர்த்தி, ஷஷ்டி, அஷ்டமீ, துவாதசி, சதுர்தசி ஆகிய இந்த ஐந்து திதிகள் வளர்பிறையில், தேய்பிறையிலும்; நவமி (ரிக்தை) ஆகிய திதிகளைத் தவிர மற்ற திதிகளும், சிம்மம், விருச்சிகம் தவிர பிற லக்னங்களுக்குள் சுபகிரஹ பலம் உள்ள லக்னங்களும், திங்கள், வெள்ளி, புதன், குரு ஆகிய கிழமைகளும் உத்தமம். அஷ்டமம் சுத்தமாக இருக்கவேண்டும்.

## *நெருக்கடி காலத்தில் சீமந்தம் செய்வதுபற்றி*

சிலர் (சில மஹரிஷிகள்) திருவோணம், அச்வினீ, ஹஸ்தம், புனர்பூசம், மூலம், பூசம், மிருகசீர்ஷம் ஆகிய நக்ஷத்திரங்களும்; ஞாயிறு, செவ்வாய், வியாழன் ஆகிய கிழமைகளும் முன்னால் கூறப்பட்ட சீமந்தம், பும்ஸவனம் ஆகிய காரியங்களுக்கு உகந்தவையே என்று கூறுகிறார்கள். இந்த விதியை நெருக்கடியான சந்தர்பத்திற்கென உபயோகிக்கலாம்.

சில ரிஷிகள் ஸங்கட விஷயத்தில் அச்வினி, அனுஷம், மூலம் இந்த நக்ஷத்திரங்களிலும் சீமந்தம் செய்யலாம் என்று கூறுகிறார்கள்.

சில ரிஷிகள் ஸீமந்த விஷயத்தில் சித்திரை, ஸ்வாதி, மூலம், அச்வினி, அனுஷம், சதயம் ஆகிய நக்ஷத்திரங்கள் உத்தமம் என்று சொல்லுகிறார்கள்.

சந்திரன் பலமுடன் இருந்தால் நெருக்கடியான சந்தர்பத்தில் சதுர்த்தி, சதுர்தசி, பௌர்ணமீ ஆகிய நாட்களிலும்கூட ஸீமந்தம் செய்யலாம் என்று சில ரிஷிகள் கூறுகிறார்கள்

தவிர்க்கமுடியாத நெருக்கடிநிலை ஏற்பட்டாலும் இரவு நேரம், ஷஷ்டி, ரிக்தை திதிகள், அஷ்டமீ, பர்வம், செவ்வாய், சனிக்கிழமைகள், ஜன்ம நக்ஷத்திரம்-அனுஜன்ம நக்ஷத்திரம்-த்ரிஜன்ம நக்ஷத்திரம் ஆகியவை அசுபம்தான்

## *ஜன்மானுஜன்மத்ரிஜன்மங்களில் செய்யக்கூடாதவை*

ஆயுதங்கள் அப்யாசம் செய்தல், உபநயனம், திருமணம், யாத்திரை, ஸீமந்தம், பும்ஸவனம், மருந்து சேவித்தல், பித்ரு கார்யங்கள், க்ஷௌரம், ருது ஸங்கமம், யுத்தம், வாத்யக்கலை அப்யாஸம், யானை-குதிரை ஏற்றம், எண்ணெய் தேய்த்துக் குளிப்பது ஆகியவற்றை ஜன்ம-அனுஜன்ம-த்ரிஜன்ம நக்ஷத்திர நாட்களில் செய்யலாகாது.

ஜன்ம- அனுஜன்ம-த்ரிஜன்ம நக்ஷத்திரங்களில் யாத்திரை, க்ஷௌரம், திருமணம், வாஹனம் ஏறுவது, யுத்தம், ஈமச்சடங்கு, துணிச்சலுடன் செய்யும் ஸாஹஸச் செயல்கள், ஸமாவர்த்தனம், விரதம், உபநயனம், குழந்தைகளுக்கு முதல் உணவு ஊட்டுவது, ஸீமந்தம், மருந்து சேவித்தல், எண்ணெய் தேய்த்துக்கொண்டு முழுகுதல், மாம்சம், ரத்தம் முதலானவற்றை உட்கொள்வது, வாஸ்து பிரதிஷ்டை, கோயில் கட்டுதல் ஆகியவற்றைச் செய்யலாகாது.

ஸீமந்த லக்னத்திற்கு 5-8-12ஆம் இடங்களில் ஒரு பாப கிரஹம் இருந்தாலும், ஸீமந்த லக்னத்தில் குரு இருந்தாலும் அந்த கர்பத்தை அழித்துவிடுகிறது.

## *பெண் நக்ஷத்திரத்திற்கு முக்யத்வம் கொடுத்துச் செய்யவேண்டிய கார்யங்கள்*

புதுமனை புகுதல் (குடியிருப்பு வீடு மாற்றி வேறு வீடு செல்வது), ஸீமந்தம், யாகம், பும்ஸவனம், கர்பாதானம், திருமணம் ஆகிய இந்த ஆறு கார்யங்களையும் பெண் நக்ஷத்திரம் முதலாகத்தான் பார்க்வேண்டும். புருஷனுக்கு சந்தரபலம், தாராபலன் மட்டும் பார்க்கவேண்டும். *(22)*

## சுபமுகூர்த்தம் குற்றமற்றதாகக் கிடைப்பது கடினம் என்பதுபற்றி

எந்த ஒரு நாளானாலும் குணங்களுடனும், தோஷங்களுடனும் கூடியேதான் இருக்கும். குற்றமே இல்லாத குணங்களுடன் மட்டும் கூடிய நாள் தேவர்களுக்கும்கூட கிடைப்பது கடினம். தோஷம் எதுவும் இல்லாத குணம் மட்டுமுள்ள உத்தம முகூர்த்தம் பல வருடங்கள் கடந்தாலும் கிடைப்பது மிகவும் கடினம்; சாத்தியமில்லை. ஆகையால் நன்றாக முகூர்த்த நாள் பற்றி ஆராய்ந்து பார்த்து தோஷம் குறைவாகவும், குணம் மிகுந்ததாகவும் உள்ள நாளில் சுபகார்யங்களைச் செய்ய வேண்டும். *(23)*

காலபுருஷன் தோற்றம், இடைப்பகுதி, முடிவு என்றவை இல்லாதவனாக (ஆதி-அந்தமற்றதாக) எங்கும் வியாபித்து எந்தக் காலத்திலும் எந்த நிலையிலும் தோஷங்களுடன்தான் கூடியிருக்கிறான். ஆகையால் குற்றமே இல்லாத நாள் கிடைப்பதில்லை (துர்லபம்). *(24)*

## குரு-சுக்ரன் அஸ்தமன தோஷம், அதிமாஸம் ஆகியவை பார்க்கத்தேவையில்லாத கர்மாக்கள்

இந்த (இத்தனையாவது) மாதத்தில் இந்தக் கர்மாவைச் செய்யவேண்டுவது அவசியம் என்று சில கார்யங்களைச் சாஸ்திரங்கள் விதித்திருக்கின்றன. அவ்வாறு மாதப் பிரதானமாக விதிக்கப்பட்டுள்ள கார்யங்களை சாஸ்திரவிதி என்ற பலத்தைக் கொண்டு அந்தந்த மாதத்தில் செய்துவிட வேண்டும். எதிர்பாராமல் குரு-சுக்ர மௌட்யம் (அஸ்தமனம்) ஏற்பட்டுவிட்டால்கூட அந்த கார்யங்களைச் செய்துவிடலாம். இதேபோல அதிமாஸம் என்றும் பார்க்காமல் விதிக்கப்பட்ட மாதத்தில் விதிக்கப்பட்ட கார்யத்தைச் செய்துவிடலாம். *(25)*

## ஜன்ம ராசியில் செய்யத்தக்கவை

ஜன்ம ராசியில், ஜன்ம லக்னத்தில் யாத்திரை, திருமணம், கிருஹப்ரவேசம், ஸீமந்தம், திருமணத்திற்கு முன்னதாகச் செய்யப்படவேண்டிய ஸமாவர்த்தனம், மருந்து சேவித்தல், விரதங்கள், வேதாரம்பம் ஆகியவற்றைச் செய்யலாம். *(26)*

## ஸீமந்த லக்ன கிரஹபலன்

ஸீமந்தம் நடத்துவதாகத் தீர்மானிக்கப்பட்ட லக்னத்திற்குக் கேந்திரம்-த்ரிகோணம் ஆகியவற்றில் சுப கிரஹங்கள் இருந்தால் சுபபலனை அளிப்பார்கள். அசுப கிரஹங்கள் 3, 6, 11ல் இருந்தாலும் சுபபலனைத் தருவார்கள். சீமந்தத்திற்கு சுபகிரஹங்களின் லக்னங்களும், கிழமைகளும் உத்தமம். பாப கிரஹங்கள் 3, 6, 11ம் இடத்தில் இருந்தாலும் சுபமே. 8ஆமிடத்தில் எந்த கிரஹமும் சுபராகட்டும் அசுபராகட்டும் இருக்கலாகாது. இதுவே அஷ்டமசுத்தி என்று சொல்லப்படும். (சீமந்தம்தான் என்று இல்லாமல் எந்தக் காரியம் தொடங்குவதானாலும் தொடங்கும் லக்னத்திற்கு கேந்திர-த்ரிகோணங்களில் சுபர்கள் இருந்தால் சுபபலன் அமையும். அசுபர்கள் 3, 6, 11 என்ற இடங்களில் இருந்தாலும் சுபபலன் ஏற்படும் என்றும் அறியவும்.) *(27)*

## எட்டாமிடத்தில் உள்ள கிரஹத்தின் மூலம் தோஷம் ஏற்படாதிருத்தல் பற்றி

ஸீமந்த லக்னத்திற்கு 8வது ராசியில் கிரஹம் இருந்தாலும் அதனால் ஏற்படும் தோஷத்தை அந்த எட்டாம் ராசியின் அதிபதி கேந்த்ரங்களில் இருந்து சுபகிரஹங்களால் பார்க்கப்பட்டால் போக்கிவிடுகிறார். *(28)*

## விஷ்ணுபலி (பூஜை)க்கான காலம்

கர்பிணிப் பெண்களுக்கு 8ஆவது மாதத்தில் வளர்பிறையில் ரோகிணி அல்லது திருவோணத்தில், துவாதசி

அல்லது ஸப்தமீ திதியில் நண்பகல் நேரத்தில் அல்லது இரவு முற்பகுதியில் விஷ்ணு பூஜையைச் செய்யவேண்டும். (30)

இந்த விஷ்ணுபலியை (பூஜையை)ச் செய்வதற்கு திருவோணம், ரோகிணீ, பூசம், த்விதீயை, தசமீ, த்வாதசி ஆகிய காலம் சிறப்பானவை எனச் சிலர் கூறுகின்றனர். (31)

## பிரசவத்திற்குரிய இடம் அமைத்தல்பற்றி

இது இக்காலத்திற்குப் புதுமையானதுபோல் தோன்றலாம். இக்கால நாகரிகத்தின் விளைவாக பிரஸவம் என்பது எங்கெங்கோ எப்படியெப்படியோ நடைபெறுவதால் பிரஸவத்திற்காகத் தனி அறை அமைப்பது பற்றிய கருத்து புதுமையாகத் தோன்றலாம். தீயசக்திகள் பிறந்த குழந்தையையும், தாயையும் அணுகாதிருப்பதற்காகத் தனி அறை அமைக்கப்படுவதுண்டு. அந்த அறையினுள் கர்பிணிப்பெண் பிரவேசிக்கும் லக்னம், அப்பெண்ணின் ஜன்ம லக்னத்திற்கு 8ஆவது, 6ஆவது ராசியாக இல்லாதிருத்தல் நலம். வேறு ராசிகள் சுபம். 8, 6-வது ராசிகளைத் தவிர்க்கவேண்டும். (32)

## பிரஸவ அறை அமைப்பதுபற்றி (அமைக்கும் காலம்)

பிரஸவ அறை அமைப்பதற்கு பூசம், புனர்பூசம், மிருகசீர்ஷம், ரேவதி, ஸ்வாதி, ரோஹிணி, அனுஷம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, சித்திரை, அச்வினி, திருவோணம் ஆகிய நக்ஷத்திரங்களும்; விருச்சிகம், கும்பம் தவிர மீதியுள்ள லக்னமும், ரிக்தையில்லாத திதிகளும்; வெள்ளி, வியாழன், சனி, புதன், திங்கள் ஆகிய கிழமைகளில் அனுகூலமான சுபலக்னத்தில் அமைப்பது நலம் பயக்கும் என்று சொல்லப்படுகிறது. (33)

## பிறந்த குழந்தை முகம் காணல்

குழந்தை (பிள்ளை) பிறந்தவுடன் அந்த புத்திரனுடைய முகத்தைப் பார்த்தல் அக்குழந்தையின் தந்தையை பித்ரு ருண[1]த்திலிருந்து விடுபடச்செய்கிறது. ஆகையால் குழந்தை பிறந்த நேரத்தில் நல்ல நேரமா, நக்ஷத்திரமா, திதியா, கிழமையா என்று பார்த்துக்கொண்டிராமல் சிசு முகத்தைப் பார்த்ததுமே ஜாதகர்மா[2] விதிகளைச் செய்யவேண்டும். *(34)*

## பஞ்சாயுத தாரணம்

சிசு பிறந்த ஐந்தாவது நாளில் நல்லதொரு முகூர்த்தத்தில் அக்குழந்தையின் பாதுகாப்பைக் கருதி பகவானுடைய ஐந்து ஆபரணங்களை அக்குழந்தைக்கு அணிவிக்கவேண்டுவது அவசியம். தொப்பூழ் பகுதியில் தொங்கும் விதத்தில் தங்கத்தாலான அறைஞாண் அணிவித்து, பாலகிரஹ பீடை அணுகாவண்ணம் அதற்கான யந்திரத்தையும் அணிவிக்க வேண்டும். *(35)*

## குழந்தைக்குப் பால் புகட்டுதல்

குழந்தை பிறந்த முப்பத்தோறாவது நாளில் அல்லது அக்குழந்தை பிறந்த நக்ஷத்திரம் மறுமுறை வரும் நாளில் நல்ல லக்னத்தில் தெய்வ வழிபாடு செய்தபிறகு சங்கைக் கொண்டு குழந்தைக்குப் பால் புகட்ட வேண்டும். *(36)*

---

1. ஒரு அந்தணன் பிறக்கும்பொழுதே மூன்று கடன்களுடனேயே பிறக்கின்றான். அவன் அக்கடன்களை (பித்ருருணம், தேவருணம், ரிஷிருணம் என்ற கடன்களை) பூஜை, யாகங்களைச் செய்வதினாலும் (தேவருணத்தையும்), வேதங்களை அப்யசிப்பதனாலும் (ரிஷிருணத்தையும்), நல்ல புத்ரனைப் பெறுவதனாலும் (பித்ருருணத்தையும்) தீர்த்து, கடன் தீர்த்தவன் என்ற தூய்மையை அடைகின்றான்.

2. குழந்தை பிறந்தால் தீட்டு ஏற்பட்டுவிடுகிறதே. ஜாதகர்மாவை உடனே செய்யலாமா என்று கேட்டால், செய்யலாம் என்பதே பதில் ஆகும். குழந்தை பிறந்த செய்தி கேட்டதுமுதல் 3 நாழிகைவரை தந்தைக்குக் குழந்தை பிறந்த தீட்டு ஏற்படாது. அதற்குள்ளாக ஜாதகர்மாச் சடங்கைச் செய்யலாம்.

## பெயர்வைத்தல்

குழந்தை பிறந்த பத்தாம் நாளில் அல்லது பன்னிரெண்டாவது நாளில் பெயர்வைக்கும் சடங்கு நடத்தப்படவேண்டும். அவ்வாறு பெயர்வைக்கும் லக்னத்தை சுபகிரஹங்கள் உச்சம், நட்பு வீடு, தன் சொந்த வீடு இவற்றிலிருந்து பார்த்தால் அது அக்குழந்தைக்கு நன்மை தருவதாக ஆகிறது. *(37)*

பிறந்த குழந்தைக்குப் பெயர் வைப்பதற்கு உகந்தவை - அனுஷம், புனர்பூசம், மகம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, சதயம், ஸ்வாதீ, அவிட்டம், திருவோணம், ரோஹிணி, அச்வினி, மிருகசீர்ஷம், ரேவதி, ஹஸ்தம், பூசம் ஆகிய நக்ஷத்திரங்களில் ஸ்த்திர லக்னத்தில் பக்ஷச் சித்ரை, பௌர்ணமீ, அமாவாசை, நவமீ ஆகிய திதிகளைத் தவிர்த்து பிற திதிகளில் 8-ஆமிடம் சுத்தி இருக்கும் லக்னத்தில் வெள்ளி, புதன், வியாழன், திங்கள், சனிக்கிழமைகளில் பெயர் சூட்டலாம். *(38)*

## காது குத்துதல்

குழந்தை பிறந்த பன்னிரெண்டாம் நாளிலோ, பதினாறாம் நாளிலோ அல்லது ஆறாவது, ஏழாவது, எட்டாவது மாதத்திலோ இரட்டித்த திதிகளும், நக்ஷத்திரங்களும் இல்லாத நாளில், திருவோணம், திருவாதிரை, ஹஸ்தம், சித்திரை , மிருகசீர்ஷம், ரேவதி, உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, புனர்பூசம், பூசம், அவிட்டம் ஆகிய நக்ஷத்திரங்களில் கும்பம், விருச்சிகம், சிம்ம லக்னம் நீங்கலாக வேறு லக்னத்தில்; திங்கள், புதன், வியாழன், வெள்ளி ஆகிய கிழமைகளில் பௌர்ணமீ, அமாவாஸை தவிர்த்த பிற திதிகளில் 8ஆமிடம் சுத்தமாகவுள்ள (7மிடமும் சுத்தம் வேண்டும்) லக்னத்தில் காது குத்தும் சடங்கு நடத்தப்படவேண்டும். இரவு நேரம் விலக்கத்தக்கது. *(39-40)*

## குழந்தையை வீட்டிற்கு வெளியில் கொண்டு (அழைத்துச்) செல்வது

குழந்தை பிறந்த மூன்றாம் மாதத்தில் குழந்தையை வீட்டிற்கு வெளியில் எடுத்துவந்து சூரியனைப் பார்க்கச் செய்தல்வேண்டும். நான்காம் மாதத்தில் சந்திரனையும், பசுக்களையும் காணச்செய்தல்வேண்டும். குழந்தைகளுக்கு "அன்னப்ராசனம்" எனும் முதல் உணவு ஊட்டும் சடங்கிற்கென விதிக்கப்பட்ட நன்னாளில் குழந்தையை வீட்டிற்கு வெளியில் எடுத்துவரவேண்டும்.

## முதல் உணவு ஊட்டுதல்

குழந்தை பிறந்து ஆறாவது - எட்டாவது - பத்தாவது - பன்னிரெண்டாவது மாதங்களில் ஏதோ ஒரு மாதத்தில் வளர்பிறையில் புனர்பூசம், பூசம், அவிட்டம், மிருகசீர்ஷம், ஹஸ்தம், ஸ்வாதி, அச்வினி, அனுஷம், ரோகிணி, திருவோணம், சதயம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, சித்திரை, ரேவதி ஆகிய நக்ஷத்திரங்களில் பக்ஷச்சித்ரை, நவமி இல்லாத திதிகளில், ஒன்பதாம் இடத்தில் புதனும், எட்டாம் இடத்தில் செவ்வாயும், ஏழாமிடத்தில் சுக்ரனும் இல்லாத பத்தாமிடம் சுத்தியுள்ள (பத்தாமிடத்தில் ஒரு கிரஹமும் இருத்தல்கூடாது) மேஷம், மீனம், விருச்சிகம் தவிர்த்த வேறு லக்னங்களில் குழந்தைக்கு விதிப்படி முதல் உணவு ஊட்டுதல் எனும் சடங்கினைச் செய்தல்வேண்டும். (42-44)

## குழந்தைக்குத் தலைமயிர் நீக்குதல் (குடுமி வைத்தல்)

குழந்தை பிறந்த பிறகு மூன்றாவது, ஐந்தாவது வருடத்தில் - மூன்றாம் வருடத்தில் மூன்றில் ஒருபகுதி சென்றதும் அல்லது ஐந்தாம் வருடத்தில் மூன்றில் ஒருபகுதி சென்ற பிறகு- (உத்தராயணத்தில் தை மாதம் முதல் ஆனி மாதத்திற்குள்) வளர்பிறையில் குரு-சுக்ரர்கள் அஸ்தமனம் ஆகாதிருக்கும் சமயம்; புனர்பூசம், மிருகசீர்ஷம், அவிட்டம், திருவோணம், பூசம், ரேவதி, சித்திரை, அச்வினி, ஹஸ்தம்

ஆ ய உயர்ந்த நக்ஷத்திரங்களில் அல்லது ஸ்வாதி, ரோஹிணி, சர ம், உத்தரம், உத்தராடம், உத்திரட்டாதி ஆகிய மத்யமமான நக்ஷத்திரங்களில் முற்பகலில் **சௌளம்** என்ற கர்மாவைச் செய்யவேண்டும். எக்காரணம் கொண்டும் இரவு நேரத்தில் க்ஷௌர கர்மாவைச் செய்தல் கூடாது. இது தொடர்பாக ஷஷ்டி, அஷ்டமி, ரிக்தை இவைகள் இல்லாத திங்கள், வியாழன், புதன், வெள்ளி ஆகிய கிழமைகளில் மேற்படி சந்திரன், குரு, புதன், சுக்ரர் பார்வை பெறும் லக்னங்களில் கடகம், கன்னி, மிதுனம், மீனம், துலாம், ரிஷபம் ஆகிய லக்னங்களிலாவது; (மேஷம், விருச்சிகம், சிம்மம், தனுசு, கும்பம் ஆகிய லக்னங்கள் ஆகாதவை). ஆனால் மேஷம், விருச்சிகம், சிம்மம், தனுஸ் ஆகிய லக்னங்கள் சுத்தமாக சுபகிரஹ பார்வை பெற்றதாக இருப்பின் மத்யமமாகக் கருதிச் செய்யலாம். ஆனால் எவ்வளவு உயர்ந்ததாக (சுத்தமாக சுபபார்வை பெற்றதாக) இருந்தாலும் கும்ப லக்னம் உதவாது. எட்டாம் இடத்தில் ஒரு கிரஹமும் இருக்கலாகாது. ஆனால் சுக்ரன் இருக்கலாம் என்று சிலர் சொல்லுகிறார்கள். ஏழாம் இடத்தில் சுக்ரன், செவ்வாய், சூரியன், சனி ஆகிய இவர்கள் ஒருபோதும் இருக்கலாகாது.

க்ஷௌர கர்மாவில் (in connection with shaving) வெள்ளிக்கிழமை உயர்வாகக் கூறப்பட்டாலும் ப்ரேத கர்மா (ஈமச்சடங்கு) சம்பந்தமான க்ஷௌரமாக இருந்தால் வெள்ளிக்கிழமை உதவாது. தலைமயிர் எடுக்கும் விஷயத்தில் கூறப்பட்ட இந்த விதியே மீசை வைத்துக் கொள்வது, நகம் வெட்டுவது, பல் சுத்தம் செய்வது (வழக்கமான பல் தேய்ப்பது தவிர, பல்லை ராவுவது போன்ற சுத்தம் செய்வது) போன்றவற்றிற்கும் பொருந்தும். *(45-49)*

***இதற்கும் ஒரு விதிவிலக்கு கூறப்படுகிறது:*** முடி வைக்கவேண்டிய குழந்தையின் தாய், மேலே குறிப்பிட்ட காலத்திற்குள் *(3-5 ஆண்டுகளுக்குள்)* கர்பமுற்றவராக இருந்தால் 5 ஆண்டுகள் வரை இந்த க்ஷௌர கர்மாவைச் செய்யலாகாது. ஐந்து ஆண்டுகள் குழந்தைக்குக் கழிந்தபிறகு தாய் கர்பவதியானாலும் க்ஷௌள கர்மாவைச் செய்யலாம். *(50)*

ஹஸ்தம், அச்வினி, திருவோணம், ரேவதி, அவிட்டம், பூசம், புனர்பூசம், மிருகசீர்ஷம், சித்திரை ஆகிய இந்த ஒன்பது நக்ஷத்திரங்களும் க்ஷெளர கர்மாவிற்கு உகந்தவையாம். *(51)*

ஸ்வாதி, சதயம், ரோகிணீ, உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி ஆகிய இந்த ஆறு நக்ஷத்திரங்களும் மத்யமம். (பரணி, கார்த்திகை, திருவாதிரை, ஆயில்யம், மகம், பூரம், விசாகம், கேட்டை, மூலம், பூராடம், பூரட்டாதி ஆகியவை அதமம். *(52)*

***அனுஷம்பற்றி பின்னால் சொல்லப்படுகிறது :*** சைவ, சாக்த, பாஞ்சராத்ராதி தீக்ஷா காலத்திலும், மந்த்ர தீக்ஷை காலத்திலும், ராஜ்யாபிஷேகம், விரத நியம ஆரம்பகாலம், புத்ர ஜனனத்தால் ஏற்படும் தீட்டுக்காலம், சிறையிலிருந்து விடுதலைபெற்று வந்த சமயம், திருமண காலம், தேவதா பிரதிஷ்டாதிகாலம் ஆகிய சமயத்தில் க்ஷெளரம் மேற்கொள்வதற்கு நாள் - கிழமை முதலானது பார்க்க வேண்டியதில்லை. சில நெருக்கடியான காலத்தில் க்ஷெளரம் செய்துகொள்ள வேதமறிந்தவர் அனுமதித்தாலும் அரசாங்க விசேஷங்களில் கலந்துகொள்ளவேண்டிய சமயத்திலும் கூட இந்த க்ஷெளர நியமம் பின்பற்றப்பட வேண்டியதில்லை. ஆனால், ப்ரேத காரியமான க்ஷெளரத்தில் மட்டும் வெள்ளிக்கிழமை விலக்கவேண்டும். *(53-54)*

## *இரவில் செய்யத்தகாதவை*

விதை விதைத்தல், க்ஷெளரம், வாஸ்து கார்யங்கள் (வீடு, மனை அமைத்தல்) விவசாயம் ஆகியவை இரவு நேரத்தில் செய்யத்தக்கவையல்ல (செய்யலாகாது). *(55)*

க்ஷெளரத்திற்கு ஜன்ம நக்ஷத்திரம் தொடங்கி 2வது, 4வது, 6வது, 8வது, 9வது நக்ஷத்திரங்கள் உத்தமங்கள். சந்திரன் தனது ஜன்ம லக்னத்திற்கு அனுகூலமாக இருக்கவேண்டும். தன் ஜன்ம நக்ஷத்திரத்திற்கு 8ஆம் ராசியில் சந்திரன் இருக்கும் நாளில் (சந்திராஷ்டம தினத்தில்) க்ஷெளரம் விலக்கத்தக்கது.

க்ஷௌரத்திற்கு வெள்ளி, வியாழன், புதன், திங்கட்கிழமைகள் உத்தமம். ***சௌளம்*** என்ற கர்மாவை விதிவத்தாகச் செய்யும் விஷயத்தில், அது முதல் க்ஷௌரம் என்பதால் அனுஷ நக்ஷத்திரம் விலக்கத்தக்கது. அடுத்தடுத்து மேற்கொள்ளப் படும் க்ஷௌர கர்மா விஷயத்தில் உத்தமம்தான். (57)

கர்பம் தரித்தது முதல் அல்லது ஜனன காலம் முதல் மூன்றாவது அல்லது ஐந்தாவது வருஷத்தில், அந்த வருஷத்தில் மூன்றில் ஒரு பாகம் விட்டுவிட்டு அடுத்த இரண்டு பாகத்தினைச் சேர்ந்த காலத்தில் சௌளம் எனும் கர்மாவைச் செய்யப்படவேண்டும். (58)

### *க்ஷௌர விஷயத்தில் லக்ன தோஷங்கள்*

புத்தாடை அணியும் விஷயத்திலும், க்ஷௌர கர்மா மேற்கொள்ளும் விஷயத்திலும் மேஷலக்னம் துக்கத்தையும், சிம்ம லக்னம் மானக்குறைவையும், கும்ப லக்னம் நோயையும், விருச்சிகம் உடல் ஆரோக்யக் குறைவையும், தனுஸ் லக்னம் ராஜபீடையையும் தரும் என்பதால் அவை (மேஷம், சிம்மம், விருச்சிகம், தனுஸ், கும்ப லக்னங்கள்) விலக்கத்தக்கவை. (59)

### *க்ஷௌரத்தில் ஆகாத திதிகள்*

சதுர்த்தி (நான்காம் நாள்) தாய்க்கும், சதுர்தசி (பதினான்காம் நாள்) உடன்பிறந்தவளுக்கும், ஷஷ்டி (ஆறாம் நாள்) உடன்பிறந்த சகோதரனுக்கும், அமாவாசை - பௌர்ணமிகள் தந்தைக்கும், நவமி தனதான்யங்களுக்கும், அஷ்டமியில் மனையாளுக்கும் தீமையாகும். (60)

### *மனைவி கருவுற்றகாலத்தில் க்ஷௌரம் விலக்கத்தக்கது*

மனைவி கருவுற்ற பிறகு மூன்று மாதங்களுக்குமேல் க்ஷௌரம் செய்துகொள்ளாமல் கேசத்தை வளர்க்கவேண்டும். குழந்தை பிறந்த பத்தாவது நாளில் க்ஷௌரம் செய்துகொள்ள வேண்டும். (61)

## *மனைவி கருவுற்ற காலத்தில் விலக்கத்தக்கவை*

புருஷன் தம் மனைவி கர்பவதியாக இருக்கும் காலத்தில் க்ஷௌரம் செய்துகொள்வதையும், விதை விதைப்பதையும், ஆலயத்தில் விக்ரஹப்ரதிஷ்டை செய்வதையும், விழா நடத்துவது, மேலையேறுதல் ஆகியவற்றைத் தவிர்க்க வேண்டும். மேலும், யாரேனும் மரித்தால் அந்தச் சவத்தின் பின்னால் செல்வதையும், நகங்களை வெட்டுவதையும், சிராத்த போஜனம் செய்வதையும், அஸ்திவாரம் தொடங்கி வீடுகட்டுதல், வெகுதூரம் பிரயாணப்படுதல், திருமணம் செய்தல், (செய்துவைப்பதில் பங்குகொள்வது), கடல் நீரில் குளித்தல் ஆகியவற்றை விலக்கவேண்டும். *(62 - 63)*

விவசாயம், பிரயாணம், க்ஷௌரம், திருமணம், குழந்தைகளுக்கு முதல் உணவு ஊட்டுதல், புத்தாடை அணிதல், புது வாகனம் ஏறுதல் ஆகியவற்றை ஜன்ம ராசியிலும் செய்யலாம். (திருமணம் ஜன்ம நக்ஷத்திரத்தில் விலக்கத்தக்கது.) *(64)*

விதிவத்தாக சௌளம் நடந்த பிறகும் உபநயனம் நிகழ்ந்த பிறகும் மூன்று ருதுக்கள் (6 மாதங்கள்) க்ஷௌரம் விலக்கத்தக்கது. இடையில் (ஆறு மாதத்திற்குள்) உபாகர்மா (சிராவணம்) குறுக்கிட்டால் ப்ரம்மசாரி அச்சமயம் க்ஷௌரம் செய்து கொண்டாகவேண்டும். *(65)*

## *அக்ஷர ஆரம்பம்*
## *(முதன் முறையாக எழுத்துப்பயிற்சி தொடங்குதல்)*

குழந்தை பிறந்து நான்காண்டுகள் முடிவுற்று ஐந்தாம் ஆண்டு வந்ததும் உத்தராயணத்தில் (தை, மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி, ஆனி மாதங்களில் சூரியன் பிரவேசிக்கும் காலம் உத்தராயணமாகும்.) [மாசி மாதம் தவிர்ப்பது நல்லது] வளர்பிறையில் (சுக்லபக்ஷத்தில்) விக்னநாயகனாகிய மஹாகணபதியையும், வித்யாதேவியான ஸரஸ்வதியையும்

நல்ல சர்க்கரைப் பொங்கல்போன்ற மதுரமான நிவேதனங்கள் கொண்டு பூஜித்து, வித்யாரம்பம் (எழுத்தறிவு புகட்டும் ஸம்ஸ்காரம்) செய்யவேண்டும். (66)

ஹஸ்தம், புனர்பூசம், ஸ்வாதி, அனுஷம், திருவாதிரை, ரேவதி, அச்வினி, சித்திரை, திருவோணம் ஆகிய நக்ஷத்திரங்கள் உள்ள நாட்களில்; செவ்வாய், சனி இருவருடைய கிழமைகள் தவிர்த்த மற்ற நாட்களில், சர ராசியான லக்னத்திலோ; பிரதமை, ரிக்தையான சதுர்த்தி, நவமீ, சதுர்தசி திதிகளும், அஷ்டமீ, ஷஷ்டியும் நீங்கலாக மற்ற சுப திதிகளில் அஷ்டம ஸ்தானசுத்தி இருக்கும் லக்னத்தில் வித்யாரம்பம், அக்ஷர ஸ்வீகாரம் (முதன்முதலாக எழுத்தறிவு புகட்டும் ஸம்ஸ்காரம் செய்யவேண்டும். (67-68)

ஞாயிறு, வெள்ளி, வியாழக்கிழமைகளில் வித்யாரம்பம் செய்வித்தால் மந்தபுத்தியுள்ளவனும் சிறந்த அறிவாற்றல் பெற்றவனாக விளங்குவான். திங்கள், புதன் கிழமைகளும் குற்றமற்றவையே மத்யமம் எனக் கொள்ளலாம். செவ்வாய்க்கிழமையில் படிப்பிற்குத் தடைகளும், சனிக்கிழமைகளில் தீமையும் ஏற்படும். (68)

வித்யாரம்பத்தில் உபய[1] ராசிகளான லக்னங்கள் உத்தமம், சர ராசியான லக்னங்கள் மத்யமம், ஸ்திர ராசிகளான லக்னங்கள் விலக்கத்தக்கவை. (69)

வித்யாரம்பம் செய்யப்படும் லக்னத்திற்கு 8ஆம் இடத்தில் ஒரு கிரஹமும் இருக்கலாகாது. வித்யாரம்ப லக்னத்திற்கு ஐந்தாமிடத்தில் புதன், குரு, சுக்ரர்கள் இருப்பது மிகவும் சிறந்தது. (70)

---

1. மேஷம்-கடகம்-துலாம்-மகரம் சரராசிகளாகும்.
ரிஷபம்-சிம்மம்-விருச்சிகம்-கும்பம்-ஸ்திர ராசிகளாகும்.
மிதுனம்-கன்னி-தனுஸ்-மீனம் உபயபராசிகளாகும்.

## உபநயனம்

உபநயனம் செய்விக்கத்தக்கவர்களுக்கு அந்தந்த க்ருஹ்யஸூத்ரங்களில் சொல்லப்பட்ட வருஷம், ருது ஆகிவற்றில் சுக்ல பக்ஷத்தில் (வளர்பிறையில்) ஜன்ம லக்னத்திற்கோ அல்லது சந்திர லக்னத்திற்கோ 2மிடம், 11மிடம், 7மிடம், 9மிடம், 5மிடம் ஆகியவற்றில் (ஏதோ ஒரு இடத்தில்) குரு இருக்கும் சமயம், குரு-சுக்ரர்கள் அஸ்தமனம் அடையாமலும், நீசம் ஆகாமலும் இருக்கும் நிலையில் உபநயனம் செய்யப்படவுள்ள மாணவன் எந்த வேதப் பிரவைச் சேர்ந்தவனோ அந்த வேதத்திற்கு அதிபதி பலமுடன் இருக்கும் காலத்தில், உபநயனம் செய்விக்கப்படவேண்டும். இவ்விஷயத்தில் மிருகசீர்ஷம், புனர்பூசம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, அச்வினி, திருவோணம், அவிட்டம், ஸ்வாதி, சித்திரை, ரேவதி, ஹஸ்தம், அனுஷம், ரோஹிணி ஆகிய நக்ஷத்திரங்கள் உத்தமம். புதன் - வியாழன் - வெள்ளிக்கிழமைகளில் பிரதமை, நவமீ, பௌர்ணமீ, அமாவாசை, ரிக்தை எனப்படும் சதுர்த்தி, சதுர்தசி திதிகள் தவிர; சனி, செவ்வாய், சூரியன் இவர்கள் விட்ட ராசிகள் இல்லாமல்; ரிஷபம், தனுஸ், மீனம், கன்னி, கடகம், துலாம், மிதுனம் ஆகிய லக்னங்களில் அஷ்டம சுத்தியுள்ளதாக இருக்கும் லக்னத்தில் உபநயனம் செய்விக்கப்படவேண்டும். *(71-73)*

குருவும்-சுக்ரனும் நீசம் பெற்றிருந்தாலோ, தம் சத்ரு வீட்டில் இருந்தாலோ யுத்தத்தில் (கிரஹ யுத்தத்தில்) தோல்வியுற்றவர்களாக இருந்தாலோ, அம்மாதிரியான ஒரு காலத்தில் உபநயனம் செய்விக்கப்பட்டால் அந்த மாணவன் வேதங்கள் அப்யஸிக்கத் தகாதவனாகவும், ஸ்மிருதிகளில் கூறப்பட்ட கர்மாக்களுக்குத் தகுதியில்லாதவனாகவும் யாகாதி கர்மாக்களுக்கும் தகுதியில்லாதவனாகவும் கருதப்படுவான். *74*

உபநயன லக்னத்திற்கு 12ம் இடத்தில் சூரியன் இருந்து, அவரை பலம் மிகுந்த செவ்வாய் 4-ம் பார்வையாகவோ, 7-ம் பார்வையாகவோ, 8-ம் பார்வையாகவோ பார்த்தால் உபநயனம் செய்வித்த ஆசார்யன் (அதாவது தந்தை அல்லது தந்தையில்லாத நிலையில் ப்ரம்ம உபதேசம் செய்வித்தவர்) விரைவில் குருடனாவார். செவ்வாய் பலம் குறைந்தவனாக இருந்து 12ல் உள்ள சூரியனைப் பார்த்தால் வெகுநாள் சென்றபிறகு குருடனாவார். (75)

நான்கு வேதங்களின் (சாகாதிபதிகள்) அதிபர்கள் ருக் வேதத்தைப் பின்பற்றுகிறவர்களுக்குச் சாகாதிபது குரு; யஜுர் வேதிகளுக்குச் சுக்ரனும்; ஸாம வேதிகளுக்குச் செவ்வாயும்; அதர்வ வேதிகளுக்குப் புதனும் சாகாதிபர்கள் ஆவர். (76)

நான்கு வர்ணத்தவர்களுக்கும் முறையே சுக்ரன், குரு, புதன், சனி சாகாதிபதியாவர். (77)

சாகாதிபதியின் கிழமையும், அவருடைய பலமும், அவருடைய லக்னமும், அம்சமும் கூடினால் எல்லா தோஷங்களும் விலகும். (78)

மீனம், தனுஸ், கடகம் இவற்றில் குரு இருந்தால் அவர் அசுபர்களால் பார்க்கப்பட்டாலும்கூட விவாஹம், உபநயனம் முதனாவைகளுக்கு மிகவும் சுபமே. (79)

உபநயனமும், திருமணத்திற்கு முன்னால் செய்யப்பட வேண்டிய ஸமாவர்த்தனம் எனும் விரதமும் (கோதானம்' என்பதற்கு பசு தானம் என்று பொருள் இல்லை) விவாஹமும் யாகாதி கார்யங்களும், குரு பலமாக இருக்கும் காலத்தில் செய்வது என்பது மிகுந்த புண்யசாலிகளுக்கே அமையும். மற்றவர்களுக்குக் கிட்டுவதில்லை. உபநயனத்திற்கு நாள்

---

**गोदानं** - गाः केशान् द्यति खण्डयति अस्मिन् इति, गवां केशानां दानं खण्डनं यस्मिन् इति वा व्युत्पत्तिः । गृहस्थाश्रम प्रवेशात्प्राक् सर्वाङ्गक्षौरस्य विहितत्वात् तदर्थकः संस्कारः गोदानमित्युच्यते ।।

பார்க்கும்பொழுது மாணவனின் ஜன்ம நக்ஷத்திரத்திற்கு 7ஆவது, 5ஆவது நக்ஷத்திரங்களும்; ஜன்ம-அனுஜனம் த்ரிஜன்ம நக்ஷத்திரங்களும், வைநாசிக நக்ஷத்திரமும் விலக்கப்படவேண்டும் என்பதைக் கவனித்தல்வேண்டும் (ஜன்ம நக்ஷத்திரம் : பிறந்த நக்ஷத்திரம். அனுஜன்ம நக்ஷத்திரம் என்பது ஜன்ம நக்ஷத்திரத்திலிருந்து எண்ணினால் வரும் 10ஆவது நக்ஷத்திரம் ஆகும். த்ரிஜன்ம நக்ஷத்திரம் என்பது 19வது நக்ஷத்திரமாகும். வைநாசிகம் பற்றி பின்னால் சொல்லப்படும். *(80 - 81)*

பிரயாண விஷயத்திலும் (பிரயாணம் என்பது சில முக்யமான பிரயாணத்தைக் குறிப்பதாகும். பிரஸவத்திற்கு அழைத்துவருதல், பிரஸவித்த பிறகு குழந்தையுடன் தாயைப் புகுந்த வீடு அனுப்புதல், வெகுதூரப்பிரயாணம், தலயாத்திரை போன்றவற்றைக் குறிக்கும்.) திருமண விஷயத்திலும் ப்ரத்யரம் ஐந்தாவது நக்ஷத்திரம் சுபம் என்றும், உபநயனத்தில் 3 வது நக்ஷத்திரம் சுபம் என்றும் சில ரிஷிகள் கூறுகிறார்கள். (சிலர் கூறுகிறார்கள் என்பதாலேயே இக்கருத்து பொதுவிதிக்குப் புறம்பானடியால் ஏற்புடைத்தாகாது.) *(82)*

சடங்கு, திருமணம், க்ஷௌரம் (shaving) யாத்திரை (long journey) உபநயனம் ஆகிய இந்த ஐந்து கார்யங்கள் விஷயத்தில் 27ஆவது நக்ஷத்திரம் (ஜாதகரின் ஜன்ம நக்ஷத்திரத்திற்கு 27ஆவது நக்ஷத்திரம் உள்ள நாள் கட்டாயம் விலக்கத்தக்கது. *(83)*

ஒருவருடைய ஜன்ம நக்ஷத்திரத்திற்கு 27ஆவது நக்ஷத்திரம் வேறு ராசியில் உள்ளதாக நேர்ந்தால் அந்த நாளில் எல்லா கர்மாக்களையும் விலக்கிடவேண்டும். 27ஆவது நக்ஷத்திரமும், ஜன்ம நக்ஷத்திரமும் ஒரே ராசியாகில் மிகவும் உத்தமம் என்று கருதப்படுகிறது. *(84)*

## 27வது நக்ஷத்திரத்தில் விதிவிலக்கு

ஹஸ்தம், ஸ்வாதி, ரோகிணி, மிருகசீர்ஷம், திருவோணம், ரேவதி, உத்தரம், உத்தராடம், அவிட்டம், புனர்பூசம், சித்திரை இந்த 11 நக்ஷத்திரங்களும் 27ஆவது நக்ஷத்திரமாகவந்து ராசி வேறுபட்டாலும் சுபமே என்றும் கூறப்படுகிறது. (85)

இருபத்தேழாவது நக்ஷத்திரம் ராசி வேறுபட்டாலும் தங்கம், எள்ளு, பழங்களைத் தானமாகக் கொடுத்தல் அந்த தோஷத்திற்குப் பரிஹாரமாகும். (86)

## வைநாசிகம்

ஒருவருடைய ஜன்ம நக்ஷத்திர பாதத்திலிருந்து 88-வது பாதம் வைநாசிகம் எனப்படுகிறது. அந்த 88வது நக்ஷத்திர பாதம் அமையும் நாளில் எல்லா சுபகர்மாக்களும் விலக்கத் தக்கவையே. ஆனால், அந்த 88ஆவது பாதமுள்ள நக்ஷத்திரமே விலக்கத்தக்கதென்று சில ரிஷிகள் கூறுகிறார்கள். (87)

## உபநயனத்திற்குத் தகாத நாட்கள்

செவ்வாய், சனிக்கிழமைகளும், தேய்பிறையில் வரும் திங்கட்கிழமைகளும், புதன், சூரியனில் மறைந்து விட்டால் புதன்கிழமைகளும் உபநயன விஷயத்தில் விலக்கத்தக்கவை. (88)

சனி, செவ்வாய்களின் லக்னத்திலும் (மேஷ- விருச்சிக- மகர-கும்பம்) நாட்களிலும், (சனிக்கிழமை, செவ்வாய்க் கிழமை) அம்சத்திலும், திரேக்காணம், தினஹோரை ஆகிய வற்றிலும், அவர்கள் பார்வைபெறும் லக்னத்திலும் உபநயனம் செய்வித்தால் கல்வி, திறமை, அறிவு, ஆயுள், செல்வம் ஆகியவை பாதிக்கப்படும். (89)

உபநயன விஷயத்தில் மூல நக்ஷத்திரம் விலக்குதற்கு உரியது. திருவோணம், அவிட்டம், சதயம் இம்மூன்றும் மத்யமம் (சுமார் எனப்படும்). திருமண விஷயத்தில் திருவோணம், அவிட்டம், சதயம், புனர்பூசம், பூசம், அச்வினி, சித்திரை ஆகியவை விலக்குதற்குரியன. (90)

## *தாராபலம் - சந்திரபலம்*

ஜன்ம நக்ஷத்திரம் தொடங்கி, சந்திரன் இருக்கும் நக்ஷத்திரம் வரையில் எண்ணி, ஒன்பது ஒன்பதாகக் கழித்து மிகுதியுள்ளதில் (1) ஜன்மம், (2) ஸம்பத்து, (3) விபத்து, (4) க்ஷேமம், (5) ப்ரத்யரம், (6) ஸாதகம், (7) வதம், (8) மைத்ரம், (9) பரமமைத்ரம். இப்படி ஒன்பது ஒன்பதாக எண்ணும்பொழுது ஸம்பத், க்ஷேமம், ஸாதகம், மைத்ரம், பரமமைத்திரம் ஆகியவை எல்லா சுபகர்மாக்களுக்கும் சிறந்தவை ஆகும். முன்னால் குறிப்பிட்டதுபோல் **விபத்** தாரையில் உபநயனம் செய்யலாம். ***ப்ரத்யரம்*** என்று வரும் தாரையில் திருமணத்தையும், யாத்திரையையும் மேற்கொள்ளலாம். ஜன்ம நக்ஷத்திரம், அனுஜன்ம நக்ஷத்திரம், த்ரிஜன்ம நக்ஷத்திரம் இவற்றில் சில கார்யங்கள் செய்யலாம். வத தாரையில் (நக்ஷத்திரம்) எந்த சுபகார்யமும் செய்யலாகாது. மூன்றாவது சுற்றில்வரும் **வத** தாரையும் விலக்கத்தக்கதல்ல என்று பின்னால் சொல்லப்படுகிறது. (91 - 92)

முதல் பர்யாயத்தில் விபத்து, ப்ரத்யரம், வதம் இவை மூன்றும் விலக்கத்தக்கவையே. இரண்டாம் பர்யாயத்தில்

பர்யாயம் என்பது, ஒருவருக்கு அச்வினி பிறந்த நக்ஷத்திரமாக இருந்தால் அதுமுதல் ஆயில்யம் முடியவுள்ள ஒன்பதும் முதல் பர்யாயம் என்றும்; மகம் தொடங்கி கேட்டை முடியவுள்ள ஒன்பதும் இரண்டாம் பர்யாயம் என்றும்; மூலம் முதல் ரேவதி முடியவுள்ள ஒன்பதும் மூன்றாம் பர்யாயம் என்றும் சொல்லப்படும். இதுபோல் ஜன்ம நக்ஷத்திரம் எதுவானாலும் அது முதற்கொண்டு 9 நக்ஷத்திரம்வரை முதல் பர்யாயம் என்றும், 10வது தொடங்கி 18 முடியவுள்ள 9 நக்ஷத்திரங்கள் இரண்டாவது பர்யாயம் என்றும், 19 முதல் 27 முடியவுள்ள 9 நக்ஷத்திரங்கள் மூன்றாம் பர்யாயம் என்றும் காணவும்.

விபத் தாரையில் ஒரு குறிப்பிட்ட பாதமும், ப்ரத்யர தாரையில் ஒரு குறிப்பிட்ட பாதமும், வததாரையில் ஒரு குறிப்பிட்ட பாதமும்தான் விலக்கத்தக்கது. அந்த தாரைகளில் பிற பாதங்கள் சுபமே. மூன்றாவது பர்யாத்தில் எல்லாமே சுபம்தான். ***(த்ருதீயே ஸகலம் க்ராஹ்யம் வதம் வைநாசிகம் விநா)*** என்ற சாஸ்திரப்படி 7வதும், 88வது பாதமும் (பாதமுள்ள நக்ஷத்திரமும்) தவிர மற்றவை மூன்றாம் பர்யாயத்தில் சுபம் என்று சொல்லப்படுகிறது. *(93)*

இரண்டாம் பர்யாயத்தில் விபத் எனப்படும் 3வது தாரையில் முதல் பாதமும், ப்ரத்யரம் எனப்படும் 5வது தாரையில் நான்காம் பாதமும், வதம் எனப்படும் 7வது தாரையில் மூன்றாம் பாதமும் விலக்குதற்குரியதாகும். அவற்றின் மற்ற பாதங்கள் சுபமே.

ஜன்ம லக்னம் என்பது உடல் என்றும் சந்திர லக்னம் என்பது ஜீவன் என்றும் சொல்லப்படும். இவ்விரு லக்னங்களுக்கும் அனுகூலமான இடத்தில் குரு இருப்பின் உபநயனம் செய்விக்கலாம். *(95)*

## உபநயனம் செய்யக்கூடாத காலம்

ருதுவின் கடைசி, மாதத்தின் முடிவு நாள், ஒரு நக்ஷத்திரத்தின் முடிவுறும் நேரம், விஷகாலம், வருட முடிவு, திதியின் முடிவு, ஷடசீதி, (இதுபற்றி பின்னல் விளக்கம் கூறப்படுகிறது.) வியாகாதம், வஜ்ரம், விஷ்கம்பம், வைதிருதி, வியதீபாதம், சூலம், கண்டம், அதிகண்டம், மிருத நக்ஷத்திரம் (இதுபற்றியும் பின்னால் விளக்கம் தரப்படும்.) பிற்பகல், இரவு, இரவும் பகலும் கூடும் வேளை (காலை சந்த்யா) பகலும் இரவும் கூடும் வேளை (மாலை சந்த்யா), குருட்டு நக்ஷத்திரம் (இதுபற்றியும் விளக்கம் பின்னால் தரப்படுகிறது), அதிமாஸம், மலமாதம் இவைபற்றி அறியாமல் உபநயனம் செய்விக்கப்பட்டால் செல்வம், கல்வி, ஆயுள் முதலியன பாதகப்படும் (குறையலாம்). *(96-98)*

*மேலே கூறப்பட்ட விதிக்கு விலக்கு :* வருட முடிவில் 15 நாட்களும், மாதத்தின் முடிவில் 3 நாட்களும், ருதுவின் முடிவில் ஒரு நாளும், திதி முடிவிலும்-நக்ஷத்திர முடிவிலும் இரண்டு நாழிகைகளும், வ்யாகாதம், முதலானவற்றின் விஷயத்தில் 6 நாழிகைகளும் விலக்கத்தக்கவை. குறிப்பிடப்பட்ட நாட்கள் நாழிகைகள் தவிர பிற சுபமானவை.

### *மாதப்பிறப்பில் விலக்கத்தக்கது*

மாதப்பிறப்பிற்கு முன்பாக 30 நாழிகையும், பின்னால் 30 நாழிகையும் சுபகார்யங்களுக்கு உகந்ததல்ல. துலாவிஷு (ஐப்பசி மாதப்பிறப்பு)விற்கு முன்னல் 60 நாழிகைகள், பின்னல் 60 நாழிகைகள்; தக்ஷிணாயணமான ஆடி மாத ஆரம்ப தினத்திலும், சித்திரை மாதம் (சைத்ர விஷுவிற்கும்) மகர மாதப்பிறப்பு சமயத்திலும் முன் மூன்று நாட்களும், பின் மூன்று நாட்களும் சுபகார்யங்கள் விஷயத்தில் விலக்கத் தக்கவை. (100)

### *உபநயன விஷயத்தில் மேஷம் முதலான லக்னத்தின் பலம்*

மேஷ லக்னத்தில் உபநயனம் செய்தால் அந்த மாணவன் மூடனாவான். ரிஷப லக்னத்தில் செல்வமும், கல்வியும் உள்ளவனாவான். மிதுன லக்னத்தில் வேதம் கற்றவனாவான் (வேதங்களில் கூறப்பட்டவாறு நடப்பவனாவான்) கடக லக்னத்தில் வேதங்களின் ஆறு அங்கங்களை அறிந்தவன் ஆவான். (சிக்ஷா, வ்யாகரணம், ச்சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்ப்பம் ஆகிய ஆறும் வேத அங்கங்களாகும்), சிம்ம லக்னத்தில் சிற்பியாவான், கன்யா லக்னத்தில் உபநயனம் நடந்தால் மாணவன் அறிஞனாவான். துலா லக்னத்தில் வர்த்தகம் செய்பவனாவான். விருச்சிக லக்னத்தில் மரம் வெட்டிப் பிழைப்பவனாவான். தனுர் லக்னத்தில் உபநயனம்

செய்விக்கப்பட்ட மாணவன் யாவும் அறிந்தவனாகவும், மகரத்தில் பிறர் ஏவும் பணிகளைச் செய்பவனாகவும், கும்பத்தில் அரசுப்பணி செய்பவனாகவும், மீனத்தில் சாஸ்த்ர அறிவில் தேர்ந்தவனாகவும் ஆவான். *(101-104)*

## *அஷ்டமசுத்தியின் பலன்*

உபநயன லக்னத்திற்கு 8ஆமிடத்தில் எந்த ஒரு கிரஹமும் இருப்பதை சாஸ்த்ரமறிந்த அறிஞர்கல் அங்கீகரிக்கவில்லை. 8ஆமிடத்தில் சுபகிரஹம் இருந்தால் ப்ரம்மோபதேசம் செய்த ஆசார்யனுக்கும், அசுப கிரஹங்கள் இருந்தால் சிஷ்யனுக்கும் (உபதேசம் பெற்றவன்) ஆகாது, தீமைதரும். *(105)*

## *விலக்கத்தக்க நக்ஷத்திரங்கள் சில*

ஜன்ம நக்ஷத்திரத்திற்கு 10ஆவது நக்ஷத்திரம் அதாவது அனுஜன்ம நக்ஷத்திரம் ***கர்ம*** நக்ஷத்திரம் எனப்படும். 16ஆவது நக்ஷத்திரம் ஸங்காதம் என்றும், 18ஆவது ஸமுதாயம் என்றும், 23ஆவது விநாசனம் என்றும், 15ஆவது மானஸம் என்றும் சொல்லப்படும். இந்த நக்ஷத்திரங்களில் சுபகார்யங்கள் செய்யலாகாது. (இவை பொதுவான விதியாகும்.) *(106)*

## *ஜன்மத்ரயத்தில் (ஜன்ம - அனுஜன்ம - த்ரிஜன்மத்தில்) செய்தால் நன்மை பயக்கும் கார்யங்களாவன*

தேவதாபிரதிஷ்டை, தான்யங்களை சேமித்தல், விவசாயம், வியாபாரம், ஆக்ரயணம் (யக்ஞம் சம்பந்தப் பட்டது) யஜமானனைப் பார்த்தல், தீர்த்த யாத்திரை, தானம், ஜபம், ஹோமம், புத்தாடை அணிகலன்கள் அணிதல், கிணறு, குளம், ஏரிகள் அமைத்தல், ராஜ்யாபிஷேகம், ஆண்டு நிறைவில் செய்யப்படும் கார்யங்கள், சாந்தி கார்யங்கள், தீக்ஷை ஆரம்பித்தல் ஆகியவற்றை ஜன்ம-அனுஜன்ம-த்ரிஜன்ம நக்ஷத்திரங்களில் செய்யலாம். நெருக்கடியான சில தவிர்க்கமுடியாத சங்கடமான சூழ்நிலையில் உபநயனம், திருமணம் ஆகியவற்றையும் செய்யலாம். *(107)*

யஜமானர்களையும், நண்பர்களையும் காணச் செல்லுதல், (Interview for appointment என்றும் கொள்ளலாம்) புத்தாடை, புது அணிகள் அணிவது, கல்வி பயிலத் தொடங்குதல் (Admission in school), விதை விதைத்தல் ஆகியவற்றை ஜன்ம-அனுஜன்ம-த்ரிஜன்ம நக்ஷத்திரங்களில் செய்வது சுபம். *(108)*

தேவதாஸ்தாபனம், புத்தாடை, நூதன அணிகலன்கள் வாங்கி அணிதல், பண்ணையாயின் நெல் முதலான தான்யங்களைப் பாதுகாத்து சேமித்தல், மந்த்ர தேவதைகளின் அருள்பெறுவதற்காக தீக்ஷை, விரதம் இருப்பது, யாகம் செய்த / செய்யப் போகிறவராயின் அக்னியை ஆதானம் செய்தல், கிருஹப்ரவேசம், முடிசூட்டுதல், விஷ்ணுபலி, அங்குரார்பணம், நவக்ரஹ துஷ்ட கிரஹ சாந்தி கர்மாக்கள் ஜாதகர்ம, நாமகரணம் ஆகிய இந்த 15 கார்யங்களையும் த்ரிஜன்மங்களில் செய்யலாம். *(109 - 110)*

பெண்ணின் ஜன்ம நக்ஷத்திரத்தில் திருமணம் நடந்தால் நல்லது. மங்களகரம் எனப்படுகிறது. ஆணின் அனுஜன்ம-த்ரிஜன்ம நக்ஷத்திரத்தில் திருமணம் செய்யலாம். *(111)*.

## *முதலாவதாகப் பிறந்த ஆண்-பெண்கள் பற்றியவிதி*

முதலாகப் பிறந்த ஆணுக்கும் - பெண்ணுக்கும் பிறந்த மாதம், பிறந்த நாள், பிறந்த நக்ஷத்திரம், ஆனி மாதம் இவற்றில் சுபகாரியங்களைச் செய்யலாகாது.

பிறந்த மாதம், பிறந்த கிழமை, பிறந்த (ஜன்ம) நக்ஷத்திரம் ஆகியவற்றில் முதலாவதாகப் பிறந்த ஆண் - பெண் களுக்குத்தான் சுபகர்மங்கள் விலக்கத்தக்கவை, அடுத்தடுத்துப் பிறந்தவர்களுக்கு ஜன்ம-மாதம்-ஜன்ம நக்ஷத்திரத்திலும் சுப காரியங்கள் செய்யப்படலாம். *(113)*

### ஜ்யேஷ்ட (ஆனி) மாதமும் விலக்கத்தக்கதல்ல

ஆனி மாதத்திற்கு அதிபதியான புதன் (மிதுன அதிபதி) மித்ரன் வீட்டில் இருந்தாலும், சுபகிரஹங்களின் பார்வை ஏற்பட்டாலும், சுபகிரஹங்களுடன் கூடியிருந்தாலும், ஜன்ம மாதத்திலும், ஜன்ம நாள் (கிழமை), ஜன்ம நக்ஷத்திரம் ஆகியவற்றில் முதலில் ஜனித்த ஆண்-பெண்களுக்கான சுபகர்மாக்கள் ஜ்யேஷ்ட மாதத்திலும் செய்யப்படலாம். *(114)*

ஜன்ம மாதத்திற்கு அதிபதி மித்ரன் வீட்டில் இருந்தாலும், உச்சம் பெற்றாலும், சுபகிரஹங்கள் பார்த்தாலும், ஜன்ம மாதம் - ஜன்ம வாரம் (கிழமை) - ஜன்ம நக்ஷத்திரங்களிலும் முதலில் பிறந்த ஆண் - பெண்களுக்கான சுபகார்யங்களைச் செய்யலாம். *(115)*

சூர்யன் மிதுன ராசியில் இருக்குங்கால், அந்த சூரியனை குரு - சுக்ரர்கள் பார்த்தால் ஜ்யேஷ்ட மாஸத்தில், ஜ்யேஷ்ட ஸ்த்ரீ-புருஷனுக்கும் உரிய சுபகர்மாக்கள் செய்வதால் ஏற்படும் தோஷம் இல்லை. *(116)*

### கிரஹங்களுக்குப் பலன் கொடுக்க இயலாத நிலை எப்பொழுது

எந்த கிரஹமானாலும் அஸ்தமனம் அடைந்திருந் தாலும், நீச ராசியிலோ, சத்ரு ராசியிலோ, கிரஹ யுத்தத்தில் தோற்றுவிட்டிருந்தாலும், அக்கிரஹங்களுக்கு யாகம் - யக்ஞம் செய்யாதவனுக்குக் கொடுக்கப்பட்ட தானம்போல் சுபபலன்களைத் தரும் சக்தி இல்லை. *(117)*

### உபநயனம் தொடர்பாக - களக்ரஹ தோஷம்

திரயோதசி, சதுர்தசீ இரண்டு பர்வாக்கள் (பௌர்ணமீ, அமாவாசை) பிரதமை, ஸப்தமீ, அஷ்டமீ, நவமீ ஆகிய இந்த 8ஆம் களகிரஹயோகம் எனப்படும். இந்த திதிகளில் உபநயனம் விலக்கத்தக்கது. அப்படிச் செய்தால் அதற்குப் பிராயச்சித்தம் இல்லை.

### *வேதம் முதலானவற்றைப் படிக்கக்கூடாத (அனத்யயன) நாட்களில் உபநயனம் (ப்ரம்மோபதேசம்) செய்வதுபற்றி*

உபநயனத்திற்கு முந்நாள், மறுநாள் "அனத்யயன" நாளாக இருக்க, அந்த தினத்தில் உபநயனம் செய்விக்கப் பட்டால் உபநயனம் சித்தியாகாது. மறுபடியும் உபநயனம் செய்விக்கவேண்டும். *(119)*

சைத்ர-வைசாக சுக்லபக்ஷ த்ருதியையும்; மாக-பால்குன மாதங்களில் ஸப்தமீயும், இந்த சொல்லப்பட்ட மாதங்களில் வரும் கிருஷ்ணபக்ஷ பஞ்சமியும் உபநயன விஷயத்தில் சுபம் என்று பரத்வாஜ முனிவரால் சொல்லப்பட்டிருப்பதால், சித்திரை மாதத்தில் அக்ஷயத்ருதீயை-மாக மாஸத்தில் ரதஸப்தமீ இவை மன்வாதியானாலும் தோஷமில்லை. *(120)*

### *ஸித்தயோகாதிகளின் பலன்*

சித்தயோகம் நூறு தோஷங்களையும், அம்ருதயோகம் முன்னூறு தோஷங்களையும், ஸ⁻தாயோகம் ஆயிரம் தோஷங்களையும் போக்கும் என்று பார்க்கவர் கூறியுள்ளார்.

### *நக்ஷத்திர விசேஷம்*

உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, ஹஸ்தம், ஸ்வாதி, மிருகசீர்ஷம், அனுஷம் இந்த ஏழு நக்ஷத்திரங்களுக்கும் விபத்தாரை, ப்ரத்யரத்தாரை, வததாரை என்ற தோஷமில்லை.

### *விபத்தாரை முதலானதிற்கும் தானத்தால் பரிஹாரம்*

ஜன்ம நக்ஷத்திரத்திற்கு விபத்தாரை, மூன்றாவது நக்ஷத்ரமானால் (முதல் பர்யாயத்தில்) பூமி தானம்; ப்ரத்யரத்தாரை, ஐந்தாவது நக்ஷத்திரமானால் பழங்கள் தானமும்; வததாரை, ஏழாவது நக்ஷத்திரமானால் ஸ்வர்ணம், எள் இவைகளின் தானமும் செய்தால் மேற்படி தோஷமில்லை. *(123)*

## உபாகர்மம்

சிராவண மாதத்திலோ, பாத்ரபத மாதத்திலோ அவரவர்களுக்கான க்ருஹ்ய ஸூத்ரங்களில் சொல்லப்பட்ட படிக்கு பஞ்சமியில் அல்லது பௌர்ணமியில் அல்லது ஹஸ்த நக்ஷத்திரத்தில் உபாகர்மம் தர்ப்பணாதிகள் செய்து உத்தம முஹூர்த்தத்தில் ஆறு அங்கங்களுடன் கூடிய நான்கு வேதங்களையும் அத்யயனம் செய்யவேண்டும். *(124)*

## உத்ஸர்ஜனம்

உபாகர்மம் செய்தபிறகு, தக்ஷிணாயணத்தில் வேத அத்யயனம் செய்யத் தொடங்கும் மாணவன் உத்தராயணம் வந்ததும் வேத அத்யயனாதிகளை நிறுத்திவிடவேண்டும். வேத ஆரம்பத்திற்கு முன்பாக "உபாகர்மா" என்பது செய்யப்படுவதுபோல் வேதங்களையும், வேதாந்தங் களையும் தற்காலிகமாக நிறுத்துவதற்கு உத்தராயணத்தில் "உத்ஸர்ஜனம்" என்ற கர்மாவும் செய்யப்படவேண்டும். ஆனால் நடைமுறையில் "உபாகர்மம்" ஆரம்ப செய்வதற்கு முன்பாகவே உத்ஸர்ஜனம் என்ற கர்மாவும் செய்யப்படுகிறது. உபாகர்மம்போல் உத்ஸர்ஜன கர்மா தனியாகச் செய்யப் படுகிறதில்லை. வேதங்களை நியமப்படிக்கு அத்யயனம் செய்துவந்த முன்னாட்களில் உத்ஸர்ஜனமும் தனியாகச் செய்யப்பட்டுவந்தது.

உத்ஸர்ஜனம் என்ற கர்மா செய்வதற்கு உரியவைகளாக உள்ள நக்ஷத்திராதிகள் பற்றிக் கூறப்படுவதாவது - ஹஸ்தம், அச்வினி, திருவோணம், பூசம், ஸ்வாதி, அனுஷம், சித்திரை, புனர்பூசம், திருவாதிரை, அவிட்டம், சதயம் இவைகள் உத்தமம். உத்தரம், உத்திராடம், உத்தரட்டாதி, ரோகிணி, ரேவதி இந்த நக்ஷத்திரங்கள் மத்யமம். இந்த நக்ஷத்திர நாட்களில் ரிக்தை, அஷ்டமீ, பௌர்ணமீ, அமாவாசை இவற்றை விலக்கி மற்ற திதிகளில் செய்யலாம். இதற்கு புதன், வியாழன், வெள்ளிக்கிழமைகள் உயர்ந்தவை. ஞாயிறு, திங்கட்கிழமைகள் மத்யமம். புதன்-குரு-சுக்ரர்களின்

லக்னத்திலும் உபய ராசியிலும் உத்தமம். சரராசி - லக்னமானால் மத்யமம். லக்னத்திற்கு 8ஆமிடத்தில் ஒரு கிரஹமும் இருத்தலாகாது. இந்த விதத்தில் உத்ஸர்ஜன கர்மாவை (வேதாதிகளை அப்யஸிப்பதைத் தாற்காலிமாக நிறுத்தும் காரியத்தை)ச் செய்யவேண்டும். *(125 -127)*

## *விரதம்*

உபநயனத்திற்கு முன்னால் செய்யத்தகுந்த "சௌள" கர்மாவிற்குச் சொல்லப்பட்டுள்ள நாளில் வேத விரதங்களைச் செய்து, "கோதான" மங்கள கார்யத்தால் பரிசுத்தனாகி அன்றையதினம் வேதாத்யயனம் செய்துவைத்த குருவினால் அனுமதிக்கப்பட்டு ஸமாவர்த்தன கர்மாவைச் செய்ய வேண்டும். *(128)*

## *ஸமாவர்த்தனம்*

இதற்கு உரிய காலம் பற்றிக் கூறப்படுகிறது. பூசம், புனர்பூசம், மிருகசீர்ஷம். ரேவதி, ஹஸ்தம், அனுஷம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, ரோகிணி, திருவோணம் இந்த நக்ஷத்திரங்கள் உத்தமம். திங்கள், ஞாயிறு, புதன், வியாழன், வெள்ளிக்கிழமைகளுள் ஒரு நாள் உத்தமம். ரிக்தை, பௌர்ணமி, அஷ்டமீ, பிரதமை நீங்கலாக மற்ற திதிகளும்; மேஷம், விருச்சிகம், சிம்மம் தவிர்த்த பிற லக்னங்களில் அஷ்டம சுத்தி (8ஆமிடத்தில் ஒரு கிரஹமும் இல்லாதபடிக்குள்ள) உள்ள லக்னத்தில், ஸமாவர்த்தனம் செய்யத்தக்கதாகும். *(129)*

விவாஹம் தீர்மானப்பட்டு சமீபித்திருக்கும் பொழுதுதான் இந்த ஸமாவர்த்தனம் என்ற ஸம்ஸ்காரத்தைச் செய்யவேண்டும். நான்கு-ஐந்து நாட்கள் தள்ளி விவாஹ தினம் வருவதாக இருப்பின் ஸமாவர்த்தனம் செய்வது தவறு. *(130)*

ஸமாவர்த்தனம் செய்தபிறகு மூன்று நாட்களுக்குமேல் விவாஹத்தை வைத்துக்கொள்ளக்கூடாது. மூன்று

நாட்களுக்குமேல் விவாஹ தினம் நேருமானால் மறுபடியும் ஸமாவர்த்தனம் செய்தாகவேண்டும். *(131)*

## விவாஹம் (திருமணம்)

மணமக்களுக்குள் பொருத்தம் மற்றும் பிற செளகர்யங்களைப் பார்த்துக்கொண்டு திருமணவைபவத்தை உத்தராயணத்தில் (தை மாதம் முதல் ஆனி மாதம் முடிய உத்தராயணம்; ஆடி மாதம்முதல் மார்கழி மாதம் முடிய தக்ஷிணாயணம்) மாசி மாதம் தவிர பிற மாதங்களில் குரு-சுக்ரர்கள் அஸ்தமனம் ஆகாதிருக்கும்பொழுது, சுக்ல பக்ஷத்தில் ரிக்தையில்லாத திதியில் ரோகிணி, உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, ரேவதி, மகம், ஸ்வாதி, அனுஷம், மிருகசீர்ஷம், ஹஸ்தம், மூலம் ஆகிய நக்ஷத்திரங்களில் செவ்வாய், ஞாயிறு, சனி தவிர்த்த மற்ற நாட்களில் துலாம், மிதுனம், கன்னி, கும்பம், தனுஸ், ரிஷபம், கடகம், சிம்மம் ஆகிய லக்னங்களில் விவாஹம் நடத்த உத்தமம். மற்ற லக்னங்களில் சுபகிரஹங்கள் இருக்கும் ராசியானாலும் ஊர்த்தவ முகராசியானாலும் சுபமே. சுபகிரஹங்கள் கேந்திரங்களில், 2, 4, 5 ஆகிய இடங்களில் இருக்கவேண்டும். பாப கிரஹங்கள் 3, 6, 11ஆமிடங்களில் இருக்கவேண்டும். குருவும், சுக்ரனும் 8ஆமிடத்தில் இருக்கக்கூடாது. 7ஆமிடத்திலும் ஒரு கிரஹமும் இல்லாமல் இருக்க வேண்டும். அப்படிப்பட்ட நாள் நேரமாகப் பார்த்து விவாஹத்தை நடத்தவேண்டும். (ஆடி, புரட்டாசி, மார்கழி, மாசி தவிர பிற மாதங்களிலும் திருமணம் செய்யலாம்.) *(132 - 134)*

செவ்வாய்க்கிழமையும் சனிக்கிழமையும் ஆயிரம் குணங்களுடன் கூடியிருந்தாலும் அந்த இரு நாட்களில் சுபகர்மாக்களைச் செய்யலாகாது. பிற சுபதினங்களில்தான் செய்யவேண்டும்.

தேய்பிறைச்சந்திரன், வியதீபாதம், ஜன்ம நக்ஷத்திரம், அஷ்டமீ, ஷஷ்டி, செவ்வாய்க்கிழமை இவைகள் விஷயத்தில் பிற்பகல் காலம் சுபமே. *(136)*

இந்தக் கார்யங்களுக்கு இந்த மாதிரியான திதி-வார-நக்ஷத்திரங்கள், லக்னம் என்று குறிப்பிட்டுச் சொல்லப் பட்டது "விஹிதம்" என்றும்; அப்படிச் சொல்லப்படாதது "அவிஹிதம்" என்றும் பெயர். அவ்வாறு விஹிதமாக இல்லாத நாட்கள் கோடி குணமுள்ளதாக இருந்தாலும் அவை சுபமில்ல. அவ்வாறு அவிஹிதமாகவுள்ள நாட்களைவிட குணமேயில்லாத விஹிதமான நாட்கள் உத்தமம். ஒரு குல ஸ்த்ரீக்கு வசதிகள் பலகொண்ட அன்ய புருஷனைவிட வசதிகளேயில்லாத தன் புருஷனே உயர்ந்தவன் அல்லவா! *(137)*

உதயகாலத்தில் திதி தோஷம் கிடையாது. அபிஜித் (நடுப்பகல்) காலத்தில் நக்ஷத்திர தோஷம் கிடையாது. அஸ்தமன காலத்தில் லக்னதோஷமில்லை. இரவில் வார தோஷமில்லை. (கிழமை சம்பந்தப்பட்ட தோஷம், செவ்வாய், சனி என்ற தோஷம் இல்லை.) *(138)*

திருமணத்திற்குப் பொருத்தமில்லாத திதியானாலும், கிழமையானாலும், சந்திர - தாரா பலமில்லாவிட்டாலும், மிருகசீர்ஷம்-அனுஷம், மகம், ஸ்வாதி இந்த நக்ஷத்திரங்களில் (சொல்லப்பட்ட தோஷங்களைக் கருத்தில் கொள்ளாமல்) விவாஹம் செய்யலாம். அந்த நக்ஷத்திரங்களில் செய்யப்படும் திருமணம் மங்களத்தையே தரும். *(139)*

தம்பதிகளுக்கு மணமகன்-மணமகள் இருவருக்கும் ஜன்ம நக்ஷத்திரமானாலும், 27வது நக்ஷத்திரமானாலும், வைநாசிக நக்ஷத்திரமாக (22வது) இருந்தாலும், விபத்து (3ஆவது நக்ஷத்திரம்), ப்ரத்யரம் (5வது நக்ஷத்திரம்), வதம் (7வது நக்ஷத்திரம்) ஆனாலும் ஸ்வாதி, மிருகசீர்ஷம், அனுஷம், மகம் இந்த நான்கு நக்ஷத்திரங்களில் விவாஹம் செய்யலாம்; தோஷமில்லை. *(140)*

திதியைக் காட்டிலும் வாரமும் (கிழமை), வாரத்தைக் காட்டிலும் நக்ஷத்திரமும், நக்ஷத்திரத்தைக் காட்டிலும் லக்னமும் பலமானது. அதில் (லக்னத்தில்) குருவோ, சுக்ரனோ இருந்தால் எல்லா தோஷங்களையும் விலக்குவார்கள். *(141)*

லக்னத்தில் சுக்ரன் இருந்தால் ஆயிரம் தோஷங்களையும், புதன் நூறு தோஷங்களையும், குரு லக்னத்தில் இருந்தாலோ மூன்று லக்ஷம் தோஷங்களையும் போக்குகிறார். *(142)*

பகலில் உள்ள (வைக்கப்பட்டுள்ள) லக்னத்திற்கு 11ஆமிடத்தில் சூரியனும், இரவில் குறிப்பிடப்பட்ட லக்னத்திற்கு 11ஆமிடத்தில் சந்திரனும் இருந்தால் கார்க்ய முனிவரின் கருத்தின்படி கோடி தோஷங்கள் விலகும். *(143)*

லக்னத்தில் புதன் இருந்தாலோ, கேந்திரத்தில் இருந்தாலோ, சூரியனில் அஸ்தமனம் அடையாமலிருந்தால் நூறு தோஷங்களைப் போக்குகிறான். அவ்விதமாக சுக்ரன் லக்னத்தில் இருப்பின் இருநூறு தோஷங்களைப் போக்குகிறான். அவ்விதமாக லக்னத்தில் குரு இருந்தாராகில் பதினாயிரம் தோஷங்களைப் போக்குகிறார். *(144)*

கேந்திரத்தில் குரு மாத்திரம் இருந்தாலும், சூரியனைக் கண்ட இருள் விலகுவதுபோல் எல்லா தோஷங்களும் விலகும். அந்த லக்னம் சுத்தமானது. *(145)*

புதன், சுக்ரன், குரு இவர்களில் யாரேனும் ஒருவர் கேந்திரத்தில் இருந்தால் சிங்கம், யானைக் கூட்டத்தை அழிப்பதுபோல் எல்லா தோஷங்களையும் போக்குவார். *(146)*

லக்னத்தில் புதனோ, சுக்ரனோ ,குருவோ இருந்தால் நெருப்பு, பஞ்சப் பொதியைப் பொசுக்குவதுபோல் எல்லா தோஷங்களையும் போக்கும்.

குருவோ, சுக்ரனோ, புதனோ கேந்திரம் அல்லது திரிகோணம் இவற்றில் இருந்தால், ஸ்ரீமந்நாராயணனை மனதில் நினைப்பதால் பாபங்கள் யாவும் விலகுவதுபோல் தோஷங்கள் யாவும் விலகும். *(148)*

கேதுவின் தோஷத்தை ராகுவும்; ராகு-கேது இருவருடைய தோஷத்தைச் சனியும், அம்மூவருடைய

தோஷத்தைச் செவ்வாயும், அந்நால்வருடைய தோஷத்தைச் சூரியனும், அந்த ஐவருடைய தோஷத்தைப் புதனும், அவ்வாறு பேர்களின் தோஷத்தைச் சந்திரனும், அந்த ஏழு பேர்களின் தோஷத்தைச் சுக்ரனும், எல்லோருடைய தோஷத்தைக் குருவும் போக்குவார். *(149 - 150)*

லக்னத்தில் குரு இருந்தால் எல்லா கிரஹங்களாலும் ஏற்படுகிற தோஷங்களையும் பக்தியுடன் ஸ்ரீமந்நாராயண னுக்குச் செய்யப்படும் நமஸ்காரம் எப்படி பாபங்களைப் போக்குகிறதோ அவ்வாறு விலக்கும். *(151)*

குரு லக்னத்தில் இருந்தால் லக்னத்திற்குப் பாப அம்சம், பாப கிரஹ பார்வை, பாப கிரஹ ஸம்பந்தம் ஆகிய தோஷங்கள் யாவற்றையும், தேத்தாங்கொட்டை எவ்வாறு கலங்கிய நீரைத் தெளிவுபடுத்துகிறதோ அதுபோல் விலக்கி லக்னத்தைச் சுத்தமாக்கும். *(152)*

சுக்ரன் லக்னத்தில் பலம் மிக்கவனாக உச்சம் பெற்றவனாக இருந்தால், கரணம்-திதி-வாரம்-நக்ஷத்திரம் ஆகியவற்றால் ஏற்படும் தோஷங்களை எல்லாம் ஹரி ஸ்மரணம் எல்லா பாபங்களையும் போக்குவதுபோல் விலக்கும். *(153)*

சுக்ரன் *11*மிடம், *9*மிடம், *5*மிடம், *4*மிடம், லக்னம், பத்தாமிடம் இவற்றில் இருந்தாலும் சந்திரனுடன் கூடியிருந்தாலும் பகவத்கீதை பாபங்களைப் போக்குவது போல் ஸகல தோஷங்களையும் போக்குகிறார். *(154)*

## முஹூர்த்த தோஷங்கள்

எட்டாமிடத்தில் செவ்வாய், *6*ல் சுக்ரன், *9, 8, 12*, லக்னம் இவற்றில் சந்திரன் என்று இவ்விதமாக லக்னம் விவாஹ லக்னமாக வைக்கப்பட்டால் முஹூர்த்த லக்னம் அமைத்துக் கொடுத்தவர் யமதூதன் ஆகிறான். *(155)*

### *முஹுர்த்த தோஷாபாவாதம்*

6மிடத்தில் சுக்ரன் இருந்தாலும், எட்டாமிடத்தில் செவ்வாயும், 6, 8, 12, லக்னம் ஆகிய இடங்களில் சந்திரனும் இருந்தாலும், இதனால் ஏற்படும் தோஷத்தை 11மிடத்தில் சூரியன் இருந்தாலும் கேந்திர-த்ரிகோணங்களில் குரு, சுக்ரர்கள் இருந்தால் போக்கிவிடுவார்கள். *(156)*

### *அபிஜித் லக்னத்தின் பெருமை*

எத்தனை தோஷங்கள் இருந்தாலும்கூட அவற்றையும், திதி-வார-நக்ஷத்திரம்-யோகம்-கரணம் இவற்றால் ஏற்படும் தோஷங்களையும் நவக்ரஹங்களின் தோஷங்களையும் அபிஜித் முஹுர்த்தம் விலக்கிவிடும். *(157)*

### *அபிஜித் என்பது யாது ?*

சூரிய உதயத்திலிருந்து சுமார் 15-00 நாழிகைக் காலமாகும். (அதாவது சூரியன் நடுப்பகலை அடையும் காலம்) எந்த இடத்திலும் (தேசத்திலும்) முக்யமானது. அது எல்லா தோஷங்களையும் போக்கவல்லது. (முக்ய குறிப்பு : இந்த அபிஜித் முஹுர்த்தம், சௌளத்திற்கும், உபநயனத் திற்கும் உகந்ததல்ல. பிற காரியங்கள் அந்த நேரத்தில் செய்தால் காரியசித்தி நிச்சயம். *(158)*

### *கோதூளி லக்னம்*

சூரிய உதயமாகும் காலமும் - மறையும் காலமும் கோதூளி லக்னம் என்று பெயர். இந்த லக்னத்திற்கு (நேரத்திற்கு)த் திதி-வாரம்-நக்ஷத்திரம்-யோகம்-கரணம் ஆகியவற்றால் உள்ள தோஷம் ஏதும் கிடையாது. கோதூளி லக்னத்தில் செய்யப்படும் சகல காரியங்களும் வெற்றிபெறும். *(159)*

குருவானவர் லக்னம், கேந்திரம், திரிகோணம், உச்ச ஸ்தானம் இவற்றில் இருந்தால் திதி-வாரம்-நக்ஷத்திரம்-

யோகம்-கரணம் ஆகியவற்றின் தோஷத்தை ஸ்ரீமந்நாராயணன் பத்தியுள்ளம் கொண்ட பக்தனின் பாபங்களைப் போக்குவதுபோல் போக்குகிறார்.

குருவானவர் பலம் மிக்கவராய் லக்னம், கேந்திரம், திருகோணம் இவற்றில் இருந்தால் லக்ஷம் தோஷங்களைப் போக்குவார். சுக்ரனும், புதனும் அதில் பாதி தோஷத்தைப் போக்குவார். சந்திரன் ரிஷபத்தில் அல்லது கடகத்தில் பலமுடன் இருந்தால் (அசுபசம்பந்தமோ, அஸ்தமன தோஷமோ இல்லாமல் இருந்தால்) எல்லா தோஷங்களையும் போக்குகிறார். *(161)*

ரோகிணி நக்ஷத்திரத்தில் சந்திரன் இருந்தால் திதி-வார-நக்ஷத்திர-யோக-கரணங்களின் தோஷத்தையும், நவக்கிரஹ தோஷத்தையும், குளிகன், யமகண்டன் முதலான எல்லா தோஷங்களையும் போக்குகிறார். *(162)*

குருவானவர் கேந்திரத்திலோ, 5-9மிடங்களான திரிகோணத்திலோ இருந்தாலும், தன் நக்ஷத்திரத்தில் இருந்தாலும், மித்ர க்ஷேத்திரத்தில் இருந்தாலும், உச்சமாக இருந்தாலும் பக்ஷம் (தேய்பிறை) திதி-வாரம்-அசுப கிரஹ யோகம்-கரணம் ஆகியவற்றால் ஏற்படும் தோஷத்தை பகவத் கீதை பாபங்களை விலக்குவதுபோல் விலக்குகிறார். *(163)*

சௌளகர்மா, உபநயனம், விவாஹம், புதிய வஸ்த்ரம் அணிதல் ஆகிய விஷயத்தில் லக்னத்திலும், 7லும் ராகு-கேது இருந்தாலும் தோஷமில்லை. *(164)*

### *சுத்தி ஸ்தானங்கள்*

இன்ன கார்ய விஷயத்தில் இன்ன இடம் சுத்தி வேண்டும் என்பது இதன்மூலம் கூறப்படுகிறது.

குழந்தைக்குப் பெயர் சூட்டும் விழாவில் லக்னத்திற்கு 12-மிடம் சுத்தியும், ஊனமாஸிகாதி சிராத்த விஷயத்தில் 11மிட சுத்தியும், அன்னப்ராசனம் (குழந்தைக்கு முதல் உணவு

ஊட்டுதல் எனும்) விஷயத்தில் 10மிடம் சுத்தியும், சௌள கர்மாவில் 9மிடம் சுத்தியும், உபநயனத்தில் 8மிடம் சுத்தியும், திருமணத்தில் 7மிடம் சுத்தியும், புத்தாடை அணியும் லக்னத்திற்கு 6மிடம் சுத்தியும், பிரயாண லக்னத்திற்கு 5மிடம் சுத்தியும், அக்ஷர அப்யாஸ லக்னத்திற்கு 4மிடம் சுத்தியும், விவசாய ஆரம்ப செய்யும் லக்னத்திற்கு 3மிடம் சுத்தியும், கிருஹப்ரவேச விஷயத்தில் இரண்டாமிட சுத்தியும், நிஷேக லக்னத்திற்கு லக்ன சுத்தியும் இருக்கவேண்டும். *(165-167)*

*(கிருஹப்ரவேச லக்னத்திற்கு 12மிடம் சுத்தவேண்டும் என்பது பிற நூல்களிலும் இதே நூலில் அடுத்துவரும் ச்லோகத்திலும் கூறப்படுகிறது.)*

1. நிஷேகம், 2. விவசாயம், 3. வியாபாரம், 4. கல்வி ஆரம்பம் செய்தல், 5. யாத்திரை, 6. புத்தாடை அணிவது (அணிகலன் உட்பட), 7. திருமணம், 8. உபநயனம், 9. சௌளம், 10. பெயரிடும் விழா, 11. சிராத்தம் (சடங்கு), 12. கிருஹப்ரவேசம் (புதுமனை புகுதல்) ஆகியவற்றின் விஷயத்தில் முறையே லக்னம் முதல் 12 இடங்களின் சுத்தி இருக்கவேண்டும் என்பது சிலர் கருத்தாகிறது. *(168)*

### லக்ன குருவும் சுபராவதில்லை

குரு லக்னத்தில் இருந்தாலும் சந்திரன் 6-8-12ல் இருந்தாலும் (ஜாதகர்ம லக்ன விஷயத்தில் குரு லக்னத்தில் இருப்பது சரியல்ல.) சிசுவிற்குத் தீமை. விவாஹ லக்னத்தில் குரு இருந்தால் மணப்பெண் மலடியாவாள். யாத்ரா லக்னத்தில் குரு இருந்தால் காரியசித்தி ஏற்படாது. விவசாய ஆரம்ப லக்னத்தில் குரு இருந்தாலும் பலன் இல்லை.

***மேஷாதி லக்னங்கள் இன்ன இன்னதற்குக் கூடாது என்று :*** மேஷ லக்னத்தில் திருமணம் நடத்தலாகாது. ரிஷபத்தில் சடங்குகளும், மிதுனத்தில் யாத்திரையும், கடகத்தில் தோப்பு (Park) அமைத்தல், சிம்ம லக்னத்தில் பெண் பார்த்தலும், கன்னியில் நிஷேகமும், துலா லக்னத்தில்

விவசாயம் ஆரம்பமும், விருச்சிகத்தில் பொன்னேர் பூட்டுவதும், தனுர் லக்னத்தில் கிணறு வெட்ட ஆரம்பம் செய்வதும், மகரத்தில் ஓடம், படகு விடுவதும், கும்ப லக்னத்தில் க்ஷௌரமும் (hair dressing), மீன லக்னத்தில் வித்யாரம்பமும் செய்யலாகாது. *(170)*

## *விவாஹ சக்ரம்*

விவாஹ சக்ரம் என்பது "குறுக்கும் நெடுக்குமாக" நான்கு நான்கு கோடுகள் இழுத்து ஒன்பது கட்டங்கள் அமைத்து, அதில் நடுக்கட்டத்தில் சூரியன் இருக்கிற நக்ஷத்திரம் முதலாக பிரதக்ஷிணமாக (Clockwise) மூன்று நக்ஷத்திரங்கள் மேலும் மூன்று நக்ஷத்திரங்கள் எழுதிப் பார்க்கவும். ***விவாஹ முஹூர்த்த நக்ஷத்திரம்*** நடுவில் உள்ள மூன்றில் ஒன்றானால் மணப்பெண் - மணமகன் இரண்டு குலத்திற்கும் சுபம் ஆகாது. கிழக்கு மூன்றில் இருந்தால் ஐச்வர்யம், அக்னி மூலையில் உள்ள மூன்றில் ஒன்றாக வந்தால் மணப்பெண் குலத்திற்கு ஆகாது. தெற்கு மூன்றில் வந்தால் ஏழ்மையும் (தாரித்ரியம்), வைதவ்யமும், தென்மேற்கு (நிருருதி மூலை) திசையில் வந்தால் ஸகல ஸௌக்யமும், மேற்கு திசையில் வந்தால் வைதவ்யமும், வாயுமூலையில் (வடமேற்குக் கட்டத்தில்) வந்தால் வியபிசாரமும், வடக்கு திசையில் உள்ள கட்டத்தில் வந்தால் அதிக புத்ர லாபமும், தனலாபமும், ஈசான்ய திக்கில் (வடகிழக்கு திசையில்) உள்ள கட்டத்தில் வந்தால் மணப்பெண் பார்வதிதேவிக்கு இணையாக சகல ஸௌபாக்யங்களும் பெற்றவளாக இருப்பாள். இவ்வாறு சூரியன் இருக்கும் நக்ஷத்திரத்தை நடுக்கட்டத்தில் வைத்து மும்மூன்று நக்ஷத்திரங்களை எழுதி, நடுக்கட்டத்திலிருந்து பிரதக்ஷிணமாக எண்ணும்பொழுது முகூர்த்த நக்ஷத்திரம் எந்தக் கட்டத்தில் விழுகிறதோ அதற்கான பலனைக் கண்டுகொள்ளவும். ரேவதி முகூர்த்த நக்ஷத்திரம் என்றும், சூரியன் இருக்கும் நக்ஷத்திரம் திருவோணம் என்றும் வைத்துக்கொண்டு இதனைப் பார்க்கவும்.

## *விவாஹ சக்ரம்*

| | | |
|---|---|---|
| புனர்பூசம்<br>பூசம்<br>ஆயில்யம் | மகம்<br>பூரம்<br>உத்தரம் | ஹஸ்தம்<br>சித்திரை<br>சுவாதி |
| ரோகிணி<br>மிருகசீர்ஷம்<br>திருவாதிரை | **திருவோணம்**<br>அவிட்டம்<br>சதயம் | விசாகம்<br>அனுஷம்<br>கேட்டை |
| அச்வினி<br>பரணி<br>கார்த்திகை | பூரட்டாதி<br>உத்தரட்டாதி<br>**ரேவதி** | மூலம்<br>பூராடம்<br>உத்தராடம் |

இதன்படி ரேவதி நக்ஷத்திரம் முஹூர்த்த நக்ஷத்திரமாக அமைத்தது உயர்வான பலன் தருவதாக ஆகிறது இதுபோல மற்றதையும் கண்டுகொள்க.

## *திருமண விஷயத்தில் 21 மஹாதோஷங்கள்*

இந்த 21 மஹாதோஷங்கள் நாரதரால் கூறப்பட்டுள்ளன. அவையாவன (1) பஞ்சாங்க சுத்தியில்லாதது, (2) லக்னமும் 7மிடமும் சுத்தியில்லாமை, (3) மாதப்பிறப்பு, (4) பாப ஷட்வர்கம், (5) 6ம் இடத்தில் சுக்ரன் இருப்பது, (6) 8ம் இடத்தில் செவ்வாய் இருப்பது, (7) கண்டாந்தம், (8) லக்னத்திற்கு இரண்டாம், பன்னிரண்டாமிடங்களில் பாப கிரஹங்கள் இருப்பது என்று அசுபகர்த்தரீ, (9) 12ம் இடம், 6ம் இடம், 8ம் ஆகிய இடங்களில் சந்திரன் இருப்பது, (10) தம்பதிகளுக்கு எட்டாம் ராசி விவாஹ லக்னமாக இருப்பது, (11) விஷகடிகை (12) தோஷமுள்ள முஹூர்த்த லக்னம், (13) வாரதோஷம், (14) ஏகார்களை, (15) கிரஹணம் பிடித்த நக்ஷத்திரம், (16) உற்பாத கண்ட நக்ஷத்ரம், (17) பாபகிரஹ வேதையுள்ளது, (18) பாப ஆக்ராந்தம், (19) பாப அம்சம், (20) மஹாவியதீபாதம், (21) மஹாவைதிருதீ என்பதாக இருபத்தொரு மஹா

தோஷங்கள் உள்ள லக்னத்தில் விவாஹம் செய்யக்கூடாது. விவாஹ லக்னத்திற்கு இந்த 21 தோஷங்களில் ஏதொன்று இருப்பினும் தோஷமே. *(177 - 181)*

### *குருடு - ஒற்றைக்கண் - செவிடு - முதலான நக்ஷத்திரங்கள்*

சூரியன் சஞ்சரித்துவிட்ட நக்ஷத்திரம் முதல் மூன்று நக்ஷத்திரங்கள் குருடு என்றும்; அதற்குமேல் ஒன்பது நக்ஷத்திரங்கள் ஒற்றைக்கண் உள்ளவை என்றும்; அதற்குமேல் பன்னிரெண்டு நக்ஷத்திரங்கள் இரண்டு கண்கள் உள்ளவை என்றும்; அதற்குமேல் மூன்று செவிடு என்றும் சொல்லப் படுகிறது. குருடான நக்ஷத்திரத்தில் திருமணம் செய்தால் மணப்பெண்ணுக்குச் சந்ததி ஏற்படாமலிருப்பதுடன் விதவையும் ஆவாள். ஒற்றைக்கண் (குருட்டு) நக்ஷத்திரத்தில் விவாஹம் செய்தால் பிள்ளைகள் பிறந்து மரிக்கலாம். இரண்டு கண்கள் உள்ள நக்ஷத்திரத்தில் ஐச்வர்யம் ஏற்படும், ஆண் சந்ததியும் ஏற்படும். செவிடு நக்ஷத்திரத்தில் விவாஹம் செய்தால் மணப்பெண் மலடியாவாள். *(182 - 183)*

### *கூடாத - பொருத்தமில்லாத லக்னம்*

லக்னத்திற்குப் பன்னிரெண்டாமிடத்தில் சூரியன், ஆறில் சந்திரன், 9-ல் செவ்வாய், 10-ல் புதன், 6-ல் குரு, 7-ல் சுக்ரன், 5-ல் சனி, 8-ல் குரு, சந்திரன், லக்னத்திற்கு இருபுறமும் பாப கிரஹங்கள் என்று இவ்வகையிலான லக்னத்தில் திருமணம் செய்தல் கூடாது. *(184)*

### *சுத்திஸ்தான அபவாதம்* [1]

சுத்தி ஸ்தானத்தில் குரு-புதன் இருப்பின் தோஷமில்லை என்று கூறப்படுகிறது. இன்ன இடங்கள் சுத்தமாக (கிரஹங்கள் இல்லாததாக) இருக்கவேண்டும் என்று

1. அபவாதம் என்பதற்கு (Amendment) என்று பொருள் கொள்க. நடைமுறையில்-பேச்சுவழக்கில் உள்ள பொருளில் இச்சொல் சாஸ்திரங்களில் பயன்படுத்தப்படுகிறதில்லை.

முதலில் கூறப்பட்டது. அது பொதுவிதி (உத்ஸர்க விதி) என்று பெயர். இந்த ச்லோகத்தில் அந்த விதிக்கு விலக்கு (Amendment) கூறப்படுகிறது. சுத்தி ஸ்தானங்களில் புதன், குரு அல்லது சுக்ரன் இருந்தால் அது தோஷமாகாது. புத்ரலாபம் முதலான நன்மைகளையே செய்யும். மேலே கூறப்பட்ட கிரஹங்கள் தவிர்த்த பிற கிரஹங்கள் சுத்தி ஸ்தானங்களில் இருந்தால் தோஷமுண்டு. அந்த குறிப்பிட்ட காரியத்தைச் செய்கிறவருக்கு ஓராண்டுக்குள் தோஷம் சம்பவிக்கும் என்பதாம். *(185)*

விவாஹ லக்னத்திற்கு 7மிடத்தில் புதன், குரு, சுக்ரன் இவர்கள் இருந்தாலும், வளர்பிறைச் சந்திரன் இருந்தாலும் தோஷமில்லை. அதுமட்டுமில்லாமல் அவ்விடத்திலுள்ள மேலே குறிப்பிட்ட குரு, சுக்ரன், புதன், சந்திரர்கள் ஸகல தோஷங்களையும் போக்கி (ஏதுமிருந்தால்) புத்ர-தனாதி-ஸம்பத்துக்களையும் அளிக்கிறார்கள். *(186)*

சந்திரன் பலமிக்கவனாக இருந்து (வளர்பிறைச் சந்திரனாகவும் இருந்து, பாப கிரஹ சம்பந்தமில்லாமலும், நீசத்வாதி தோஷமில்லாமலும் இருந்து) விவாஹாதி லக்ன கேந்திரத்திலோ, த்ரிகோணத்திலோ இருந்தால் அவர் விவாஹாதி கார்யங்களைச் சுபமங்களகரமாக, ஸ்ரீமந்நாராயணன் பக்தர்களின் ஸகல பாபங்களையும் விலக்கி க்ஷேமத்தை அருள்வதுபோல் செய்கிறார். *(187)*

## அபிஜித் முஹூர்த்தத்தின் சிறப்பு

நண்பகல் நேரம் **அபிஜித்** முஹூர்த்த காலமாகும். அந்த சமயத்தில் (அபிஜித் முஹூர்த்த காலத்தில்) விவாஹாதிகள் செய்யப்படுமானால், விஷ்டி, வியதீபாதம் முதலானவற்றால் ஏற்படக்கூடிய தோஷங்களும் கிரஹங்களாலும் உத்பாதம் முதலானவற்றிலும் ஏற்படும் தோஷங்களும் விலகி விடுகின்றன. *(188)*

11மிடம் லாப ஸ்தானம், உபசய ஸ்தானம் ஆகும். விவாஹ சுபமுஹூர்த்த லக்னத்திற்கு 11மிடத்தில் சுபகிரஹங்களோ, அசுபகிரஹங்களோ இருந்தாலும் தம்பதிகளுக்கு நன்மையையே செய்கிறார்கள். ஆனால் 12ம் இடத்தில் குரு, சுக்ரன், புதன் தவிர மற்ற கிரஹங்கள் இருந்தால் தோஷமே. (189)

### சுபகிரஹங்களும் அசுபர் ஆகலாம்

இயற்கையில் சுபர்களாக இருந்தாலும், க்ரூர அம்சத்தில் இருந்தாலும், க்ரூர கிரஹ பார்வை, க்ரூர கிரஹ சம்பந்தம், சத்ரு வீட்டில் இருத்தல், நீசமடைதல், சூரியனில் அஸ்தமனம் அடைதல்போன்ற நிலையைப் பெற்றால் அசுபர்களாகிறார்கள். (190)

(இன்னும் ஒருவிதத்திலும்சுபர்கள் அசுபர்களாகிறது உண்டு. இயற்கையில் சுபர்களாக (Natural Benefics) உள்ள கிரஹங்களும்கூட லக்னத்தை அனுசரித்து அசுபர்களாகிறார்கள். (Malefics) இதுபோல் இயற்கையில் அசுபர்களாக உள்ள கிரஹங்களும்கூட லக்னத்தை அனுசரித்து சுபர்கள் ஆகிறார்கள். உதாரணமாக துலா லக்னத்திற்கு 3மிடம், 6மிடம் இவற்றிற்கு அதிபதியாகும் காரணத்தால் குருவானவர் "पतयः त्रिषडायानां ग्रहाः पापफलप्रदाः" என்ற சாஸ்திரத்தை அனுசரித்து அசுபர் ஆகிறார். இதுபோல் மேஷ லக்னத்திற்கு 5மிடத்து அதிபதியாகும் காரணத்தால் சூரியனும், கடக லக்னத்திற்கு 5-10மிடத்து அதிபதியாகும் காரணத்தால் செவ்வாயும் சுபர்களாகிறார்கள். இதேபோல் கேந்திராதிபதியாகும் காரணத்தால் மிதுன, கன்னி, லக்னங்களுக்குக் குருவும்; மேஷ, விருச்சிக லக்னங்களுக்கு சுக்ரனும் அசுபர் ஆகிறார்கள் என்பதையும் இங்கு நினைவு கொள்ளவும்.)

தனது ராசிக்கு அஷ்டம ராசியிலும் (சந்திராஷ்டமத்திலும்) ஜன்ம ராசியிலும் விருந்து உண்பது. ராஜசேவை, பணம், சொத்து சம்பாதித்துச் சேர்த்தல் (போர்

செய்ய - இது முற்காலத்திய மன்னராட்சிக் காலத்திற்குப் பொருந்துவது. நாள் பார்த்துத்தான் போர் தொடங்குவது என்ற நிலை இருந்த காலத்திற்குப் பொருந்தும்.) தேர், குதிரை, யானை ஏற்றம் (பயிற்சி செய்ய) ஆயுதப்பயிற்சி (சிலம்பாடுதல் போன்றது) முதலானதுகள் செய்தால் நலமுண்டு. பிற காரியங்கள் செய்வது கூடாது. *(191)*

## *தி:யாஜ்ய தோஷத்திற்கு (விதிக்கு) விலக்கு (அபவாதம்)*

சந்திரன், குருவின் அம்சத்தில் இருக்கக் குருவினால் பார்க்கப்பட்டாலும் (தியாஜ்ய) ஆசீவிஷ தோஷம் இல்லை. ஆசீவிஷம் என்பது தியாஜ்ய தோஷமாகும். *(192)*

ஒரு சுபலக்னத்திற்கு ஆரம்பத்தில் தியாஜ்யம் நேரிட்டால் அக்காலம் தவிர்த்து மற்ற பாகத்தில் சுபகர்மா செய்யலாம். லக்னத்திற்குக் கடைசிப் பகுதியில் தியாஜ்யம் ஏற்படுமானால் அந்த லக்னத்தையே தவிர்க்கவேண்டும். *(193)*

## *சுபயோகங்கள்*

பத்து வகையான சுபயோகங்கள் கூறப்படுகின்றன. நர, பத்ம, ஜீவ, க்ரஹ, தைவ, துந்துபி, புஷ்கர, ஸ்ரீமுக, மன்மத, வைஷ்ணவ எனும் பத்துவகை யோகங்களில் சுபகாரியங்கள் செய்யப்பட வேண்டும்.

## *நரயோகம்*

சூரியனும்-சந்திரனும் லக்னம் மற்றும் ஏழாமிடத்தில் இருந்து 3, 6, 11-மிடங்களில் அசுபர்களிருக்க; 8-9-12ல் சுபர்கள் இல்லமலிருக்க இப்படிப்பட்ட யோகம் நரயோகமாகும். *(195)*

## *பத்ம யோகம்*

சுக்ரனுடைய வீட்டிலோ, புதனுடைய வீட்டிலோ குரு இருந்தால், பாபிகள் 3, 6, 11ம் இடங்களில் இருந்தால் இது பத்மயோகமாகும். சுபகாரியங்களுக்கு உகந்தது. *(196)*

## *ஜீவயோகம்*

லக்னத்திற்கு மூன்றாமிடத்தில் சுக்ரனும், 5மிடத்தில் குருவும், 11ல் மற்ற கிரஹங்களும் இருந்தால் ஜீவயோகம் எனப்படும். *(197)*

## *தைவயோகம்*

லக்னத்தில் குருவும், 4மிடத்தில் சுக்ரனும், 11மிடத்தில் பாபிகளும் இருந்தால் அது தைவயோகமாகும். *(198)*

## *ஸ்தாவரயோகம்*

குருவும், சுக்ரனும் லக்னத்தில் பலமுடன் இருந்தால் அது ஸ்தாவரயோகம் எனப்படும். திருமண விஷயத்தில் இந்த யோகம் சுபமானது. *(199)*

## *புஷ்கரயோகம்*

11ம் இடத்தில் எல்லா கிரஹங்களும் இருந்து, 10மிடத்தில் சுபகிரஹம் இருந்தால் அது புஷ்கரயோகமாகும். *(200)*

## *மாஹேந்திராதியோகம்*

சித்திரை, வைகாசி மாதங்களில் சந்திரன் சுபாம்சங் களில் இருந்தால் அது மாகேந்திரயோகமாகும். *(201)*

## *பர்வதயோகம்*

செவ்வாய் லக்னத்திலும், குரு 10மிடத்திலும், சுக்ரன் 7மிடத்திலும் இருந்தால் அது பர்வதயோகமாகும். *(202)*

## *மேருயோகம்*

லக்னத்தில் குருவும், 7ல் சுக்ரனும் அவ்விருவருக்கும் இடையில் செவ்வாய் இருந்தால் மேருயோகமாகும். *(203)*

## *மந்தரயோகம்*

மேஷத்தில் சுக்ரனும், மகரத்தில் குருவும், துலாத்தில் சூரியனும் இருந்தால் அது மந்தரயோகமாகும். *(204)*

இந்த ச்லோகத்தில் ***உத்தமாங்கம்*** என்ற சொல்லால் மேஷமும், ***ஜானு*** என்ற சொல்லால் மகரமும், ***பஸ்தி*** என்ற சொல்லால் துலாமும் குறிப்பிடப்படுகிறது. *(204)*

மேஷம் முதல் மீனம் முடியவுள்ள பன்னிரெண்டு ராசிகளும் காலபுருஷனுக்கு அங்கங்களாகக் கூறப்பட்டு உள்ளன. அதனை அனுசரித்து உத்தமாங்கம் - தலை என்பது மேஷராசி, காலபுருஷனுடைய தலையாகக் கூறப்பட்டு உள்ளது. ஜானு - முழங்கால்; பஸ்தி - வயிறு) கால புருஷனுடைய அங்களாகக் கூறப்படும் 12 ராசிகளாவன :

*(1)* மேஷம் - தலை; *(2)* ரிஷபம் - முகம்; *(3)* மிதுனம் - மார்பு; *(4)* கடகம்-ஹ்ருதயம்; *(5)* சிம்மம்-வயிறு; *(7)* துலாம்-அடிவயிறு; *(8)* விருச்சிகம் - பாலுருப்பு; *(9)* தனுஸ் - துடை *(10)* மகரம் - முழங்கால் *(11)* கும்பம் - முழங்காலுக்கும் கணுக்காலுக்கும் இடைப்பட்ட பகுதி, *(12)* மீனம்-பாதங்கள். இவ்வாறு பன்னிரெண்டு ராசிகளும் காலபுருஷனுடைய தலைமுதல் பாதம் வரையிலான உறுப்புக்களாகக் கூறப்பட்டுள்ளன. *(205)*

## *ஸித்தயோகம்*

ஞாயிற்றுக்கிழமையுடன் ஹஸ்தம் நக்ஷத்திரமும், வியாழக்கிழமையுடன் பூசமும், புதனுடன் அனுஷமும், சனிக்கிழமையுடன் ரோகிணியும், திங்கட்கிழமையுடன் மிருகசீர்ஷ நக்ஷத்திரமும், வெள்ளிக்கிழமையுடன் ரேவதியும், செவ்வாய்க்கிழமையுடன் அச்வினி நக்ஷத்திரமும் கூடிவந்தால் சித்தயோகமாகும். *(206)*

## *அம்ருதயோகம்*

ஞாயிற்றுக்கிழமையுடன் மூலமும், திங்களுடன் திருவோணமும், வியாழக்கிழமையுடன் புனர்பூசமும், வெள்ளிக்கிழமையுடன் பூரமும், செவ்வாயுடன் உத்தரமும் சனிக்கிழமையுடன் ஸ்வாதியும், புதனுடன் க்ருத்திகையும், கூடிவந்தால் அம்ருதயோகமாகும். *(207)*

## தோஷ யோகங்கள்

இஷ்டானிஷ்ட யோகம், சகடயோகம், மிருத்யுயோகம், துக்காதுக்கயோகம், அதார்மிகயோகம், காலயோகம், பித்ராஸ்யயோகம், கேடயோகம் ஆகிய யோகங்கள் அசுபயோகங்களாகும். இந்த அசுப யோகங்களில் சுபகர்மாக்களை விலக்குதல்வேண்டும். *(208)*

## இஷ்டானிஷ்ட யோகம்

லக்னத்தில் குரு, 7மிடத்தில் சந்திரன் அல்லது லக்னத்தில் சந்திரன், 7மிடத்தில் குரு இருந்தால் அது இஷ்டானிஷ்ட யோகமாகும். இந்த யோகத்தில் சுபங்கள் செய்தால் கர்மாவைச் செய்பவருக்குத் தீமை. *(209)*

## சகட யோகம்

குரு 6, 8, 12ல் இருக்க, சந்திரன் சுபர்களுடன் கூடியிருந்தாலும் சகடயோகமாகும். *(210)*

***சடகயோக விதிக்கு அபவாதம் :*** சகடயோகத்திற்கு ஏற்ப இருக்கும் கிரஹங்கள் தன் வீட்டில் ஆட்சி பெற்றாலும், உச்சமாக இருந்தாலும், சுபகிரஹங்களால் பார்க்கப் பட்டாலும், சுபர்களுடன் கூடியிருந்தாலும் ஸ்ரீமந்நாராயணன் சகடாசுரனை வதம் செய்ததுபோல் சகடயோகத்தினைத் தகர்க்கிறார்கள். (சகடயோகம் விலகும் - சகடயோக பலன் ஏற்படுவதில்லை). *(211)*

## மிருத்யுயோகம்

5மிடத்தில் சனி, 7ல் சுக்ரன், 6-7ல் குரு, 9ல் செவ்வாய், 10ல் புதன், 6ல் சந்திரன், 10ல் சூரியன், 12ல் ராகு/கேது இந்தப்படி இருந்தால் அது மிருத்யுயோகமாகும். இந்த யோகம் மரண பயத்தைத் தரக்கூடியது. இந்த யோகம் எல்லா சுபகர்மாக்களிலும் விலக்கத்தக்கது. *(212)*

## துக்காதுக்கயோகம்

நான்காம் இடத்தில் அசுப கிரஹங்களும், சுபகிரஹங்களும் இருந்து, 7மிடத்தில் சுக்ரனும் இருந்தால் அது துக்க - அதுக்க யோகமாகும். இந்த யோகத்தில் சுபகர்மாக்கள் விலக்கத்தக்கவை. *(213)*

## அதார்மிகயோகம்

ஆறாமிடத்தில் சுபகிரஹங்கள் இருந்து, எட்டாம் இடத்தில் சந்திரனும், ஐந்தாமிடத்தில் மற்ற கிரஹங்களும் இருந்தால் அது அதார்மிக யோகமாகும். *(214)*

## காலயோகம்

நான்காம் இடத்தில் அசுபர்களும், 8ம் இடத்தில் பலமுள்ள சந்திரனும் இருந்தால் அது காலயோகமாகும். இந்த யோகத்தில் செய்யப்படும் சுபகர்மாக்கள் பயனற்று விடும். *(215)*

## க்கசரயோகம்

சூர்யன் இருக்கிற நக்ஷத்திரம் முதல் சந்திரன் இருக்கும் நக்ஷத்திரம்வரை எண்ணும்பொழுது ஒன்பது ஒன்பதாக எண்ணிவரும்பொழுது முதல் பர்யாயம், இரண்டாம் பர்யாயம், மூன்றாம் பர்யாயம் இம்மூன்றிலும் ஒன்பதாவது, மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது ஆகிய இந்த நான்கு நக்ஷத்திரமும் க்கசரயோகமாகும். இப்படி எண்ணப்பட்ட க்கசரயோக(முள்ள நக்ஷத்திர)த்தில் உபநயனம் செய்தால் அந்த உபநயனம் செய்யப்படும் பிள்ளைக்கும், ஸீமந்தம் செய்யின் சிசுவுக்கும் தீமையாகும். திருமணம் செய்தால் அந்த விவாஹிதமான பெண்ணுக்கும் கெடுதல் சம்பவிக்கும் யாத்திரை தொடங்கினால் மோசமான விளைவுகள் ஏற்படும். ஆதலால் க்கசரயோகத்தில் உபநயன, விவாஹாதி சுபகர்மாக்களை விலக்கவும். *(216 - 217)*

முக்ய குறிப்பு : இது விஷயத்தில் (இந்த யோக விஷயத்தில்) 1) ஜன்ம, (2) ஸம்பத், (3) விபத்து, (4) க்ஷேமம், (5) ப்ரத்யரம், (6) ஸாதகம், (7) வதம், (8) மைத்ரம், (9) பரமமைத்ரம் என்ற சாஸ்திரம் ப்ரவர்த்திக்கிறது இல்லை என்று ஏற்படுகிறது.

## லக்ன ராகு தோஷம்

விவாஹாதி லக்னத்தில் ராகுவோ-கேதுவோ இருந்தால் தம்பதிகள் முதலானவர்களுக்குக் கெடுதலாகும். *(218)*

***லக்ன ராகு தோஷத்திற்கு (விதிவிலக்கு) அபவாதம் :-*** லக்னத்திலோ, 7ஆமிடத்திலோ ராகு அல்லது கேது இருந்தால் சௌளம், உபநயனம், விவாஹம், புத்தாடை அணிகலன்கள் அணிதல் போன்ற கர்மா விஷயத்தில் தோஷத்தை (தீமை)ச் செய்யமாட்டார்கள் என்பது கருத்து. *(219)*

விவாஹ லக்னத்தில் சந்திரனும், 7ல் செவ்வாயும் இருந்தால் திருமணமான எட்டு ஆண்டுகளுக்குள் பார்தாவுக்குக் கெடுதல் ஏற்படும். *(220)*

லக்னத்தில் குருவோ, சுக்ரனோ இருந்தாலும்; லக்னத்திற்குக் குரு, சுக்ரர்களின் பார்வை ஏற்பட்டாலும் கிரஹங்களால் ஏற்படக்கூடிய தோஷங்களும், திதி-வாரம் முதலான தோஷங்களும் விலகும். *(221)*

***எம்மாதிரி லக்னம் ஏற்கத்தக்கது :*** ஒரு லக்னத்திற்கு ஏற்படக்கூடிய குணங்களையும்-தோஷங்களையும் சீர்தூக்கிப் பார்த்து குணங்கள் அதிகமாயும், தோஷம் குறைவாகவும் உள்ள லக்னத்தைத் தேர்வு செய்யவேண்டும். தோஷங்கள் அதிகமாயின் தவிர்க்கவும். (பொதுவாக சுத்தமான லக்னம் - தோஷமற்ற லக்னம் கிடைப்பது கடினம். ஏதாவது தோஷம் உள்ளதாகவே இருக்கலாம்.) அப்படி இருப்பினும் குணங்களும், தோஷங்களும் எந்த அளவு இருக்கிறது என்பதை சீர்தூக்கி ஆராய்ந்து, குணம் அதிகமானால் அந்த லக்னம் ஏற்கப்படலாம். தோஷம் அதிகம் இருப்பின் தவிர்க்கலாம். *(222)*

## *தியாஜ்ய தோஷத்திற்கு (விதிவிலக்கு) அபவாதம்*

சுக்லபக்ஷ சந்திரன் ஒரு லக்னத்திற்கு 10ம் இடத்தில் இருந்து குருவால் பார்க்கப்பட்டால் அந்த லக்னம் சுபமே. கருடன் ஸர்ப்பங்களின் விஷதோஷத்தை விலக்குவதுபோல், அந்த லக்னம் தியாஜ்யதோஷத்தால் தோஷப்பட்டாலும், அந்த தோஷம் விலகிவிடுகிறது. *(223)*

### க்ரூர கிரஹங்களும் சுபர்களாகிறார்கள்

அதிகம் சூடுள்ள நீர் குளிர்ந்த நீரின் சம்பந்தத்தால் தொடுவதற்கு ஏற்றதாக ஆவதுபோல், சுபகிரஹங்களின் பார்வைபெற்றால் அசுபகிரஹங்களும்கூட சுபபலன்களைத் தரும். (224)

### சாந்திரமானம் - ஸௌரமானம் விளக்கம்

ஒரு அமாவாசை முதல் (அமாவாசை சென்ற மறுநாள் முதல்) அடுத்த அமாவாசை முடியவுள்ள 30 நாட்களுக்குச் சாந்திரமானப்படி ஒரு மாதம் ஆகும். வளர்பிறை பிரதமையில் மாதப்பிறப்பும், தேய்பிறை அமாவாசை முடிய ஒரு மாதம் ஆகும். இது சாந்திரமானப்படிக்கு ஆகும். சூரியனின் ஸங்க்ரமணம் முதல் அடுத்த ஸங்க்ரமணம் வரையில் உள்ள காலம் ஸௌரமான மாதம் என்றும் அச்வினி முதல் ரேவதி முடியவுள்ள 27 நாட்கள் நக்ஷத்திர மாதமாகும்.

**ஒரு மாதத்தில் இரண்டு பர்வாக்கள் வந்தால் :-** "பௌர்ணமி"க்கு பர்வா என்று இங்குக் கருத்துக் கூறப்படுகிறது. "தர்ச" என்பது அமாவாசையைக் குறிப்பிடுவதாகும். ஒரு மாதத்தில் இரண்டு பௌர்ணமிகள் வந்தாலோ, இரண்டு அமாவாசை வந்தாலோ அந்த மாதத்தில் திருமணம் முதலான சுபங்கள் செய்யலாகாது. ஆனால் சைத்ர-வைசாக மாதங்களில் இரண்டு பௌர்ணமிகளோ - அமாவாசைகளோ வந்தாலும் தோஷமில்லை. (226)

### விஷயோகம்

ஞாயிற்றுக்கிழமையில் பஞ்சமி - ஹஸ்தம் சேர்ந்தாலும், திங்கட்கிழமையில் ஷஷ்டி - திருவோணம் கூடினாலும், செவ்வாய்க்கிழமையில் அச்வினி - ஸப்தமீ கூடினாலும், புதன்கிழமையில் அனுஷம் - அஷ்டமீ கூடினாலும், வியாழக் கிழமையில் திருதீயை - பூசம் கூடினாலும், வெள்ளிக் கிழமையில் நவமீ - ரேவதி கூடினாலும், சனிக்கிழமையில் ஏகாதசி - ரோகிணி கூடினாலும் இவை யாவும் விஷயோகங் களாகும். (227 - 228)

விஷயோக நிமித்தங்கள் மேலும் கூறப்படுகின்றன - திங்கட்கிழமையில் ஷஷ்டி திதியும், வெள்ளிக்கிழமையில் நவமியும், புதன்கிழமையில் துவிதீயையும், ஞாயிறில் சதுர்த்தியும், வியாழனில் அஷ்டமியும், செவ்வாய் மற்றும் சனிக்கிழமைகளில் ஸப்தமியும் கூடினால் அது குலநாசம் அளிக்கும் விஷயோகமாகும். *(229)*

## *ம்ருத்யு யோகம்*

ஞாயிறுடன் அனுஷமும், திங்களில் உத்தராடமும், செவ்வாயில் சதயமும், புதனில் அச்வினியும், வியாழனில் மிருகசீர்ஷமும், வெள்ளியில் ஆயில்யமும், சனிக்கிழமையில் ஹஸ்தமும் கூடினால் அவை ம்ருத்யு யோகங்களாகும்.

## *விநாசயோகம்*

வெள்ளிக்கிழமையில் பூசமும், வியாழக்கிழமையில் உத்தரமும், ஞாயிற்றுக்கிழமையில் விசாகமும், சனிக் கிழமையில் ரேவதியும், புதனில் அவிட்டமும், திங்கட் கிழமையில் க்ருத்திகையும், செவ்வாயில் ஆயில்யமும் கூடிவந்தால் அவை விநாசயோகங்களாகும். *(231)*

## *தக்த யோகங்கள்*

புதன்கிழமையில் துவிதீயையும், செவ்வாய்க் கிழமையில் பஞ்சமியும், வியாழனில் ஷஷ்டியும், வெள்ளிக் கிழமையில் அஷ்டமியும், திங்களில் ஏகாதசியும், சனிக்கிழமையில் நவமியும், ஞாயிறில் துவாதசியும் வந்தால் அவை தக்தயோகங்களாகும். *(232)*

## *உத்பாதயோகம்*

ஞாயிற்றுக்கிழமையில் விசாக நக்ஷத்திரமும், திங்களில் பூராடமும், செவ்வாயில் அவிட்டமும், புதனில் ரேவதியும், வியாழக்கிழமையில் ரோகிணியும், வெள்ளியில் பூசமும், சனிக்கிழமையில் உத்தரம் ஆகிய இவை உத்பாதயோகங் களாகும். *(233)*

## அசுப (விஷ)யோகத்திற்கு அபவாதங்கள்
### (விசேஷ விதிகள்)

தக்த யோகத்தில் ஆரம்ப காலத்தில் ஆறு நாழிகையும், ஜ்வாலாமுகிக்கு எட்டு நாழிகைகளும், உத்பாதயோகத்திலும், ம்ருத்யுயோகத்திலும் ஒன்பது நாழிகைகளும் விலக்கத்தக்கவை. குறிப்பிடப்பட்ட நாழிகைக்குமேல் சுபகர்மாக்களைச் செய்யலாம். (234)

குரு, தன் வீட்டில் அல்லது உச்சம், ஸ்வ அம்சம் இவற்றில் இருந்து பாப கிரஹங்களைப் பார்த்தால் ஜ்வாலாமுகீ முதலான தோஷங்கள் விலகும். (235)

### அதிகமாஸ தோஷ அபவாதம்

அதிக மாஸத்தில் சுபகர்மாக்கள் செய்யலாகாது என்பது பொதுவிதி. அந்த மாதத்தில் கிரஹம் ஏதும் உச்சமாக இருந்தால் சுபகர்மாக்களைச் செய்யலாம். (236)

**ஆசீவிஷ தோஷத்திற்கு அபவாதம் :** ரோகிணி, திருவோணம், ஹஸ்தம், மிருகசீர்ஷம், அனுஷம், பூசம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி இந்த ஒன்பது நக்ஷத்திரங்களுக்கும் ஆசீவிஷதோஷமில்லை. (237)

மேலும், கர்பாதானம், பும்ஸவனம், ஸீமந்தம், விவாஹம், சௌளம் ஆகியவற்றிற்கு ஆசீவிஷதோஷம் இல்லை. (இந்த தோஷம் பார்க்கவேண்டியதில்லை.) (238)

### பாப கிரஹ-வாரம் (கிழமை) முதலானவற்றிற்கு அபவாதம்

வார அதிபதி (ஞாயிறு முதலான கிழமைகளுக்கு அதிபதி) லக்னத்திற்கு 6, 3, 11ம் இடத்தில் இருந்தால் பாப வாரதோஷம், லக்னாதிதோஷம் கிடையாது. (239)

## வாராதி தோஷங்கள் தேசத்திற்குத் தேசம் வேறுபடும்

வங்க தேசத்தில் வாரதோஷமும், நக்ஷத்திர தோஷமும் இல்லை. மாளவ[1] தேசத்தில் கிழமைகளும் திதிகளும் விலக்கத்தக்கவையல்ல. வாரதோஷமும் திதிதோஷமும் இல்லை. கலிங்க[2] தேசத்தில் அம்சகதோஷம் இல்லை. விஷ்கம்பம் முதலான தோஷங்கள் அவந்தி[3]யில் இல்லை. கிரஹ தோஷங்கள் இருப்பின் எல்லா தேசத்திலும் எல்லா கர்மாக்களும் விலக்கத்தக்கவையே என்பது காசியபரின் கருத்து. *(240)*

நக்ஷத்திராதிகளுக்கு முடம், குருடு, ஒற்றைக்கண் எனும் தோஷங்களும், திதி-வார சூன்யங்களும், ராசி சூன்யம் -மாஸ சூன்யங்கள் முதலானவைகளும்கௌட தேசத்திலும், மகத தேசத்திலும் மட்டும் விலக்கத்தக்கவை. மற்ற தேசங்களுக்கு தோஷமில்லை. *(241)*

சந்திர - சூரிய தோஷங்கள், சூலயோகம், ஏகார்களை, அதிகமாதம் ஆகிய தோஷங்கள் சோணா நதிக்குத் தெற்கில் இல்லை. சோணா நதிக்கு வடக்கில் உள்ள தேசங்களில் இந்த தோஷங்கள் இருப்பின் சுபங்கள் விலக்கப்படும். *(242)*

## அங்குரார்ப்பணம்

திருமணம், நவராத்திரி முதலான விசேஷ வைபவங்களில் முளைவிட்ட தானியங்களை விதைப்பது வழக்கம், செய்யப்படும் கர்மாவின் பயன் சிறப்பாக இருக்க வேண்டும் என்ற கருத்தில் இந்த பாலிகையெனும் மண் பாத்திரத்தில் மண்ணை அடைத்து, அதில் முளைவந்த விதைகளை விதைப்பது வழக்கம். எல்லா சுபகாரியங்களிலுமே - எல்லா ஸம்ஸ்கார - (உபநயனம், திருமணம் முதலான கார்யங்களிலும்) வளர்ச்சியைக் கருதி இந்த அங்குரார்ப்பண விதி நடத்தப்பட வேண்டும். *(243)*

1. Malava = Name of a country (MALWA) in central India.
2. Kalinga = Name of a contry in olden days. The district on the coramandel coast extending from CUTTACK to the vicinity of Madras.
3. Avanti = Name of a country around Kashmir.

பும்ஸவனம், ஸீமந்கம், ஜாதகர்மா, அன்னப்ராசனம் (குழந்தைகளுக்கு முதலுணவு ஊட்டுதல்), உபநிஷ்க்ரமணம் (பிறந்த குழந்தையை முதன்முதல் வீட்டிற்கு வெளியில் எடுத்துச்செல்லும் ஸம்ஸ்காரம்) விரதங்கள் ஆகியவற்றில் அங்குரார்ப்பண விதி கிடையாது. *(244)*

***அங்குரமகிமை (முளைத்த விதை விதைப்பதன் பெருமை)***

அங்குரார்ப்பணம் செய்யப்படாத சுபகர்மாக்கள் யாவும் பயனற்றவையாகும். பும்ஸவனத்திலும், ஸீமந்தத்திலும் கூட அங்குரார்ப்பணம் செய்யப்படவேண்டும் என்பது ஒருசில வித்வான்களின் கருத்தாகும். *(245)*

***ஒரே நாளில் ஒரு தாய் வயிற்றில் பிறந்தோருக்குச் சுபம் செய்யலாமா?*** ஒரு தாய் வயிற்றில் பிறந்த பெண்களுக்கு ஒரே முஹூர்த்தத்தில் திருமணம் செய்யலாகாது. அது வம்ச நாசத்திற்கு ஏதுவாகும். அப்படிச் செய்தால் ஓராண்டுக்குள் தீமை ஏற்படும். ஒரு ஆற்றிற்கு அந்தப்பக்கதில் ஒரு திருமணத்தையும், இந்தப் பக்கத்தில் ஒரு திருமணத்தையும் வைத்து நடத்தத் தோஷமில்லை. *(246)*

ஒரு தாய் வயிற்றில் பிறந்தவர்களுக்கு ஓராண்டிக்குள் (ஒரே ஆண்டில்) விவாஹாதிகள் கூடாது. முதலில் ஒருவருக்கு விவாஹமும், பிறகு இன்னொருவருக்கு உபநயனமும், பிறகு இன்னொருவருக்கு சௌளமும் செய்யலாகாது. முதலில் ஒருவருக்கு சௌளமும், அடுத்து ஒருவருக்கு உபநயனமும், பிறகு இன்னொருவருக்கு விவாஹமும் செய்யலாம்.

முண்டனம் என்ற சொல் உபநயனத்தையும், மண்டனம் என்பது திருமணத்தையும் குறிக்கும். ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகளில் ஒருவருக்கு உபநயனம் செய்தபிறகு இன்னொருவருக்குத் திருமணம் செய்யலாமேயன்றி, ஒரு சகோதரனுக்குத் திருமணம் செய்துவிட்டு மற்ற சகோதரனுக்கு ஒரே ஆண்டுக்குள் உபநயனம் செய்வது கூடாது. *(247)*

ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகளில் ஆணுக்குத் திருமணம் செய்தபிறகு, ஆறு மாதங்கள் வரையில் பெண்ணுக்குத் திருமணம் செய்யலாகாது. முதலில் பெண்ணுக்குத் திருமணம் செய்துவிட்டுத்தான் ஆணுக்குத் திருமணம் செய்யவேண்டும். அதுபோலவே ஒருதாய் வயிற்றுப் பிள்ளைகளில் ஒருவருக்கு முதலில் திருமணமும், பிறகு மற்றவருக்கு உபநயனமும் செய்வது கூடாது. ஒருவருக்கு உபநயனம் செய்துவிட்டு, அதன்பிறகு மற்றவருடைய திருமணத்தை நடத்தலாம். *(248)*

மகனுடைய திருமணம் நடந்த பிறகு ஆறுமாதங்கள் வரையில் மகளுடைய திருமணம் செய்யலாகாது. அவ்விதமே திருமணத்திற்குப் பிறகு உபநயனமும்; உபநயனத்திற்குப் பிறகு சௌளமும் செய்யலாகாது. *(249)*

ஒரே நாளில் இரு திருமணங்கள் (ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகளுக்குள்) நடத்துவது சரியில்லை. 90 நாட்கள் கடந்த பிறகு செய்யலாம். அவசியம் நிர்பந்தமாகச் செய்ய வேண்டியிருந்தால் வேறு வீட்டில் வேறு ஆசார்யனைக் கொண்டு நடத்தலாம். *(250)*

ஒரு வருடத்தின் பங்குனி மாதத்தில் ஒருவனுக்குத் திருமணம் செய்துவிட்டு, அடுத்துவரும் சித்திரை மாதத்தில் அவனுடைய தம்பிக்கு உபநயனம் செய்யலாம். வருடம் மாறிவிடுவதால் ஆறு மாதங்கள்வரைத் தாமதிக்கவேண்டியது இல்லை. ஆனால் பங்குனியில் பிள்ளைக்குத் திருமணம் செய்துவிட்டு, அடுத்துவரும் சித்திரையில் பெண்ணுக்குத் திருமணம் செய்யலாகாது. 90 நாட்களுக்குமேல் பெண்ணுக்குத் திருமணம் செய்யவேண்டியது. *(251)*

## *இரண்டாம் விவாஹம் (மறுமணம்) செய்யும் விஷயம்*

ஒருவனுடைய மனைவி இறந்த நாள் முதலாக ஒரு ஆண்டிற்குள் மறுமணம் (செய்துகொள்வதானால்) செய்துகொள்ளவேண்டும். இரண்டாம் ஆண்டில் செய்யக்

கூடாது. அதற்குமேல் ஒற்றைப்பட்ட வருடத்தில் செய்யலாம். இரட்டித்த வருடத்தில் செய்யலாகாது. *(252)*

## மருமகள் கிருஹப்ரவேசம்

திருமணம் செய்த நாள் முதலாக 16 நாட்கள் வரையில் இரட்டித்த நாட்களில் மருமகளை அழைக்கவேண்டும். அதற்குமேல் ஒருவருடம் வரையில் நல்ல சுபதினத்தில் எப்போதுவேண்டுமானாலும் அழைக்கலாம். ஒரு வருடத்திற்குள் அழைக்க இயலாவிட்டால் மூன்றாவது ஐந்தாவது வருஷங்களில் அழைக்கலாம். இரண்டாவது, நான்காவது வருடங்களில் அழைக்கலாகாது. ஐந்து ஆண்டுகளுக்கு மேற்பட்டால் எப்போதுவேண்டுமானாலும் அழைக்கலாம். *(253)*

## மூத்த மகள் / மூத்தமகன் திருமண விஷயம்

பொதுவாக தலைப்பிள்ளைக்குத் தலைப்பெண்ணைத் திருமணம் செய்விக்கலாகாது. இருவரில் ஒருவர் தலைப்பிள்ளையானால் (மகனோ/மகளோ) ஆனி மாதத்திலும் திருமணம் நடத்தலாம். மூத்த மகனுக்கும், மூத்த மகளுக்கும் ஆனி மாதத்தில் திருமணம் செய்வித்தல் கூடாது என்பதுதான் சரியான பொருள். இந்த விதி ஆனி மாதத்தில் திருமணம் செய்வது தொடர்பாக இருப்பதால் தலைச்சன் பிள்ளைக்கும், தலைச்சன் பெண்ணுக்கும் திருமணம் செய்வதானால் ஆனி மாதம் தவிர வேறு மாதங்களில் செய்யலாகும். *(254)*

ஒரு தாய் வயிற்றில் பிறந்தவர்களில் ஒருவனுக்கு உபநயனம் செய்துவிட்டு இன்னொரு மகனுக்குத் திருமணம் அதே வருடத்தில் செய்யலாம். ஆனால் ஒருவருக்குத் திருமணம் செய்தபிறகு இன்னொரு மகனுக்கு உபநயனமோ, இன்னொரு மகனுக்குத் திருமணமோ அதே ஆண்டில் செய்வதானால் 90 நாட்கள் இடைவெளியில் செய்யலாம். வருடம் மாறுபட்டால் 90 நாட்களுக்குள்ளேயானாலும் உபநயனம் மட்டும் செய்யலாம். இது 247ஆவது சுலோகத்தில்

கூறப்பட்ட விதிக்கு அபவாதமாகும். ஒரே ஆண்டில் செய்வதானால் முதலில் உபநயனம், பிறகு பெண்ணுக்குத் திருமணம், அதன் பிறகு பிள்ளைக்குத் திருமணம் செய்யத் தடையில்லை. *(255)*

## *பத்துவிதப் பொருத்தங்கள்*

திருமணப் பொருத்தங்கள் பத்து வகையாகச் சொல்லப்படும். அவை 1) தினம், 2) கணம், 3) மாகேந்திரம் 4) ஸ்த்ரீதீர்க்கம், 5) யோனி, 6) ராசி, 7) ராசி அதிபதி, 8) வசியம், 9) ரஜ்ஜு, 10) வேதை என்பனவாகும். *(256 - 257)*

***தினப்பொருத்தம் :*** பெண் நக்ஷத்திரம் தொடங்கி எண்ணும்பொழுது புருஷனின் நக்ஷத்திரமும், பெண் நக்ஷத்திரமும் ஒன்றாக இருந்தால் அதற்கு ஜன்ம தாரை என்றும் (மத்யமம்), பெண் நக்ஷத்திரத்திற்கு அடுத்த நக்ஷத்திரம் புருஷ நக்ஷத்திரமானால் (அந்த இரண்டாவது நக்ஷத்திரம்) ஸம்பத் (சுபம்), 3வது விபத்து (அசுபம்), 4வது க்ஷேமம் (சுபம்), 5வது ப்ரத்யரம் (அசுபம்), 6வது ஸாதகம் (சுபம்) 7வது வதம் (அசுபம்), 8வது மைத்ரம் (சுபம்), 9வது பரமமைத்ரம் (சுபம்) என்பதாக பெண் நக்ஷத்திரம் முதல் எண்ணிக் கணக்கிடவும். 9க்குமேல் 10வது நக்ஷத்திரம் பெண் பிறந்த நக்ஷத்திரத்திற்கு அனுஜன்ம நக்ஷத்திரமாகும். (மத்யமம்) 11 வது ஸம்பத் (சுபம்), 12வது விபத்து (அசுபம்), 13வது க்ஷேமம் (சுபம்), 14வது ப்ரத்யரம் (அசுபம்), 15வது ஸாதகம் (சுபம்) 16வது வதம் (அசுபம்), 17வது மைத்ரம் (சுபம்), 18வது பரமமைத்ரம் (சுபம்), 19வது, பெண் பிறந்த நக்ஷத்திரத்திற்கு த்ரிஜன்ம நக்ஷத்திரமாகும். (மத்யமம்) 20 வது ஸம்பத் (சுபம்), 21வது விபத்து (அசுபம்), 22வது க்ஷேமம் (சுபம்), 23வது ப்ரத்யரம் (அசுபம்), 24வது ஸாதகம் (சுபம்) 25வது வதம் (அசுபம்), 26வது மைத்ரம் (சுபம்), 27வது பரமமைத்ரம் என்பதால் சுபம்தான். ஆனால் பெண் நக்ஷத்திரத்திற்கு 27வது நக்ஷத்திரமாகி ராசிமாறுபடாமல் இருக்கவேண்டும். இதுபற்றி பின்னால் விசேஷ விதிகள் உண்டு.

முக்கியக் குறிப்பு : ஆண் / பெண் ஜாதகப் பொருத்தம் பார்க்கத் தொடங்கும் முன்பாக பிறந்த தேதி, சரியான பிறந்த நேரம், (தோராயமாக 12-00, 12-15, 12-30, 12-45 என்று சொல்வது தவறு.) பிறந்த இடம், ஊர் பற்றிக் குறிப்பிட்டு அதற்கு ஏற்றவாறு சூரிய உதய நேரத்தை அறிந்துகொண்டு, ஒரேவிதமான பஞ்சாங்கம் கொண்டு கிரஹநிலை அறிந்து ஜாகதங்களைக் கணித்து தசை பாக்கி இருப்பு காணவேண்டும். இதனைச் சரியாகச் செய்யாதவரையில் திருமணப் பொருத்தம் பார்த்தல் என்பது சரியாகாது. இன்னும் ஒன்று ஆண் / பெண் நக்ஷத்திரங்களைக் கொண்டு பத்துவிதப் பொருத்தங்கள் மட்டும் பார்த்து, எட்டுப் பொருத்தங்கள் உண்டு; ஒன்பதுப் பொருத்தங்கள் உண்டு என்று சொல்லப்படுவதை நம்பிக் கொண்டு திருமணத்தை முடிவுசெய்வதும் பெரிய பிழையாக முடியக்கூடும்.

திருமணம் என்பது புனிதமான ஒரு சம்பந்தம். அதை உறுதி செய்வதற்கு பிழையில்லாத குறையில்லாத ஒரே பஞ்சாங்கம் கொண்டு, ஒரே நபரால் (தற்காலத்தில் ஒரேவகை கணினி மூலம்) கணிக்கப்பட்ட ஜாதகங்களில் உள்ள கிரஹ நிலை, கிரஹங்களின் பலம், பலக்குறைவு, உடல்நிலை, குடும்ப, சுக, புத்ர, ஆரோக்ய, களத்ர, ஆயுள், பாக்ய பாவங்களின் நிலை, தசை சந்திப்பு ஏற்படாமலிருப்பது போன்ற பல விஷயங்களை அறியவேண்டியது அவசியமாகும். பத்துவிதப் பொருத்தங்கள் என்பன இரு ஜாதகங்களுக்கும் பொருத்தம் உள்ளதா என்பதனை அறிய முதல் கட்டமாக அறிய உதவுமேயன்றி, திருமணத்தை உறுதி செய்வதற்கு உதவாது என்பது அறிவிக்கப்படுகிறது. தற்காலத்தில் கணினி கொண்டு பொருத்தம் பார்க்கப்படுவதும் சரியல்ல.

பெண்ணின் நக்ஷத்திரம் தொடங்கி, புருஷ நக்ஷத்திரம் முடிய எண்ணும்பொழுது 2, 4, 6, 8, 9வது நக்ஷத்திரமாக புருஷ நக்ஷத்திரம் வந்தால் பொருத்தம் உண்டு என்றும், ஜன்ம நக்ஷத்திரமாகில் மத்யமம் என்றும், 3, 5, 7வது நக்ஷத்திரமாகில் பொருத்தமில்லை என்றும் அறியவேண்டும் *(258)*

பெண் நக்ஷத்திரம் தொடங்கி எண்ணும்பொழுது 1வது பர்யாயத்தில் (முதல் ஒன்பது முடிய முதல் பர்யாயம் என்றும், 2வது 9 முடிய இரண்டாம் பர்யாயம் என்றும், 3வது ஒன்பது முடிய மூன்றாம் பர்யாயம் என்றும் பெயர்.) 3வது, 5வது, 7வது நக்ஷத்திரங்கள் விலக்கத்தக்கவை. இரண்டாம் பர்யாயம் என்றால் 3வது, 5வது, 7வது தாரைகளில் சில பாதங்கள் மட்டுமே விலக்கத்தக்கவை. மூன்றும் பர்யாயமாகில் வத, வைநாசிகம் மட்டும் விலக்கிப் பிறவற்றை ஏற்கலாம். (259)

***27வது நக்ஷத்திரம் :*** பெண்ணின் நக்ஷத்திரம் முதல் எண்ணிவரும்பொழுது 27வது நக்ஷத்திரமாக புருஷனின் நக்ஷத்திரம் வந்தால் அந்த நக்ஷத்திரம் ஒரே ராசியில் பெண் நக்ஷத்திரம் இருக்கும் ராசியிலேயே அமையுமானால் உத்தமம். ராசிவேறுபடுமானால் பொருத்தமில்லை என்று அறியவேண்டும். (260)

(உதாரணமாக பெண் நக்ஷத்திரம் அச்வினியாகில் ரேவதி, புருஷனின் நக்ஷத்திரமாக இருந்தால் ராசி வேறுபடுவதால் பொருத்தமில்லை என்பதாக அறியவும்.)

***வதவைநாசிகம் :*** க்ருத்திகையும் - ஆயில்யமும்; ஆயில்யமும் - ஸ்வாதியும்; சித்திரையும் - பூராடமும்; அனுஷமும் - அவிட்டமும்; அவிட்டமும் - பரணியும்; சதயமும் - கார்த்திகையும் ஒன்றுக்கொன்று 7வதாகவும், 22வதாகவும் இருக்கும். பெண்ணின் ஜன்ம நக்ஷத்திரம் தொடங்கி 7வது நக்ஷத்திரம் வதம் என்றும், பெண்ணின் ஜன்ம நக்ஷத்ர பாதம் தொடங்கி 88வது பாதம் ***வைநாசிகம்*** என்றும் சொல்லப்படுவதால் 88வது நக்ஷத்ரபாதம் ஆணின் நக்ஷத்ர பாதமானால் விலக்கத்தக்கது. ஆனால் சில வித்வான்கள் 22வது நக்ஷத்திரமே. விலக்கத்தக்கது என்று கூறுகிறார்கள். எனவே, மேலே கூறப்பட்ட நக்ஷத்திரங்கள் ஸ்த்ரீ-புருஷ நக்ஷத்ரமாகில் விலக்கத்தக்கது. திருவாதிரையும் - உத்தரமும்; பூரமும் - அனுஷமும்; பூசமும்-சித்திரையும்; வத-வைநாசிகமானாலும் சுகத்தை அளிக்கும் என்பதால் சேர்க்கத்தக்கவையே. (262)

புனர்பூசமும்-ஹஸ்தமும் சேர்க்கப்பட வம்ச விருத்தி உண்டு. கேட்டையும் சதயமும் பொருந்தாது. மிருகசீர்ஷமும்-பூரமும்; ஹஸ்தமும்-மூலமும் சேர்க்கப்பட்டால் தாரித்ரியம் ஏற்படும். *(263)*

மகம்-ரோகிணி; (ரோகிணி-மகம்) பூரட்டாதி-ரோகிணி இந்த இரட்டைகள் சேர்க்கப்பட்டால் ஸந்தான விருத்தி உண்டு. அச்வினியும், புனர்பூசமும், ஸ்வாதியும், உத்தராடமும் சேர்க்கப்பட்டால் பெண் குழந்தைகளே ஏற்படும். *(264)*

ரேவதியும்-திருவாதிரையும்; பூரமும்-மிருகசீர்ஷம், (மிருகசீர்ஷமும்-பூரமும்) சேர்க்கப்பட்டால் தம்பதி களிடையே பகை ஏற்படும். மகமும்-விசாகமும் சேர்க்கப் பட்டால் தீய குணமுள்ள பிள்ளை பிறப்பான். விசாகமும்-திருவோணமும் சேர்க்கப்படின் தம்பதிகளிடையே பகை ஏற்படும். ("ஸபத்னதா" என்ற சொல்லுக்கு சக்களத்தி என்ற பொருள் பொருத்தமற்றது). *(265)*

திருவோணமும் அச்வினியும் சேர்க்கப்படின் தம்பதிகள் பிரியலாகும். உத்தரட்டாதியும் மிருகசீர்ஷமும் கடுமையான விளைவு ஏற்படலாம் என்பதால் சேர்க்கப்படலாகாது. உத்தராடமும் ரேவதியும் சேர்க்கப்படின் சகல போகங்களும் ஏற்படும். மூலமும் பூரட்டாதியும் சேர்க்கப்பட செல்வம் விருத்தியாகும். பூராடமும் உத்திரட்டாதியும் சேர்க்கப்பட ஒருவருக்கொருவர் அன்புடன் இருப்பர். பரணியும்-பூசமும் சேர்க்கப்பட்டால் எல்லா செளபாக்யங்களும் ஏற்படும். *266½*

## *ஸ்த்ரீ-புருஷர்களுக்கு ஒரே நக்ஷத்திரமாகில் சேர்க்க உத்தமமானவை*

ரோகிணி, திருவாதிரை, மகம், விசாகம், ஹஸ்தம், திருவோணம், ரேவதி, உத்தரட்டாதி ஆகிய நக்ஷத்திரங்கள் ஸ்த்ரீ-புருஷர்களுக்கு ஏக நக்ஷத்திரமானால் சுபம். உத்தமம். *(ஆனால் தசா ஸந்திவராமலிருக்கவேண்டும்.) (267)*

பூரம், உத்தரம், பூசம், சித்திரை, புனர்பூசம், அச்வினி, கார்த்திகை, பூராடம், உத்தராடம், மிருகசீர்ஷம், அனுஷம் ஸ்தீரி-புருஷர்களுக்கு ஏக நக்ஷத்திரமானால் மத்யமம். சேர்க்கத்தக்கதே. *(268)*

பரணி, ஸ்வாதி, கேட்டை, மூலம், சதயம், அவிட்டம், பூரட்டாதி ஸ்த்ரீ-புருஷர்களுக்கு ஏக நக்ஷத்திரமாகில் விலக்கத் தக்கது. *(269)*

பூராடம், பரணி, ஆயில்யம் ஹஸ்தம், மிருகசீர்ஷம், சதயம் இந்த ஆறு நக்ஷத்திரங்களும் ஸ்த்ரீ-புருஷர்களுக்கு ஏக நக்ஷத்திரமானால் பொருத்தமுண்டு. சுபம் என்றும் கருதப்படுகிறது. (இது முன் 269வது ச்லோகத்தில் கூறப்பட்ட நக்ஷத்திரங்கள் சிலவற்றிற்கு(பரணி, ஆயில்யம், சதயம்) விரோதமாக உள்ளது.) *(270)*

ஒரு ராசியில் இரண்டு நக்ஷத்திரங்களும், ஒரே நக்ஷத்திரம் இரு ராசிகளும் வருவதுண்டு. இம்மாதிரியான கட்டத்தில், புருஷ நக்ஷத்திரம் முந்திய ராசியிலும், ஸ்த்ரீ நக்ஷத்திரம் பிந்தியராசியிலும் இருக்கவேண்டும். இதற்கு மாறாக பெண் ராசி முந்தியதாகவும், புருஷ ராசி பிந்தியதாகவும் இருக்க நேரிட்டால் விலக்கப்படவேண்டும். *(271)*

### *ஸ்த்ரீ - புருஷர்களுக்கு ஏக ராசியாகில்*

ஸ்த்ரீ-புருஷ நக்ஷத்திரங்கள் ஒரே ராசியில் வந்தால் புருஷ நக்ஷத்திரம் முந்தியதாகவும், ஸ்த்ரீ நக்ஷத்திரம் பிந்தியதாகவும் இருத்தல்வேண்டும். அதுவே சுபகரம். ஸ்த்ரீ நக்ஷத்திரம் முந்தியதாகவும், புருஷ நக்ஷத்திரம் பிந்தியதாகவும் வரின் விலக்கத்தக்கதே. *(272)*

ஸ்த்ரீ-புருஷ நக்ஷத்திரங்கள் ஏக ராசியில் உள்ளதாக வந்து, புருஷ நக்ஷத்திரம் முந்தியதாகவும், ஸ்த்ரீ நக்ஷத்திரம் பிந்தியதாகவும் வந்தாலும், பரணியும்-கார்த்திகையும்; அவிட்டமும்-சதயமும்; பூசமும் - ஆயில்யமும் சேர்க்கப்

படலாகாது. பரணி-அவிட்டம், பூசம் புருக்ஷ நக்ஷத்திர மாகவும், அவற்றிற்கு அடுத்ததாக கார்த்திகை, சதயம், ஆயில்யம், பெண் நக்ஷத்திரமாக வந்தாலும் சேர்க்கத் தக்கதல்ல. *(273)*

## *ஏக நக்ஷத்திரத்தில் பாதம் மாறுபடும்பொழுது*

மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம் முதலான ராசிகளில் சில ராசிகளில், சில நக்ஷத்திரங்களின் ஒரே பாதம் ஒரு ராசியிலும், மற்ற மூன்று பாதங்கள் வேறு ராசியிலும் இரண்டு பாதங்கள் ஒரு ராசியிலும் மற்ற இரண்டு பாதங்கள் வேறு ராசியிலும், மூன்று பாதங்களுக்கு ஒர ராசியிலும், ஒரு பாதம் வேறு ராசியிலும் இருக்கலாகிறது. ஏக நக்ஷத்திர விஷயமானால் மூன்று பாதங்கள் உள்ள நக்ஷத்திர ராசி புருஷனுடையதாகவும், ஒரு பாதம் உள்ள நக்ஷத்திரம் ராசி பெண்ணுடையதாகவும் இருத்தல்வேண்டும். இரண்டு பாதங்கள் உள்ள ராசிகள் விஷயத்திலும் முன் இரண்டு பாதங்கள் உள்ள ராசி புருஷனுடையதாகவும், பின் இரண்டு பாதங்கள் உள்ள ராசி பெண்ணுடையதாகவும் இருத்தல் வேண்டும். (உதாரணமாக கார்த்திகை - உத்தரம் - உத்தராடம் நக்ஷத்திரம் ஸ்த்ரீ புருஷ நக்ஷத்ரமாகில் பெண்ணின் ராசி ஒரு பாதம் உள்ள ராசியாகவும், மூன்று பாதங்கள் உள்ள ராசி புருஷ ராசியாகவும் இருக்கவேண்டும். மிருகசீர்ஷம்-சித்திரை - அவிட்டமாகில் (இவைகளின் இரண்டு பாதங்கள் ஒரு ராசியிலும் மற்ற இரண்டு பாதங்கள் அடுத்த ராசியிலுமாக இருக்கும்.) முன் இரண்டு பாதங்களின் உள்ள ராசி, புருஷனுடையதாகவும், பின் அரையுள்ள ராசி பெண்ணினுடையதாகவும் இருத்தல்வேண்டும். ஆண் - பெண் நக்ஷத்திர பாதம் அறியமுடியாத நிலையில் மேற்கண்ட விதத்தில் இருப்பதாகக் கருதலாம். *(274-275)*

## *நக்ஷத்திர ஆதிக்கம் உள்ளவை*

ஸ்வாதீ, மிருகசீர்ஷம், மகம், அனுஷம் இந்த நாலில் ஒன்று புருஷ நக்ஷத்திரமாகவோ ஸ்த்ரீ நக்ஷத்திரமாகவோ

இருந்தாலும், அப்படிப்பட்ட நக்ஷத்திர விஷயத்தில் பத்துவிதப் பொருத்தங்கள் இல்லாவிட்டாலும், சேர்த்துத் திருமணம் செய்யலாம். (276)

## *கணப்பொருத்தம்*

திருமணப் பொருத்தங்களில் 2வது கணப்பொருத்தம்.

**தேவகணம் :** அச்வினி, மிருகசீர்ஷம், புனர்பூசம், பூசம், ஹஸ்தம், ஸ்வாதி, அனுஷம், திருவோணம், ரேவதி இவை ஒன்பதும் நக்ஷத்திரங்களும் தேவகணமாகும். (277)

***மனுஷ்யகணம் :*** ரோஹிணி, பூரம், பூராடம், பூரட்டாதி, பரணி, திருவாதிரை, உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி ஆகிய ஒன்பது நக்ஷத்திரங்களும் மனுஷ்யகணம் ஆகும். (278)

***ராக்ஷஸகணம் :*** கார்த்திகை, மகம், ஆயில்யம், சதயம், அவிட்டம், சித்திரை, கேட்டை, மூலம் ஆகிய ஒன்பது நக்ஷத்திரங்களும் ராக்ஷஸகணமாகும். (279)

ஆண்-பெண் நக்ஷத்திர கணங்கள் ஒன்றாக இருப்பின் சுபம். ஸ்த்ரீ நக்ஷத்திரம் தேவகணமாகவும், புருஷ நக்ஷத்திரம் மனுஷ்யகணமாக இருந்தால் மத்யமம் என்று கருதப்படும். ஸ்த்ரீ நக்ஷத்திரம் ராக்ஷஸகணமாக இருந்து, புருஷ நக்ஷத்திரம் தேவகணமாக இருப்பின் பொருந்தாது, அதமம். (280)

ஸ்த்ரீ நக்ஷத்திரம் ராக்ஷஸகணமாக இருந்து, புருஷ நக்ஷத்திரம் மனுஷ்யகணமாக இருந்து திருமணமும் ஆகிவிட்டால் இருவர் நிலையும் மோசமாகப் பாதிக்கப்படலாகும் என்பதால் ராக்ஷஸகணமுள்ள பெண்ணை மனுஷ்யகணத்தைச் சேர்ந்த புருஷன் மணக்கலாகாது. (281)

***ஸ்த்ரீ ராக்ஷஸ விஷயத்தில் விதிவிலக்கு:*** புருஷன் ராக்ஷஸகணமாக இருந்து, ஸ்த்ரீ மனுஷ்ய கணமானாலும்

சேர்க்கலாம். ராக்ஷஸகணத்தைச் சேர்ந்த ஸ்த்ரீ நக்ஷத்திரத்தில் இருந்து பதிநான்கு நக்ஷத்திரங்கள் தள்ளி புருஷ நக்ஷத்திரம் இருக்குமானால் பொருத்தமுண்டு. *(282)*

ஸ்த்ரீ-புருஷ ராசி நாதர்கள் ஒருவராக இருந்தாலும், ஸ்த்ரீயின் ராசியும், புருஷ ராசியும் ஒன்றுக்கொன்று சரியாக ஏழாக இருந்தாலும்; ஸ்த்ரீ-புருஷ ராசி நாதர்கள் ஒருவருக்கு ஒருவர் மித்ரர்களாக இருந்தாலும் கணதோஷம். ராசி தோஷம், ரஜ்ஜு தோஷம் மற்றும் வேதை தோஷம் கிடையாது. ரஜ்ஜு, வேதை, கணம், ராசிப் பொருத்த விஷயத்தில் தோஷம் இருந்தாலும் திருமணம் செய்யலாம். *(283)*

ஸ்த்ரீ-புருஷ ராசி நாதர்கள் ஒருவராகவே இருப்பினும் அல்லது ஸ்த்ரீ-புருஷ ராசி நாதர்கள் ஒருவருக்கொருவர் மித்ரர்களாக இருப்பினும் ஷஷ்டாஷ்டமம் எனும் ராசி தோஷமோ, ஒன்பது-ஐந்து என்ற ராசி தோஷமோ, இரண்டு-பன்னிரெண்டு என்ற ராசி தோஷமோ, ஸ்த்ரீராக்ஷஸ கணத்தைச் சேர்ந்தவள் என்ற தோஷமோ கிடையாது. அம்மாதிரியான ஸ்த்ரீ-புருஷர்களுக்குத் திருமணம் செய்யலாம். *(284)*

## *மாஹேந்திரப் பொருத்தம்*

ஸ்த்ரீ நக்ஷத்திரம் தொடங்கி எண்ணும் பொழுது புருஷ நக்ஷத்திரம் 4, 7, 10, 13,16,19, 22, 25 ஆக வந்தால் மாஹேந்திரப் பொருத்தம் உண்டு. இப்பொருத்தம் ஸெளபாக்யம், ஆயுள் விருத்தியைத் தருவதாகும். *(285)*

## *ஸ்த்ரீதீர்க்கப் பொருத்தம்*

ஸ்த்ரீ நக்ஷத்திரம் தொடங்கி எண்ணும்பொழுது புருஷ நக்ஷத்திரம் பதிமூன்று நக்ஷத்திரங்களுக்கு மேற்பட்டதாக இருக்குமானால் ஸ்த்ரீதீர்க்கப் பொருத்தம் உண்டு. ஏழுக்கு மேற்பட்டதாக இருந்தாலும் இப்பொருத்தம் உண்டு எனச் சிலர் கருதுகிறார்கள். *(286)*

## யோனிப் பொருத்தம்

| *நக்ஷத்திரங்கள்* | *யோனி* | *நக்ஷத்திரங்கள்* | *யோனி* |
|---|---|---|---|
| அச்வினி | குதிரை | ஸ்வாதி | எருமை |
| பரணி | யானை | விசாகம் | புலி |
| க்ருத்திகை | ஆடு | அனுஷம் | மான் |
| ரோகிணி | ஸர்ப்பம் | கேட்டை | மான் |
| மிருகசீர்ஷம் | ஸர்ப்பம் | மூலம் | நாய் |
| திருவாதிரை | நாய் | பூராடம் | குரங்கு |
| புனர்பூசம் | பூனை | உத்தராடம் | கீரி |
| பூசம் | ஆடு | திருவோணம் | குரங்கு |
| ஆயில்யம் | பூனை | அவிட்டம் | சிங்கம் |
| மகம் | எலி | சதயம் | குதிரை |
| பூரம் | எலி | பூரட்டாதி | சிங்கம் |
| உத்தரம் | பசு | உத்தரட்டாதி | பசு |
| ஹஸ்தம் | எருமை | ரேவதி | யானை |
| சித்திரை | புலி | | *(287 - 290)* |

யானையும்-சிங்கமும் பகையாகும். இவ்வாறே குதிரைக்கும் எருமைக்கும் பகை, குரங்குக்கும்-ஆட்டிற்கும் பகையாம். நாய்க்கும்-மானுக்கும் பகை. பாம்புக்கும்-கீரிக்கும் பகை. பசுவிற்கும்-புலிக்கும் பகை. எலிக்கும் பூனைக்கும் கொடிய பகையாகும். *(291)*

ஸ்த்ரீ-புருஷர்களுக்கு ஒரே யோனியானால் உத்தமம். வெவ்வேறு யோனியானாலும் மத்யமம் என்பதால் சேர்க்க நலம், பொருத்தம் உண்டு. ஒரு யோனிக்கு இன்னொரு யோனி பகையானால் அதமம்; விலக்கப்படவேண்டும்.

## ராசிப்பொருத்தம்

ஸ்த்ரீ ராசிக்கு 2ம் ராசியாக புருஷனின் ராசியாகி, புருஷ ராசிக்கு 12 ஸ்த்ரீ ராசியானால் இது ***த்வி-த்வாதசம்*** எனப்படும். பொருத்தமில்லை, மரணம் சம்பவிக்கலாம். ஸ்த்ரீ ராசிக்கு

12மிடம் புருஷ ராசியாகி, புருஷ ராசிக்கு ஸ்த்ரீ ராசி இரண்டாம் ராசியாகில் உத்தமம், நீண்ட ஆயுள் உண்டு.

ஸ்த்ரீ ராசிக்கு மூன்றாவதாக புருஷ ராசியாகி, புருஷ ராசிக்கு 11வது ராசியாக ஸ்த்ரீ ராசியாக அமைந்தால் துக்கம், ஸ்த்ரீ ராசிக்கு 11வது ராசி புருஷ ராசியாகி, புருஷ ராசிக்கு மூன்றாம் ராசியாக ஸ்த்ரீ ராசி அமைந்தால் சுகம்.

ஸ்த்ரீ ராசிக்கு 4வது ராசியாக புருஷ ராசி அமைந்து, புருஷ ராசிக்கு 10வது ராசியாக ஸ்த்ரீ ராசி அமைந்தால் தாரித்ரியம். ஸ்த்ரீராசிக்கு 10வது ராசியாக புருஷ ராசிக்கு 4வது ராசியாக ஸ்த்ரீ ராசியாகில் தனவிருத்தி.

ஸ்த்ரீ ராசிக்கு 5வது ராசியாக புருஷராசி அமைந்து, புருஷ ராசிக்கு ஒன்பதாவது ராசியாக ஸ்த்ரீ ராசியாகில் அந்த தம்பதிகளுக்கு மோசமான விளைவுகள் ஏற்படும். புருஷ ராசிக்கு 5வது ராசியாக ஸ்த்ரீ ராசியானால் தீர்க்கமாங்கல்யம் உண்டு.

ஸ்த்ரீ ராசிக்கு 6வது ராசியாக புருஷராசி அமைந்து, புருஷ ராசிக்கு எட்டாவது ராசியாக ஸ்த்ரீ ராசியாகில் புத்ர பாக்யமில்லை. புருஷ ராசிக்கு 6வது ராசியாக ஸ்த்ரீ ராசியானால் ஸந்ததி விருத்தி, புத்ர லாபம், உத்தமம்.

ஸ்த்ரீ ராசிக்கு புருஷ ராசி 7வது ராசியாயின், புருஷ ராசிக்கு ஸ்த்ரீ ராசி 7வது ராசியாக இருக்கும். இவ்வாறு இருந்தால் மிக உத்தமம். இது ***ஸமஸப்தமம்*** என்று சுருக்கமாக வழக்கில் உள்ளது *(293 - 295)*

மீனம் முதலான இரட்டித்த ராசி ஸ்த்ரீ ராசியாக இருந்து, புருஷ ராசி ஓஜ ராசியான மேஷம் முதலான ஒற்றைப்படை ராசியாக இருந்தால்2-12 (த்வி-த்வாதசம்) என்ற தோஷம் இல்லை. மேஷம் முதலான ஒற்றைப்படை ராசி ஸ்த்ரீ ராசியாகி ரிஷபம் முதலான இரட்டித் ராசி புருஷ ராசியாயின் பொருத்தப்படாது; தோஷமே. *(296)*

ஸ்த்ரீ ராசி மேஷமாகி, புருஷ ராசி சிம்மமானாலும், ஸ்த்ரீ ராசி கடகமாகி, புருஷ ராசி விருச்சிகமானாலும் 5-9 என்ற தோஷமில்லை. இந்த இரண்டு ராசிகள் விஷயத்தில் மட்டுமே இந்த விதிவிலக்கு. இதுபோல **ஸமஸப்தமம்** பொதுவாக சுபம் என்றாலும்; கும்பம்-சிம்மம் ஸமஸப்தமமானாலும், மகரம்-கடகம் ஸமஸப்தமம் ஆனாலும் பொருத்தமில்லை. ஸமஸப்தமப் பொருத்தம் என்பது இந்த இரண்டு ராசி விஷயத்தில் கிடையது. (297)

மேஷம் ஸ்த்ரீ ராசியாகி, கன்னி புருஷ ராசியானால் 6 x 8 ஷஷ்டாஷ்டகம் அல்லவா? ஆனாலும் இவ்வகையான 6 x 8 ராசி நிலை சுப ஷஷ்டாஷ்டகம் எனப்படுகிறது. இதுபோலவே தனுஸ் ஸ்த்ரீ ராசியாசியாகி ரிஷபம் புருஷ ராசியானாலும், துலாம் ஸ்த்ரீ ராசியாகி மீனம் புருஷ ராசியானாலும், கும்பம் ஸ்த்ரீ ராசியாகி கடகம் புருஷ ராசியானாலும் , சிம்மம் ஸ்த்ரீ ராசியாகி மகரம் புருஷ ராசியானாலும், மிதுனம் ஸ்த்ரீ ராசியாகி விருச்சிகம் புருஷ ராசியானாலும் ஷஷ்டாஷ்டக தோஷமில்லை என்று சொல்லப்படுகிறது. (இவ்விஷயத்தில் இந்த சுபத்தன்மையை பலரும் ஒப்புக்கொள்கிறதில்லை. அனுபவத்திலும் தம்பதிகளிடையே ஒற்றுமைக் குறைவைச் செய்யவே செய்கிறது என்பதால் ஷஷ்டாஷ்டகம் என்று அமைந்து விட்டால் அது சுபமோ, அசுபமோ -சுகப்படுவதில்லை என்பது வித்வான்களின் கருத்தாகும். (298)

## *ராசி அதிபதிப் பொருத்தம்*

இவ்விஷயத்தில் ஜ்யோதிஷ சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கும் கிரஹங்களின் சத்ரு-மித்ர பாவத்திற்கும், விவாஹ விஷயமாகக் கூறப்படும் கிரஹங்களின் சத்ரு-மித்ர பாவத்திற்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. ஜ்யோதிஸ் சாஸ்திரப்படிக்கான கிரஹங்களின் நைஸர்கிக சத்ரு-மித்ர பாவத்தைக் கொண்டு இந்தப் பொருத்தம் காண்பது சரியாகிறதில்லை. இதன்படிக்குத் திருமண விஷயத்தில் கிரஹங்களின் சத்ரு-மித்ர பாவம் பின்வருமாறு :

மேஷராசி - விருச்சிக ராசிகளுக்குக்கு அதிபதி செவ்வாய். அவருக்கு சுக்ரனும், புதனும் மித்ரர்கள். (ஜ்யோதிஷ சாஸ்திரப்படி செவ்வாயும், புதனும் பரம சத்ருக்கள்) மற்ற கிரஹங்கள் சத்ருக்கள். ரிஷபத்திற்கும் - துலாத்திற்கும் அதிபதி சுக்ரன். அவருக்கு சூரிய, சந்திரர்கள் சத்ருக்கள், மற்றவர்கள் மித்ரர்கள். மிதுனத்திற்கும் - கன்னிக்கும் அதிபதி புதன். அவருக்கு சூரியன் ஒருவரே சத்ரு, மற்றவர்கள் மித்ரர்கள். கடகத்திற்கு அதிபதி சந்திரன். அவருக்குக் குருவும், புதனும் மித்ரர்கள். மற்றவர்கள் பகைவர்கள். சிம்மத்திற்கு அதிபதி சூரியன். அவருக்கு குரு ஒருவரே மித்ரர், மற்ற கிரஹங்கள் பகைவர். தனுஸ் ராசிக்கும் - மீன ராசிக்கும் அதிபதி குரு. அவருக்குச் செவ்வாய் சத்ரு, மற்றவர்கள் மித்ரர்கள். மகர - கும்ப ராசிகளுக்கு சனி அதிபதி. அவருக்குக் குரு சத்ரு, மற்றவர்கள் மித்ரர்கள். இந்தப்படிக்குத் திருமணப் பொருத்தம் விஷயத்தில் சத்ரு-மித்ரபாவம் காணவேண்டும். *(299-302)*

### *வசியப் பொருத்தம் (பெண் ராசி முதல் காணவும்)*

| *ராசி (ஸ்த்ரீராசி)* | *வசிய ராசிகள் (புருஷ ராசி)* |
|---|---|
| மேஷத்திற்கு | சிம்மமும் - விருச்சிகமும் |
| ரிஷபத்திற்கு | கடகமும் - துலாமும் |
| மிதுனத்திற்கு | கன்னி |
| கடகத்திற்கு | விருச்சிகமும் - தனுஸூம் |
| சிம்மத்திற்கு | துலாம் |
| கன்னிக்கு | மிதுனம் - மீனம் |
| துலாத்திற்கு | மகரம் |
| விருச்சிகத்திற்கு | கடகமும் - கன்னியும் |
| தனுஸூக்கு | மீனம் |
| மகரத்திற்கு | மேஷமும் - கும்பமும் |
| கும்பத்திற்கு | மேஷம் |
| மீனத்திற்கு | மகரம் |

ஸ்த்ரீ ராசிக்கு வச்ய ராசியாகப் புருஷ ராசி அமைந்தால் சுபம். இல்லையேல் வசியப் பொருத்தம் இல்லை என்று காணவும். *(303 - 305)*

### *ரஜ்ஜுப் பொருத்தம்*

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ***சிரோரஜ்ஜு*** | மிருக | | சித்திரை | | ஆவிட்டம் | |
| ***கண்டரஜ்ஜு*** | ரோகி | திரு↓ | ஹஸ் | ஸ்வா↓ | திரு | சத↓ |
| ***நாபிரஜ்ஜு*** | கார் | புனர் | உத்-ம் | விசா | உத்ரா | பூர-தி |
| ***ஊருரஜ்ஜு*** | பர | பூச | பூரம் | அனு | பூரா | உத்-தி |
| ***பாதரஜ்ஜு*** | அச்↑ | ஆயி | மக↑ | கேட் | மூல↑ | ரேவ |

சிரஸ் = தலை. கண்ட = கழுத்து. நாபி = தொப்பூழ். ஊரு = தொடை. பாதம் = கால்.

ஸ்த்ரீ-புருஷ நக்ஷத்திரங்கள் ஒரே கோட்டில் (படுக்கைக் கோட்டில்) வந்தால் ரஜ்ஜுப்பொருத்தம் இல்லை. (இருவருக்கும் நெருக்கம் இல்லை - இருக்காது என்பது கருத்து.) ஸ்த்ரீ-புருஷ நக்ஷத்திரங்கள் ஒரே நேர்க்கோட்டில் இல்லாமல் வேறுவேறு ரஜ்ஜுவாக இருந்து ஏறுமுகமாக இருந்தால் உத்தமம். இரு நக்ஷத்திரங்களும் இறங்குமுகமாக இருந்தால் ஸ்த்ரீநாசம். ஒன்று ஏறுமுகமாகவும் மற்றது இறங்குமுகமாக இருந்தாலும் உத்தமம்தான். இந்த மூன்று விதத்திலும் ஒரே நேர்கோட்டில் ஏக ரஜ்ஜுவில் ஸ்த்ரீ- புருஷ நக்ஷத்திரங்கள் இருக்கலாகாது.

***ரஜ்ஜுவினால் ஏற்படும் பலன்கள் :*** இருவருக்கும் சிரஸ் ரஜ்ஜுவாகில் புருஷனுக்கு ஆகாது. கண்ட ரஜ்ஜுவாகில் பெண்ணுக்கு ஆகாது. நாபி (தொப்பூழ்) ரஜ்ஜுவாகில் சந்ததி ஏற்படாமல் செய்யும். தொடை ரஜ்ஜுவாகில் செல்வத்தை அழிகும். பாத ரஜ்ஜுவாகில் அதிகம் அலைச்சலைக் கொடுக்கும். வெளியூரில் தங்கியிருக்கலாகும்.

### பத்துப் பொருத்தங்களில் முக்கியமானவை

தினப்பொருத்தம், கணப்பொருத்தம், யோனிப்பொருத்தம், ராசிப்பொருத்தம், ரஜ்ஜுப்பொருத்தம் ஆகிய ஐந்தும் முக்கியமானவை. அவற்றுள் தினப் பொருத்தமும், ரஜ்ஜுப் பொருத்தமும் இருந்தாகவேண்டும். *306 - 309*

### வேதைப் பொருத்தம்

மிருகசீர்ஷம், சித்திரை, அவிட்டம் இவை ஒன்றுக்கொன்று வேதையாகும். அச்வினிக்கு 18வது நக்ஷத்திரமும் (கேட்டையும்), பரணிக்கு 16வது நக்ஷத்திரமும் (அனுஷமும்), கார்த்திகைக்கு 14வது நக்ஷத்திரமும் (விசாகமும்), ரோகிணிக்கு 12வதும் (ஸ்வாதியும்) பரஸ்பரம் (ஒன்றுக்கொன்று) வேதையாகும். மருகசீர்ஷத்திற்குச் சொல்லப்பட்டது. திருவாதிரைக்கு 18வது நக்ஷத்திரமும், அவிட்டமும் (அச்வினி-கேட்டைபோல் 18வது நக்ஷத்திரமும்), புனர்பூசத்திற்கு 16வது நக்ஷத்திரமும் (திருவோணமும்) வேதையாகும். பூசத்திற்கு 14வது நக்ஷத்திரம் (உத்தராடமும்), ஆயில்யத்திற்கு 12வது நக்ஷத்திரமும் (பூராடமும்) வேதையாகும். மகம் முதல் நான்கும், அச்வினி முதல் நான்கு போலவும், ஸ்வாதி முதல் நான்கும், மூலம் முதல் நான்கும், சதயம் முதல் நான்கும் அச்வினி முதலாகக் கூறப்பட்டவாறு 18, 16, 14, 12ம் நக்ஷத்திரங்கள் வேதையாகும். வேதையுள்ள நக்ஷத்திரங்களாகில் பொருந்தாது. வேதையில்லாதிருந்தால் பொருத்தம் உண்டு. *(310)*

யார்யாருக்கு எந்தப் பொருத்தம் முக்கியமானது : தினப் பொருத்தம் அந்தணர்களுக்கு முக்யமாக இருந்தாக வேண்டிய பொருத்தமாகும். க்ஷத்திரிய மரபினருக்கு கணப்பொருத்தம் இருந்தாகவேண்டும். வைசியர்களுக்கு ராசிப் பொருத்தமும், மற்றவர்களுக்கு யோனிப் பொருத்தமும் இருந்தே ஆகவேண்டும். *(311)*

கூறப்பட்ட பத்துவிதப் பொருத்தங்களில் ஐந்துக்குமேல் இருப்பின் திருமணம் செய்யலாம். ஐந்து பொருத்தம்

இருந்தாலும்கூட சகுனத்தைப் பார்த்துக்கொண்டு அனுகூல மானால் திருமணம் செய்யலாம். *(312)*

***மனப்பொருத்தம் பற்றி :*** திருமணத்திற்குப் பொருத்தம் காணும் விஷயத்தில் மணமகன்-மணமகள் இருவருக்கும், அவர்களின் பெற்றோருடையவும் மனப்பொருத்தம் முதலிலும், பின்னர் தசவிதப்பொருத்தமும், அதற்குப் பின்னர் சகுனம் முதலான நிமித்தங்களைப் பார்த்தும் திருமணம் செய்ய நலம். *(313)*

உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, ஹஸ்தம், மிருகசீர்ஷம், ஸ்வாதி, மகம், அனுஷம் ஆகிய இந்த எட்டு நக்ஷத்திரங்களுக்கும்; 3வது, 5வது, 7வது தாரை என்ற தோஷம் இல்லை. வதை நாசிக தோஷமும் இல்லை.

***நக்ஷத்திரங்களில் ஆண், பெண், அலிகளாவன :*** ஹஸ்தம்-புனர்பூசம்-திருவோணம்-அபிஜித்-பூசம்-அனுஷம்-அச்வனி, பூரட்டாதி, உத்தரட்டாதி ஆகிய ஒன்பது நக்ஷத்திரங்களும் புருஷ நக்ஷத்திரங்களாகும். மூலம்-மிருகசீர்ஷம்-சதயம் ஆகிய இம்மூன்றும் நபும்ஸக (அலி) நக்ஷத்திரமாகும். மற்றவையான பரணி, கார்த்திகை, ரோகிணி, திருவாதிரை, ஆயில்யம், மகம், பூரம், உத்தரம், சித்திரை, ஸ்வாதி, விசாகம், கேட்டை, பூராடம், அவிட்டம், ரேவதி ஆகியவை பெண் நக்ஷத்திரங்களாகும். *(317)*

திருமணப் பொருத்தம் விஷயத்தில் மணமகன் புருஷ நக்ஷத்திரமாகவும், மணமகள் பெண் நக்ஷத்திரமாகவும் இருப்பின் பொருத்தம் உத்தமம். மணமகன் பெண் நக்ஷத்திரமாகவும், மணமகள் ஆண் நக்ஷத்திரமாகவும் இருப்பின் அதமம். இரண்டில் ஒன்று நபும்ஸகமாயின் மத்யமம் என்று சொல்லப்படுகிறது. *(318)*

### *ராசிகளின் வர்ணங்கள்*

கடகம், மீனம், விருச்சிகம் ஆகிய மூன்றும் ப்ராம்மண ராசி என்றும், சிம்மம், தனுசு, துலாம் இம்மூன்றும் க்ஷத்திரய

ராசிகள் என்றும், ரிஷபம், கும்பம், கன்னி இம்மூன்றும் வைச்ய ராசிகள் என்றும், மற்ற ராசிகள் மற்றவர்களுடையவையாகும். *(319)*

கடகம்-மீனம்-விருச்சிக ராசிப் பெண்ணை மற்ற ராசியைச் சேர்ந்த மணமகன் மணப்பது கூடாது. சிம்ம-தனுஸ்-துலா ராசியைச் சேர்ந்த மணமகளை ரிஷப-கும்ப-கன்னி ராசியைச் சேர்ந்த மணமகன் மணப்பதும் கூடாது. ரிஷப-கும்ப-கன்னியைச் சேர்ந்த மணமக்களை மேஷ-மகர-மிதுன ராசியைச் சேர்ந்த மணமகன் மணப்பது கூடாது. *(320)*

***தோஷமுற்ற நக்ஷத்திரங்களைப் பற்றி :*** மூலம், ஆயில்யம், கேட்டை, விசாகம் 4ம் பாதம் இந்த நான்கு நக்ஷத்திரமும் மணமகனுடைய நக்ஷத்திரமாக இருந்தால் திருமணத்தில் தோஷம் இல்லை, சுபமே. கூறப்பட்ட நக்ஷத்திரங்கள் பெண் நக்ஷத்திரமாக இருந்தால்தான் தோஷமாகும். *(321)*

பெண்ணுக்கு மூலம் முதல் பாதமானால் மாமனாருக்கு தோஷம். ஆயில்யம் முதல் பாதம் பெண் நக்ஷத்திரமானால் மாமியாருக்கு ஆகாது. கேட்டை முதல் பாதம் பெண் நக்ஷத்திரமானால் மணமகனுடைய தமையனுக்குத் தோஷம். விசாக நக்ஷத்திரம் 4ம் பாதம் பெண் நக்ஷத்திரமானால் மணமகளின் இளைய மைத்துனருக்குத் தோஷமாகும். (ஆதலின் மூல நக்ஷத்திரப் பெண்ணை, தந்தையில்லாத மணமகனுக்கும், ஆயில்ய நக்ஷத்திரப் பெண்ணை தாயில்லாத மணமகனுக்கும், கேட்டை நக்ஷத்திரப் பெண்ணை மூத்த மகனாக இருக்கும் மணமகனுக்கோ அல்லது ஒரே பையனாக உள்ள (தமையன்/தம்பியில்லாத) மணமகனுக்கும், விருச்சிக ராசியிலுள்ள விசாக நக்ஷத்திரம் 4ம் பாதத்தில் பிறந்த மணமகளை ஒரே பிள்ளையாக உள்ளவனுக்கோ அல்லது தம்பியில்லாத கடைசி பிள்ளையாகப் பிறந்த மணமகனுக்கோ திருமணம் செய்விக்க பிரச்னை ஏற்படாது. *(322)*

***பத்துவிதப் பொருத்தங்களின் பலாபலன்கள் :*** தினப் பொருத்தத்தினால் நீண்ட ஆயுளும், குறைவற்ற ஆரோக்கியமும்; கணப்பொருத்தத்தினால் ஸௌபாக்யமும்; மாகேந்திரப் பொருத்தத்தினால் புத்ரஸந்ததி விருத்தியும்; ஸ்த்ரீ தீர்க்கத்தால் ஸகல சம்பத்துக்களும்; யோனிப் பொருத்தத்தால் தம்பதிகளுக்குள் பரஸ்பரம் ஒற்றுமையும்; ராசிப் பொருத்தத்தினால் வம்ச விருத்தியும்; ராசியதிபதியால் ஸந்தான விருத்தியும், வச்யப் பொருத்தத்தினால் தம்பதிகளுக்குள் ஒருவருக்கு ஒருவர் ப்ரேமையும்; ரஜ்ஜுப் பொருத்தத்தினால் மாங்கல்ய விருத்தியும், வேதைப் பொருத்தத்தினால் கவலைகள் விலகி மகிழ்ச்சி ஏற்படுதலும் பலன்களாகும். *(323 - 324)*

## *சந்திராஷ்டமம்*

சந்திரன் ஒருவருடைய ஜன்ம ராசிக்கு எட்டாம் ராசியில் சஞ்சரிக்கும் காலம் (சுமார் 2 ¼ நாட்கள்) அவருக்குச் சந்திராஷ்டம தினங்களாகும். அந்த நாட்களில் சுபகார்யங்களைத் தவிர்ப்பது நல்லது. *(325)*

## *தாராபலம் - சந்திரபலம் இவற்றிற்கு உரிய காலம்*

கிருஷ்ணபக்ஷத்தில் (தேய்பிறையில் - தாரைகளுக்கு பலம் உண்டு. சுக்லபக்ஷத்தில் (வளர்பிறையில்) சந்திரனுக்கு பலம் உண்டு. ஆதலால் சந்திர - தாரா பலம் உள்ள நாட்களில் சுபகாரியங்களைச் செய்யவேண்டும். *(326)*

## ***பக்ஷச்சித்ரை***

வளர்பிறை - தேய்பிறை இரண்டிலுமுள்ள த்விதீயை, தசமீ இரண்டைத் தவிர மீதமுள்ள இரட்டித்த திதிகளான சதுர்த்தி, ஷஷ்டி, அஷ்டமீ, துவாதசி, சதுர்தசி, இந்த ஐந்து நாட்களும் பக்ஷச்சித்ரை என்று பெயர். *(327)*

## நந்தை முதலான திதிகள்

வளர்பிறை - தேய்பிறை ஆகிய இருபக்ஷங்களிலும் (பக்ஷம் என்பது 15 தினங்கள் அடங்கிய காலமாகும்.) உள்ள பிரதமை - நந்தை, த்விதீயை-பத்ரை, த்ருதீயை - ஜயா, சதுர்த்தி - ரிக்தை, பஞ்சமீ - பூர்ணை, ஷஷ்டி-நந்தை, ஸப்தமி-பத்ரை, அஷ்டமீ-ஜயா, நவமீ - ரிக்தை, தசமீ - பூர்ணை, ஏகாதசி - நந்தை, த்வாதசி - பத்ரை, திரயோதசி - ஜயா, சதுர்தசி - ரிக்தை, பௌர்ணமி அல்லது அமாவாஸை- பூர்ணை என்று அறிக. *(328)*

## ஊர்த்வமுக (மேல்நோக்கு) அதோமுக (கீழ்நோக்கு) தினங்கள்

***ஊர்த்தவமுக (மேல்நோக்கு) நாட்கள்:*** திருவோணம், அவிட்டம், சதயம் ஆகிய நாட்களும்; உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, ரோகிணி, பூசம், திருவாதிரை ஆகிய ஒன்பதும் மேல்நோக்கு (ஊர்த்வமுக) நக்ஷத்திரங்களாகும்.

***அதோமுக (கீழ்நோக்கு) நாட்கள் :*** கிருத்திகை, விசாகம், பரணி, மூலம், மகம், பூரம், பூராடம், பூரட்டாதி, ஆயில்யம் ஆகிய ஒன்பதும் கீழ்நோக்கு (அதோமுக) நக்ஷத்திரங்களாகும்.

***திர்யங்முக (குறுக்குநோக்குடைய) நாட்கள்:*** மேலே சொல்லப்பட்டவை தவிர மீதமுள்ள அச்வினி, மிருகசீர்ஷம், புனர்பூசம், ஹஸ்தம், சித்திரை, ஸ்வாதி, அனுஷம், கேட்டை, ரேவதி ஆகிய ஒன்பது நக்ஷத்திரங்களும் குறுக்கு நோக்குள்ள (திர்யங்முக) நக்ஷத்திரங்களாகும். *(329)*

கீழ்நோக்கு நாட்கள் (நக்ஷத்திரங்கள்) தீமையானவை. காரியக்கேடு ஏற்படும். மேல்நோக்கு நாட்களில் (நக்ஷத்திரங்களில்) ஸர்வமங்களமும் ஏற்படுமாதலின் மேல்நோக்கு நாட்களில் சுபகாரியங்களைச் செய்வது நல்லது. குறுக்குநோக்குள்ள நாட்களில் செய்தால் தனதான்ய நாசம் ஏற்படும். *(330)*

### அதோமுகம் முதலான நக்ஷத்திரங்களில் செய்யத்தக்கவை:

மூலம், க்ருத்திகை, மகம், விசாகம், பரணி, ஆயில்யம், பூரம், பூராடம், பூரட்டாதி ஆகிய கீழ்நோக்குள்ள ஒன்பது நக்ஷத்திரங்களில் துரவு, கிணறு, ஏரி, அகிழ் முதலியன வெட்டுதல்; வீட்டிற்கான அஸ்திவாரம் தோண்டுதல், சூதாட்டம் ஆடுதல், கணக்குப் பார்த்தல் (Auditng), சுரங்கம் முதலான அமைத்தல் போன்றவை செய்யலாம், நற்பயன் ஏற்படும். *(331)*

### குறுக்கு நோக்குள்ள (திர்யங்முக) நக்ஷத்திரங்களில் செய்யத்தக்கவை:

கேட்டை, பூனர்பூசம், ஹஸ்தம், அச்வினி, மிருகசீர்ஷம், ரேவதி, அனுஷம், ஸ்வாதி, சித்திரை ஆகிய திர்யங்முக நக்ஷத்திரங்களில் யானை, குதிரை, பசுக்கள் ஆகியவற்றை வாங்கவும்-விற்கவும்-மேய்க்கவும் (மேய்க்க வெளியிடத்திற்கு அனுப்பவும்)-ஏற்றம் போடுதல்-தற்காலத்தில் மோட்டார் இஞ்சின் அமைக்கவும்- வாய்க்கால் வெட்டி தண்ணீர் பாய்ச்சுவதற்கான பாத்திகள் அமைக்கவும், குளம் தூர் எடுக்கவும், ஏர் பிடிக்கவும், வாசல்கால் (தூண்) அமைக்கவும் நல்லது. *(332)*

### ஊர்த்தவமுகம் (மேல்நோக்குள்ள) நக்ஷத்திரங்களில் செய்யத்தக்கவை:

பூசம், திருவாதிரை, திருவோணம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, சதயம், ரோகிணி, அவிட்டம் ஆகிய ஒன்பது மேல்நோக்குள்ள நக்ஷத்திரங்களில் வீட்டின் அல்லது மாளிகையின் மேல்தளம் அமைக்க, மேல்நோக்கான சுவர் எழுப்ப, மதில் சுவர் அமைக்க, கொடிமரம் (கோயில் துவஜஸ்தம்பம்) அமைக்க, யானை, குதிரை, பசுக்களுக்கான கொட்டகைப் பந்தல் அமைக்க, கோபுரம், வாசல் திண்ணை. தோட்டம் (Park), அமைக்க, இக்காலப்படி அமைச்சர்கள்

நிர்வாகஸ்தர்கள் பதவி ஏற்று உரிய இடத்தில் அமர பொறுப்பு ஏற்றுக்கொள்ள நல்லவையாகும். *(333)*

### *சரம் - ஸ்திரம் - உபயம் எனும் ராசி வகைகள்*

மேஷம் முதலாகவுள்ள பன்னிரெண்டு ராசிகளும் மூன்று ராசிகளாக முறையே சரம் - ஸ்திரம் - உபயம் என்றவாறு மீனம் வரையில் எண்ணவேண்டும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மேஷம் | சரம் | ரிஷபம் | ஸ்திரம் | மிதுனம் | உபயம் |
| கடகம் | சரம் | சிம்மம் | ஸ்திரம் | கன்னி | உபயம் |
| துலாம் | சரம் | விருச்சிகம் | ஸ்திரம் | தனுஸ் | உபயம் |
| மகரம் | சரம் | கும்பம் | ஸ்திரம் | மீனம் | உபயம் |

இவ்வாறே மீனம் முதலாக கும்பம் முடிய கர்பம் - த்வாரம் - பாஹ்யகம் என்று மூன்று மூன்றாக எண்ணிக் காணவும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மீனம் | கர்பம் | மேஷம் | த்வாரம் | ரிஷபம் | பாஹ்யம் |
| மிதுனம் | கர்பம் | கடகம் | த்வாரம் | சிம்மம் | பாஹ்யம் |
| கன்னி | கர்பம் | துலாம் | த்வாரம் | விருச்சிகம் | பாஹ்யம் |
| தனுஸ் | கர்பம் | மகரம் | த்வாரம் | கும்பம் | பாஹ்யம் |

### *ஷடசீதி*

ஒரு ராசியை முப்பது பாகமாக்கி அதில் சில அம்சங்கள் ஷடசீதிமுகம் எனப்படுகிறது. சரராசியில் சூரியனுக்கு 5ம் பாகமும், ஸ்திரராசியில் 7ம் பாகமும், உபயராசியில் 9ம் பாகமும் ஷடசீதிமுகம் என்று அறியவும். ஷடசீதிமுகத்தில் 60 நாழிகை சுபகாரியங்கள் செய்யப்படலாகாது.

சித்திரை மாதத்தை 30 பாகமாக்கினால் அதில் 5ம் பாகம் அதாவது ஐந்தாம் தேதி ஷடசீதிமுகம். வைகாசி 7ம் தேதி, ஆனி 9ம் தேதி, ஆடி 5ம் தேதி, ஆவணி 7ம் தேதி, புரட்டாசி 9ம் தேதி, ஐப்பசி 5ம் தேதி, கார்த்திகை 7ம் தேதி, மார்கழி 9ம் தேதி, தை 5ம் தேதி, மாசி 7ம் தேதி, பங்குனி 9ம் தேதி ஷடசீதிமுகம். *(335)*

## *தாராபல தோஷ பரிஹாரம்*

சூரியன், குரு இவர்கள் உபசய ஸ்தானத்திலிருந்தாலும், சுக்ரனோ, சந்திரனோ த்ரிகோண கேந்திரங்களில் இருந்தாலும் தாராபலமில்லையானாலும் அதாவது விபத்து, ப்ரத்யரம், வதம், வைநாசிகம், ஜன்மத்ரயம் என்ற தோஷங்களைப் போக்குவர். *(336)*

ஜன்ம நக்ஷத்திரத்தில் 10 நாழிகைகளையும், அனுஜன்மத்தில் 7 நாழிகைகளையும், ஆதானத்தில் (த்ரிஜன்மத்தில்) 8 நாழிகைகளையும் விலக்கி மற்ற நேரங்கள் சுபமானவையே. குறிப்பிட்டுள்ள நாழிகைகள் தவிர பிற நேரங்களில் சுபகர்மாக்களைச் செய்யலாம். *(337)*

## *ஜன்மத்ரயம் - விபத் விஷயத்தில் பரிஹாரம்*

தவிர்க்கமுடியாத நிலையில் ஏதேனும் சுபகர்மாவை ஜன்மத்ரயத்தில் அல்லது விபத்துத் தாரையில் அல்லது ப்ரத்யரத் தாரையில் அல்லது வதைதாரையில் செய்ய நேரிட்டால் தானத்தினால் தோஷ பரிஹாரம் ஏற்படும் எனறு கூறப்படுகிறது.

ஜன்மத்ரயத்திற்கு வெல்லமும், விபத்தாரைக்கு ஆடு, ப்ரத்யரத்தாரைக்கு உப்பு, வதைதாரைக்கு ஸ்வர்ணம் தானம் செய்தால் தோஷமில்லை. இந்த தானங்கள் செய்தால் அல்லது செய்துவிட்டு ஜன்மாதிகளில் சுபகர்மங்களைச் செய்யலாம் என்று பொருள் கொள்ளலாகாது. இது ஸங்கட விஷயத்தில் மேற்கொள்ளவேண்டியதாகக் கருதவேண்டும். *(338)*

## *ஜன்மத்ரயங்களில் செய்யக்கூடாதது*

ஒருவர் சொந்தமுறையில் கோயில் அமைத்து தேவதா பிரதிஷ்டை செய்ய எண்ணும்போதும், மந்த்ரதீக்ஷை பெற்று மேரு, ஸ்ரீசக்ராதி ப்ரதிஷ்டை செய்ய எண்ணும்போதும் மற்றும் பஞ்சாயதன பூஜை ஸ்வீகரிக்கும்பொழுதும், ஜன்ம-

அனுஜன்ம-த்ரிஜன்ம நக்ஷத்திரங்களில் செய்யலாகாது. அது அசுபம். ஜன்மத்ரயத்தை மட்டும் வர்ஜித்திருப்பதால் விபத்து, ப்ரத்யரதாரை முதலானதுகளில் பிரதிஷ்டை செய்வதில் தோஷமில்லை என்று ஆகிறது. *(339)*

### *விபத்து முதலான தோஷங்களில்லாத நக்ஷத்திரங்கள்*

உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, ஹஸ்தம், ஸ்வாதி, மிருகசீர்ஷம், அனுஷம் ஆகிய ஏழு நக்ஷத்திரங்களுக்கு விபத்து, ப்ரத்யரம், வதம் முதலான தோஷங்கள் இல்லை. *(340)*

### *திருமண விஷயத்தில் பிறந்த நக்ஷத்ரம் தெரியாதபோது*

மணமகன் - மணமகள் இருவருடைய பிறந்த நக்ஷத்திரம் தெரிந்தால் பொருத்தம் பார்த்துத் திருமணம் செய்வதுதான் சுபம். இருவருக்குமே பிறந்த நக்ஷத்திரம் தெரியாவிட்டால் நாமநக்ஷத்திரம் கொண்டு பார்த்தல் நன்று. *(341)*

### *நாம நக்ஷத்திரம் கொண்டு பொருத்தம் பார்ப்பதிலும் விசேஷம்*

ஒருவருடைய ஜன்ம நக்ஷத்திரம் தெரிந்து மற்றவரின் ஜன்ம நக்ஷத்திரம் தெரியாதபோது மணமகன் ஜன்ம நக்ஷத்திரம் கொண்டும், மணப்பெண்ணின் நாம நக்ஷத்திரம் கொண்டும் பொருத்தம் காணலாம். ஆனால் பெண் ஜன்ம நக்ஷத்திரம் தெரிந்து அதைக்கொண்டும் மணமகனின் நாம நக்ஷத்திரம் கொண்டும் பொருத்தம் காணலாகாது. *(342)*

### *அரசுப் பதவியில் பொறுப்பேற்க*

கேட்டை, உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, ரேவதி, அனுஷம், ஹஸ்தம், ரோகிணி, பூசம், புனர்பூசம், திருவோணம் ஆகிய நக்ஷத்திரங்களில் சுக்ரன், புதன், குரு, சந்திரன் இவர்களுடைய (தின) ஹோரை, அம்சம், கிழமை, லக்னம் ஆகியவற்றில் ரிக்தையும், பூர்ணிமை, அமாவாசை

தவிர மற்ற திதிகளில்; கன்னி, துலாம், மகரம், விருச்சிகம் நீங்கலாக மற்ற லக்னங்களில் எட்டாமிடம் சுத்தியுள்ள லக்னத்தில் ராஹுகாலம், யமகண்டம் போன்ற பிழையில்லாத, அமிர்தாதி சுபயோகமுள்ள நாளில் இக்காலத்திய மந்திரிகளும், மற்றும் அரசுப் பொறுப்பினை ஏற்பவர்களும் பதவி ஏற்பது நல்லது.. இக்காலத்தில் தமிழ்நாடு முதலான பிராந்திய அரசு அமைப்பவர்களும், மைய அரசு அமைப்பவர்களும் பதவிப் பிரமாணம் செய்வதற்கு இதில் குறிப்பிட்டபடிக்கான நல்ல நாளைத் தேர்வு செய்யலாம். *(343)*

## *விவசாய வேலை ஆரம்பம்*

விவசாய வேலை தொடங்குவதற்கு முன்பாக நிலத்திற்குச் சொந்தக்காரர் விவசாயம் செய்யவிருக்கும் பூமியை முதலில் நல்ல நாளில் கண்டுவரவேண்டும். பூசம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, ஸ்வாதி, திருவாதிரை, மகம், அனுஷம், சித்திரை, ஹஸ்தம் ஆகிய நக்ஷத்திரங்கள் உள்ள நாளில் ரிஷபம், விருச்சிகம், கடகம் ஆகிய லக்னங்களில் பக்ஷச்சித்திரையும், நவமியும் தவிர மற்ற திதிகள் உள்ள நாளில், செவ்வாய் பூமிகாரகன் என்பதால் செவ்வாய், வியாழன், வெள்ளி, புதன் ஆகிய கிழமைகளில், லக்ன அம்சத்தில் விவசாயம் செய்யவிருக்கும் பூமியில் விவசாய வேலை ஆரம்பம் செய்யவேண்டும். (விவசாய வேலை ஆரம்பம் செய்வதற்குரிய நல்ல நாளில் ஸ்நானம் செய்து, பூமியை பூஜைசெய்துவிட்டு வேலை தொடங்க வேண்டும். *(344)*

ரேவதி, புனர்பூசம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, ஹஸ்தம், மூலம், பூசம், ரோகிணி ஆகிய நக்ஷத்திரங்களில் புதன், வியாழன், வெள்ளி, திங்கட்கிழமைகளில், ரிக்தை, பக்ஷச்சித்திரை, பௌர்ணமி, அமாவாசை தவிர பிற திதிகளில் வளர்பிறையில் மீனம், ரிஷபம், மகரம், மிதுனம், கடகம் ஆகிய லக்னங்களில் 4மிடம் சுத்தி இருக்கும் லக்னத்தில்,

கோணம் இல்லாத நக்ஷத்திரத்தில் ஸ்நானம் செய்து சுத்தனாக இருந்து பொன்னேர்பூட்டி, பூமிதேவியைப் புஷ்பம், ஜலம் கொண்டு பூஜை செய்து, மகிழ்ச்சியுற்ற மனத்தினனாக விவசாய வேலை ஆரம்பம் செய்யவேண்டும். *(345)*

## *கோண நக்ஷத்திரம்*

கடபயாதி கணக்கு முறையில் -

गं = 3, गा = 3, गु = 3, णा = 5, गु = 3, णा = 5, गौ = 3, री = 2

ஒரு சதுரம் வரைந்து, அதில் எட்டு திசைகளைக் குறித்து விவசாய ஆரம்பத்திற்கான சுபதினம் (நக்ஷத்திரம்) கண்டு அறிவதற்கான நாளில் சூரியன் விட்ட நக்ஷத்திரம் தொடங்கி ஈசான்யமூலை முதல் गं = 3, गा = 3, गु = 3, णा = 5, गु = 3, णा = 5, गौ = 3, री = 2 என்றவாறு நக்ஷத்திரங்களை எழுத வேண்டியது அவ்வாறு எழுதப்பட்டதில் ஈசான்யம் அக்னி, நிருருதி, வாயுதிக்கு மூலைகளில் விழுந்த நக்ஷத்திரங்கள் கோண் நக்ஷத்திரங்களாகும் அசுபமாம். நான்கு திக்குகளில் விழுந்த நக்ஷத்திரங்கள் சுபமாம். கோண நக்ஷத்திரங்களில் விவாசயம் மேற்கொண்டால் விவசாயம் நாசப்படும். மற்ற நக்ஷத்திரங் களில் மேற்கொள்ளப்படின் மிகுந்தபலன் உண்டு. *(346)*

## *கோணதோஷத்திற்கு விலக்கு*

ஸ்வாதி, அனுஷம், திருவோணம், மூலம், அச்வினி, ஹஸ்தம், பூசம் இந்த ஏழு நக்ஷத்திரங்களுக்கும் கோண தோஷம் இல்லை. *(347)*

## *விதை விதைத்தல்*

விதை விதைப்பதற்குரிய நல்ல நக்ஷத்திரங்கள், திதி, வாரம், லக்னம் பற்றிக் கூறப்படுகிறது. ஹஸ்தம், ஸ்வாதி, ரோஹிணி, மூலம், மகம், திருவோணம், அனுஷம், ரேவதி, பூசம், விசாகம், சதயம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி ஆகிய நக்ஷத்திரங்கள் உத்தமம். மேஷம், கன்னி, தனுஸ், விருச்சிக லக்னங்கள் நீங்கலாக மற்ற லக்னங்கள் உத்தமம். த்விதீயை (பத்ரை), சதுர்த்தி (ரிக்தை) இரு திதிகளும் மற்றும்

பௌர்ணமி, அமாவாசை இரு திதிகளும் தவிர்த்த மற்ற திதிகள் உயர்வானவை. வியாழன், சுக்ரன், புதன் இவர்களின் வார, லக்னாம்சங்களில் 7மிடத்தில் சுக்ரன் இல்லாமலும், அஷ்டமஸ்தானசுத்தி உள்ள லக்னத்திலும் விதை விதைக்கலாம். *(348)*

விவசாய விஷயத்தில் நட்டாறு (அக்னி நக்ஷத்திரம்) ஆவணி மாதப்பிறப்பு முதல் *355* நாழிகைக்குமேல் *35* நாழிகை நட்டாறு என்பர். (அக்னி நக்ஷத்திரமாகும்.) அந்தக் காலத்தில் விதைக்கலாகாது. விதை முளைக்காமலோ, முளைத்தும் வேறு காரணங்களாலோ நஷ்டம் ஏற்படுமாம். (**கடபயாதி** நியமம் என்று எண்களைக் கணக்கிட ஒரு ஸம்க்ஞை ஸம்ஸ்க்ருத நூல்களில் உண்டு. कादि नव क=1 ख=2 ग=3 घ=4 ङ=5 च=6 छ=7 ज=8 झ=9 टादिनव ट=1 ठ=2 ड=3 ढ=4 ण=5 त=6 थ=7 द=8 ध=9 पादिपञ्च प=1 फ=2 ब=3 भ=4 म=5 याद्यष्टौ य=1 र=2 ल=3 व=4 श=5 ष=6 स=7 ह=8 இந்தக் கணக்கின்படி मामला என்பது 5 5 3 எண்களை இடதுபுறமாக எழுதவேண்டியது सङ्ख्यानां वामतो गतिः என்ற முறைப்படி முதலில் मा 5 எழுதி, அதற்கு இடதுபுறம் म 5 எழுதி, அதற்கு இடப்புறம் ल 3 எழுதினால் 355ஆகும். இவ்விதம் मामला 5 அதற்கு இடப்புறம் ल 3 = 35ஆகும்.) *(349)*

## *விலக்கத்தக்க "ஆகாசபாதாள"ங்கள்*

வளர்பிறையில் நவமியும், தசமியும், ஆகாசம் என்றும், தேய்பிறையில் சதுர்த்தியும், பஞ்சமியும் பாதாளம் என்றும் சொல்லப்படும். இந்த ஆகாச-பாதாள காலத்தில் எல்லா விவசாய கார்யங்களுமே விலக்கப்படவேண்டும். *(349*-A*)*

## *தான்யங்கள் "அறுப்பு" அறுப்பது பற்றியும், விளைந்த தான்யத்தை வீட்டிற்குக் கொண்டுவருவது பற்றியும்*

திருவோணம், ரோகிணி, பரணி, ஹஸ்தம், மகம், விசாகம், திருவாதிரை ஆகிய நக்ஷத்திரங்களில்,

ரிக்தையில்லாத சதுர்த்தி தவிர பிற திதிகளில் ஸ்திர ராசிகளில் கடகம் இவைகளில் சனி பலமுடன் கூடிய லக்னத்தில் (சனி விவசாயத்திற்குக் காரகர்) புதன், குரு, சுக்ர வாரங்களில் விளைந்த தானியங்களை அறுவடை செய்யலாம். அறுவடை செய்த தான்யத்தை வீட்டிற்குக் கொண்டுவரலாம். *(350)*

## *புத்தாடை உடுக்க விதிமுறைகள்*

புத்தாடை வாங்கி அணிவதற்கும், நல்ல நாள் பார்க்க வேண்டும். ஹஸ்தம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, அச்வினி, புனர்பூசம், பூசம், அனுஷம், சித்திரை, விசாகம், ரோகிணி, ஸ்வாதி, ரேவதி ஆகிய நக்ஷத்திரங்களில் ரிக்தை (சதுர்த்தி) நீங்கலாக மற்ற திதிகளில், மேஷம் - விருச்சிகம் - சிம்மம் - தனுஸ் - மீனம் ஆகிய லக்னம் நீங்கலாக மற்ற லக்னங்களில், சனி - செவ்வாய்க்கிழமைகளையும் தவிர்த்து மற்ற கிழமைகளில் புதுஆடை அணிவது நல்லது. *(351)*

## *புத்தாடை அணியும் விஷயத்தில் கிழமைக்கான பலன்*

புத்தாடைகளை ஞாயிறு அணிந்தால் நோய் விருத்தி, திங்கள் துயரம், செவ்வாய் அக்னிபயம், புதன் தன-தான்ய லாபம், வியாழன் ஆரோக்கிய விருத்தி, வெள்ளி சுகபோஜனம், சனி மஹாபயம் ஏற்படும். *(352 - 353)*

## *புத்தாடை, புது அணிமணிகள் அணிவதற்கும் புதுப்பாத்திரத்தில் உணவு உண்ணவும்*

பூசம், ரோகிணி, அவிட்டம்,ஹஸ்தம், விசாகம், சித்திரை, அனுஷம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, ஸ்வாதி, புனர்பூசம், அச்வினி, ரேவதி ஆகிய 14 நாக்ஷத்திரங் களில் புத்தாடை அணிய - புதிய பாத்திரங்களில் உணவு உண்ண-புது ஆபரணங்கள் அணிவதற்கும் நல்லது என்ரது முன்னோர் கருத்து. *(354)*

## புது அணியணிகள் அணிய

ரோகிணி, அச்வினி, மிருகசீர்ஷம், ரேவதி, ஹஸ்தம், சித்திரை, பூசம், அனுஷம் இந்த எட்டு நக்ஷத்திரங்களில் குரு, சந்திரன், சுக்ரன் சனி இவர்களின் வார லக்னங்களிலும், நந்தை (பிரதமை) பூர்ணா (பஞ்சமி) ஆகிய திதிகளில் கன்னி, ரிஷபம், மிதுனம், மீனம், தனுஸ் ஆகிய லக்னங்களில் புதிய அணிகலன்களை அணியலாம். *(355)*

## மருந்து உண்பதற்கு

முன்நாட்களில் மருந்துவர் தரும் மருந்துகளை நல்லநாள், நேரம் பார்த்துத்தான் அருந்தி நலம் பெற்றனர். ஹஸ்தம், அச்வினி, ஸ்வாதி, அனுஷம், சதயம், புனர்பூசம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, ரேவதி, சித்திரை, திருவோணம், மிருகசீர்ஷம், பூசம், அவிட்டம், ரோகிணி ஆகிய நக்ஷத்திரங் களில் ஞாயிறு, புதன், குரு, சுக்ரன், சந்திரன் (திங்கள்) ஆகியவர்களின் வார-லக்னங்களில், சர ராசிகளுள்ள லக்னத்தில் 6, 7, 8மிடங்கள் சுத்தமாக இருக்கும்பொழுது ஔடதம் சேவித்தல் வேண்டும். *(356)*

## ஆயுதம் முதலான விசேஷ சிகிச்சைபற்றி

திருவாதிரை, கேட்டை, ஆயில்யம், மூலம் ஆகிய நக்ஷத்திரங்களில், சனி-செவ்வாய்க்கிழமைகளில், சதுர்த்தியில் மேஷம், கடகம், கன்னி, துலாம் ஆகிய லக்னங்களில் அசுபகிரங்கள் பலமுள்ளதாக அஷ்டம (8மிடம்) சுத்தியுள்ள லக்னத்தில், சந்திர தாராபாலமுள்ள நாளில் ஆயுத சிகிச்சை போன்ற சிறப்பு சிகிச்சை செய்வது நலம். (முன்காலங்களில் அக்னிவைத்தல், முள்குத்திவிட்டால் உப்பு எண்ணெய் வைத்து நெருப்புச்சுடர் வைப்பது வழக்கம். மஹாரோகாதி களுக்கு புகை சிகிச்சை அளிப்பதும், காரம் வைப்பதும் பழக்கத்தில் இருந்தது. இக்காலம் விஞ்ஞான வழியில்

மேற்கொள்ளப்படும் பலவித சிகிச்சைகளும் செய்ய, மேலே கூறப்பட்டுள்ளபடி நல்ல நாளைத் தேர்ந்தெடுக்கலாம். (357)

## *வாஸ்து கர்ம விதி*

மேஷம், ரிஷபம், மிதுனம், மீனம், மகர (சித்திரை, வைகாசி, ஆனி, பங்குனி, தை) மாதங்களில்; குரு-சுக்ரர்கள் அஸ்தமனமாகாமல் (ஒளியுடன்) இருக்கும்பொழுது புனர்பூசம், சதயம், ரோகிணி, மிருகசீர்ஷம், சித்திரை, அவிட்டம், மகம், அனுஷம், ஹஸ்தம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, ரேவதி, அச்வினி, ஸ்வாதி, பூசம், கேட்டை, திருவோணம் ஆகிய நாட்களில்; சதுர்த்தி, பௌர்ணமி, அமாவாஸை தவிர்த்து, குரு-புதன்- சுக்ரன் ஆகியவர்களின் வார அம்சங்களில் வாஸ்து விடவும், கோயில் கட்டவும், அடிமனை பறிக்கவும் நல்ல நாட்களாகும். (358 - 359)

## *வீடு கட்ட ஆரம்பித்தல் பற்றி*

புது வீடுகட்டுவதற்கு ஆரம்பம் செய்ய (கட்டுமான வேலை தொடங்க) உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, மிருகசீர்ஷம், ரோகிணி, அனுஷம், பூசம், ரேவதி, ஹஸ்தம் ஆகிய ஒன்பது நக்ஷத்திரங்கள் உத்தமம். ஸ்வாதி, திருவோணம், புனர்பூசம், சதயம், சித்திரை, அவிட்டம் இந்த ஆறு நக்ஷத்திரங்களும் மத்யமம். இவை தவிர மற்ற அனைத்து நக்ஷத்திரங்களும் அதமம். விலக்கத்தக்கவை என முனிவர்கள் கூறியுள்ளார்கள். (360)

## *வாஸ்து கர்மா - க்ருஹப்ரவேசம் செய்யக்கூடாத மாதங்கள்*

மாசி, பங்குனி, ஆனி, புரட்டாசி, மார்கழி மாதங்களில் வாஸ்து நிர்மாணமும், க்ருஹப்ரவேசமும் செய்யலாகாது. (இந்த நூலில் மாசி மாதமும் கிருஹப்ரவேசத்திற்கு உகந்ததல்ல என்று கூறப்பட்டுள்ளது. காலப்ரகாசிகை (சரசுவதி மகால் முதல் பதிப்பு) நூலில் 115வது பக்கத்தில் 15வது அத்தியாயத்தில், கிருஹப்ரவேசம் செய்யக்கூடாத மாதங்களில் மாசி மாதம் சேர்க்கப்படவில்லை. இவ்வாறு

சாஸ்திர நூல்களுக்குள் கருத்து வேறுபாடுப ஏற்படும்பொழுது உலக நடைமுறைகளையும் கணக்கில் கொள்ளவேண்டியது).

பங்குனி, ஆனி, புரட்டாசி, மார்கழி ஆகிய நான்கு மாதங்களில் வீடு அமைப்பது தொடர்பான வேலைகள் செய்யலாகாது. (362)

## வீடு நிர்மாணத்தில் நல்ல தினங்கள்பற்றி

மகம், மிருகசீர்ஷம், ஹஸ்தம், ஸ்வாதி, மூலம், அனுஷம், ரேவதி, ரோகிணீ, உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி ஆகிய நக்ஷத்திர நாட்கள் தேவதா பிரதிஷ்டை, திருமணம், கிருஹப்ரவேசம், கிராமப்ரவேசம், விதை விதைத்தல், வீடு, மண்டபங்கள் கட்டுதல் போன்ற வீட்டு நிர்மாண வேலைகள் மேற்கொள்வதற்கு நல்லது. (363 - 364)

## கிருஹப்ரவேசத்திற்கு உரிய சுபதினங்கள்

தை, சித்திரை, வைகாசி, ஆவணி, ஐப்பசி, கார்த்திகை ஆகிய மாதங்களில் ஹஸ்தம், பூசம், புனர்பூசம், சதயம், ஸ்வாதி, ரோகிணி, ரேவதி, உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி ஆகிய நக்ஷத்திரங்களிலும், திருவோணம், மிருகசீர்ஷம், அவிட்டம், அச்வினி ஆகிய நக்ஷத்திரங்களிலும்; கன்யா, கும்பம், ரிஷபம், விருச்சிகம், சிம்மம், மிதுனம் ஆகிய லக்னங்களில், வியாழன்-சனி-புதன்-திங்கள்-வெள்ளிக் கிழமைகளிலும் 2மிடம் சுத்தியுள்ள லக்னம் உத்தமம். (365)

## கிருஹப்ரவேசம் செய்யத் தகுதியில்லாத வீடுகள்

கதவுகள் போடப்படாத, மேல்கூறை, தளம் அமைக்கப் பட்டிருக்காத, ப்ராம்மண போஜனம் செய்விக்காமலும், (அனாச்சாத்யம் என்பதற்கு மேல்கூறை (தளம்) போடப்படாத என்பதுடன், தரைமேல் பூச்சும், சுவர் மேல் பூச்சும் இல்லாத என்றும் பொருள்கொள்ளவேண்டும்.) ஆதலால், தரை தளம் சரியாக அமைக்காத, பூசப்படாத, வீட்டின் சுவர் பூசப்படாமல் இருக்கும் நிலையிலும் கிருஹப்ரவேசம் செய்யலாகாது.

இதற்கு விளக்கமுடன் அடுத்த ச்லோகம் அமைந்துள்ளது. அஸம்ஸ்க்ருத - பூமி குட்யே, பூசப்படாத பூமி, தரையுள்ள நிலையிலும் பூசப்படாத சுவர் இருக்கும் நிலையிலும் என்று தற்காலத்தில் மொஸைக் எனும் பளபளப்புள்ள தரை அமைக்கிறவர்கள் கிருஹப்ரவேசம் செய்துவிட்டுப் பிறகு அப்பால் பாலிஷ் செய்துவருகிறார்கள். இதுகூட சிலாக்யமாகச் சொல்வதற்கில்லை என்று இதன் கருத்து மூலம் அறியலாகிறது. மங்கள விருத்தியை விரும்புகிற வர்கள் வீட்டில் செய்ய வேண்டிய வேலைகளைப் பாக்கி வைத்துவிட்டு கிருஹப்ரவேசம் செய்வது சரியாகாது. *(366 - 367)*

## *வாஸ்து புருஷனின் நிலை*

வீடுகள் முதலான கட்டிடங்கள் அமைக்கும் விஷயத்தில் வாஸ்து என்ற தேவதைக்கு பாதகமில்லாத காலத்தில் பூமி பூஜை மேற்கொள்ளப்படவேண்டும். இந்த தேவதை புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை ஆகிய மாதங்களில் கிழக்கு தலைவைத்தும், மார்கழி, தை, மாசி மாதங்களில் தெற்கில் தலைவதைத்தும், பங்குனி, சித்திரை, வைகாசி மாதங்களில் மேற்கே தலைவைத்தும், ஆனி, ஆடி, ஆவணி மாதங்களில் வடக்கில் தலை வைத்தும் படுத்திருப்பார்.

வாஸ்து புருஷன் சூரியன் இருக்கிற ராசியில் காலை நீட்டிக்கொண்டு, அதற்கு நேர் எதிர்புறத்தில் தலைவைத்துப் படுக்கிறார். அதுசமயம் இடதுகையை கீழாகவும், வலது கையை மேற்புறமாகவும் வைத்துக்கொண்டு படுக்கிறார். *(368)*

வீடு கட்டுவதற்கான அஸ்திவாரம் மண் தோண்டும் பொழுது முதலில் வாஸ்து புருஷனின் தலையுள்ள பகுதியில் வெட்டினால் அந்த வீட்டின் யஜமானனுக்கு ஆகாது. கால் உள்ள பகுதியில் வெட்ட ஆரம்பித்தால் மனையாள், பிள்ளை-பெண்களுக்கு ஆகாது. வாஸ்து புருஷனின் கை உள்ள பகுதியில் வெட்டப்படுமானால் கட்டப்படும் வீட்டிற்குத் திருட்டு பயம் ஏற்படும். ஆதலால் வாஸ்து புருஷனின் வயிற்றுப் பகுதியில் வெட்ட ஆரம்பம் செய்தால் நன்மை என்ற அறியவும். *(369)*

### *வீட்டின் வாசல் அமைப்பதுபற்றி*

கட்டப்படவுள்ள வீட்டின் நிலப்பகுதியை நெடுக்கே அளந்து ஒன்பது பாகமாக்கி வலப்புறத்தில் ஐந்து பங்கு தள்ளியும், இடப்புறத்தில் மூன்று பங்கு தள்ளியும் நடுவில் ஒரு பங்கு அமையும் இடம் வாசல் பக்கமாக அமைத்தல் வேண்டும். வீட்டு யஜமானனுடைய ராசி, வீட்டு வாசலுக்குக் கட்டப்பட இருக்கிற வீட்டு வாசலுக்கு வலப்புறத்தில் இருப்பினும் சரி முன்புறத்தில் இருப்பினும் சரி சிறப்பான ஐச்வர்யம் ஏற்படும். இதற்குமாறாக வீட்டு வாசலுக்குப் பின்னால் அல்லது இடப்புறம் அமைந்தால் தீமை உண்டு. பொருளும் சேதமாகும். இதுபற்றிய செய்யுள் ஒன்றும் இங்கு கருத்தில் கொள்வதற்குரியது.

*"நன்னாளில் மனைகோல்வர் தன் ராசியினுடனே*
*மூன்றாகில் வலமாகில் நலம் முகிலும், திருவணையும்*
*பின்னாகில் இடமாகில் பேணுமனை கோயில்*
*பொன்னாவது பொருளாவது உயிராவது போமே". (370)*

புதுமனை கோலும்பொழுது சில இடங்களில் பாம்பு, தவளை, தேள், சாம்பல், கரி, எலும்புத்துண்டுகள், மரத் துண்டுகள், ஓட்டாஞ்சல்லிகள் தென்படுவதுண்டு. அம்மாதிரி பொருட்கள் காணப்படும் இடத்தில் வீடு அமைப்பது நல்லதல்ல. *(371)*

### பசு மாடுகள் தங்குமிடம் (கோசாலை-தொழுவம்) அமைக்க

வெள்ளிக்கிழமைகளிலும் புதன்கிழமைகளிலும் ரோகிணியிலும், வளர்பிறை பிரதமையுடன் கூடிய அமாவாசை மற்றும் சதுர்தசி ஆகிய நாட்களில் பசுசாலை அமைக்கலாகாது; கோசாலையில் பசுக்களைக் கட்டலாகாது. *(372)*

கோடை காலங்களில் இடையர்கள் பசுக்களை ஓரிடம் விட்டு மேய்ச்சலுக்குக்காக வேறிடம் ஓட்டிச்செல்வதுண்டு.

அம்மாதிரி சமயங்களில் வெள்ளி, புதன்கிழமைகளையும், ரோகிணி-பிரதமையுடன் கூடிய அமாவாசை, சதுர்தசீ ஆகிய நாட்களைத் தவிற்பது (அவசியம்) நலம். (372)

கிருஹப்ரவேசம், கிராமாதி ப்ரவேச விஷயத்தில் வலது புறத்திலும்-பின்புறத்திலும் சுக்கரன் இருக்கலாம். எதிரிலும், இடது பக்கத்திலும் இருப்பின் விலக்கவும். (373)

## *மனை கோலுவதற்குரிய காலமும்-ஆகாத காலமும்*

தை - மாசி மாதங்களில் கிழக்கு திசையில் மனை கோலலாம். சித்திரை-வைகாசி மாதங்களில் தெற்கிலும், ஆடி-ஆவணி மாதங்களில் மேற்கிலும், ஐப்பசி-கார்த்திகை மாதங்களில் வடக்கிலும் மனைகோலலாம். அஸ்திவாரம் தோண்டுவதற்கு உரிய இடத்திற்கேற்ப குறிப்பிட்ட மாதங்களில் மனை கோலுவதற்கான முயற்சி மேற்கொள்வது நல்லது. ஆனி, புரட்டாசி, மார்கழி, பங்குனி ஆகிய நான்கு மாதங்களில் எந்த திசையிலும் மனைகோலுவது கூடாது. (374)

## *கிருஹப்ரவேச விஷயத்தில் சில முக்கிய குறிப்புகள்*

ரோகிணி, உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, ஹஸ்தம், அச்வினி, அனுஷம், பூசம், மிருகசீர்ஷம், திருவோணம், ரேவதி, புனர்பூசம் ஆகிய 12 நக்ஷத்திரங்களும் கிருஹ ப்ரவேசத்திற்குச் சிறந்தவை. ரிக்தையும், (சதுர்த்தி) நவமீ, ஷஷ்டியும், இரண்டு பர்வங்களும் (பௌர்ணமி-அமாவாசை) தவிர பிற திதிகளும், குரு-சுக்ரன்-புதன்-இந்து (சந்திரன்), சனி ஆகியவர்களின் வாரம், லக்னம், அம்சங்களில் கிருஹப்ரவேசம் சுபம். (375 - 377)

## *நெல் முதலான தானியங்களைச் சேமித்தல்*

ரோகிணி, புனர்பூசம், பூசம், மிருகசீர்ஷம், ரேவதி, ஹஸ்தம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, ஸ்வாதி, மூலம்,

அனுஷம், பரணி, திருவாதிரை, மகம், திருவோணம் இந்த நக்ஷத்திரங்களில் ஸ்திர ராசி - லக்னமாக இருக்கும் காலத்தில், 4ல் சனி இருக்கிற லக்னத்தில் பக்ஷச்சித்திரை, ரிக்தை, அமாவாஸை, ஷஷ்டி, சகுனம் முதலான கரணங்கள் நீக்கி, ஸ்திர வாரத்தில் தான்யங்களைச் சேமித்தல் நல்லது. *(378 - 380)*

## *தேவதா பிரதிஷ்டை*

ஆலயங்களில் தேவதா மூர்த்திகளைப் பிரதிஷ்டை செய்வதற்கு உகந்த மாதம், நாள், நக்ஷத்திரம் பற்றி கூறப்படுவதாவது. தை, பங்குனி, சித்திரை, வைகாசி, ஆனி இந்த மாதங்களுக்குள் சுக்லபக்ஷத்தில் (வளர்பிறை) குருவும், சுக்ரனும் அஸ்தமனதோஷம் பெறாமல் பிரகாசமுடன் இருக்கும் காலத்தில், பூசம், புனர்பூசம், மிருகசீர்ஷம், ரேவதி, ஸ்வாதி, ரோகிணி, ஹஸ்தம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி ஆகிய நக்ஷத்திரங்கள் உத்தமம். ஒருசிலர் திருவோணம், மூலம், அவிட்டம் இம்மூன்று நக்ஷத்திரங்களும் உத்தமம் என்பர். ரிக்தை, பக்ஷச்சித்திரை, பௌர்ணமி, அமாவாசை விலக்கத்தக்கவை. மற்ற திதிகள் சுபமே. குரு, சந்திரன், புதன், சுக்ரன் ஆகியவர்களின் வார, நவாம்சங்களில், ஸ்திர ராசியில் - கேந்திர - த்ரிகோணங்களில் சுபகிரஹங்கள் இருக்கும் காலத்தில் பாப கிரஹங்கள் 3 - 11ல் இருக்க, அஷ்டமசந்திரன் தவிர, அஷ்டமசுத்தியுள்ள உத்தம லக்னத்தில் தேவதா பிரதிஷ்டை செய்யலாம். ஸ்ரீநிவாஸ மூர்த்தி போன்ற ஸாத்விகமூர்த்திகளைப் பிரதிஷ்டை செய்ய ஸ்திர லக்னம் - ஸ்திர ராசிகள் உத்தமம், க்ஷுத்ரதேவதா பிரிஷ்டை விஷயத்தில் சர-உபய ராசிகள் ஏற்கத்தக்கவையே. *381 - 382)*

## *நோய் ஆரம்பமாவதுபற்றி*

எதிர்பாராமல் நோயினால் பாதிக்கப்படும் நிலையில் நோய் ஏற்பட்ட நாள் - நக்ஷத்திரம் - நேரம் இவற்றைக் கொண்டு நோயின் நிலை, குணமாகும் காலம் ஆகியவை பற்றி அறியலாம் என்று கூறப்படுகிறது.

பூரம், பூராடம், பூரட்டாதி, ஆயில்யம், கேட்டை, ஸ்வாதி, திருவாதிரை ஆகிய நக்ஷத்திரங்களில் நோய் ஏற்படுமானால் குணமாவது கடினம். அனுஷம், ரேவதி நக்ஷத்திரங்களில் நோய் ஏற்படின் தீர்கரோகமாம். உத்தரட்டாதியில் நோய் கண்டால் குணமாக ஒருமாதம் ஆகும். மிருகசீர்ஷம், ஹஸ்தம், விசாகம், அவிட்டம் ஆகிய நக்ஷத்திரங்களில் நோய் காணில் 15 நாட்களில் குணமாகும். மகத்தில் நோய்கண்டால் 20 நாட்கள், சித்திரை, சதயம், பரணி, திருவோணம் இவைகளில் நோய் கண்டால் 11 நாட்கள். அச்வினி, கார்த்திகை, மூலம் ஆகிய நக்ஷத்திரங்களில் நோய் கண்டால் 9 நாட்களில் குணமாகும். புனர்பூசம், பூசம், உத்தரம், உத்தராடம், ரோகிணி, உத்தரட்டாதி இவைகளில் நோய் கண்டால் 7 நாட்களில் குணமாகும். *(384)*

ஆனால் ஆயில்யம், சதயம், திருவாதிரை, ஸ்வாதீ, கேட்டை, பூரம், பூராடம், பூரட்டாதி, கார்த்திகை, பரணி இந்த நக்ஷத்திரங்களுடன், ஞாயிறு, செவ்வாய், சனிக்கிழமைகளும்; நவமீ, ஷஷ்டீ, துவாதசி, பௌர்ணமீ, அமாவாசை; ரிக்தை திதிகள் கூடிய நாளில் நோய் காணில் எத்தனை பரிஹாரம் செய்தாலும் குணமாவது கடினமாம். *(385)*

இதுபோலவே ஜன்ம நக்ஷத்திரத்திலும், அனுஜன்ம த்ரிஜன்ம நக்ஷத்திரத்திலும், 3வது நக்ஷத்திரமான விபத் நக்ஷத்திரத்திலும், 7வது நக்ஷத்திரமான வத நக்ஷத்திரத்திலும் நோய் கண்டால் குணமாவது கடினம். மிகவும் கஷ்டப்படவும் நேரிடும். *(386)*

ஆரோக்ய ஸ்நானம் (நோய் குணமான பிறகு தலைக்கு ஜலம் விடுவது) புனர்பூசம், ரோகிணி, மகம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, ஸ்வாதி, ரேவதி ஆயில்யம், மிருகசீர்ஷம் இவைகள் இல்லாத நக்ஷத்திரங்களில்; திங்கள், வெள்ளி தவிர மற்ற நாட்களில் ரிக்தை, அஷ்டமி, பௌர்ணமி,

அமாவாசை தவிர்த்த பிற திதிகளில் மங்களகரமான லக்னங்களில் ஆரோக்ய (நோய் குணமான பிறகு தலைக்கு ஜலம் விடுவதல்) செய்யவேண்டும். (387)

மிருத நக்ஷத்திரத்தில் நோய்காண மஹாதுக்கம், அர்தஜீவனில் மிகுந்த கஷ்டங்களுக்குப் பிறகு குணமாகும். பூரணஜீவனில் நோய் கண்டால் சீக்ரம் சுகத்தை அடையலாம். (388)

## மிருத - அர்தஜீவன் நக்ஷத்திரங்களாவன

சூரியன் விட்ட நக்ஷத்திரமும், சூரியனுடன் உள்ள நக்ஷத்திரமும், சூரியன் சேரவிருக்கும் நக்ஷத்திரமும் ஆக இந்த மூன்றும் **மிருத** நக்ஷத்திரங்கள் என்பார்கள். அதற்குமேல் ஏழு நக்ஷத்திரங்கள் அர்தஜீவன்; அதற்கு அடுத்த ஒரு நக்ஷத்திரம் ம்ருதம். அதற்கு அடுத்த எட்டு நக்ஷத்திரங்கள் பூர்ணஜீவன் உள்ளவை. அதற்குமேல் ஒரு நக்ஷத்திரம் மிருதம். அதற்குமேல் ஏழு நக்ஷத்திரங்கள் அர்தஜீவன்கள். சூரியன் பரணியில்இருப்பதாகக் கொண்டால், அச்வினி - பரணி - கார்த்திகை இம்மூன்றும் **ம்ருதம்.** அதற்குமேல் மகம் முடியவுள்ள ஏழு நக்ஷத்திரங்கள் **அர்தஜீவன்.** அதற்குமேல் உள்ள பூரம் ம்ருதம், அதற்குமேல் எட்டு நக்ஷத்திரங்கள்-மூலம் முடிய **பூர்ண ஜீவன்** உள்ளவை. பூராடம் ம்ருதம் ஆகும். அடுத்துள்ள ஏழு நக்ஷத்திரங்கள் ரேவதி முடிய அர்தஜீவன் உள்ள நக்ஷத்திரங்களாம். இந்தப்படிக்கு ம்ருதாதி நக்ஷத்திரங்களைக் கணக்கிட்டு ரோகத்திலிருந்து விடுபடுதல், நோயின் கடுமை போன்றவற்றை அறியவேண்டும். (389)

## தைல ஸ்நான விதி

முன்னோர்கள் எண்ணெய்த் தேய்த்து முழுகுவதைப் பகலில்தான் மேற்கொள்ளவேண்டும் என்று கூறுகிறார்கள். அதிலும் சனிக்கிழமை, புதன்கிழமை, திங்கட்கிழமைகளில் மேற்கொள்ளலாம். பௌர்ணமி, அமாவாசை, பிரதமை,

ஷஷ்டி, அஷ்டமீ, துவாதசி திதிகளில் கூடாது. கேட்டை, உத்தரம், திருவோணம், திருவாதிரை, ஜன்ம - அனுஜனம் - திரிஜன்ம நக்ஷத்திரங்கள் ஆகியவற்றிலும் எண்ணெய் தேய்த்துக்கொள்ளலாகாது. இவ்விதி வயது வந்தவர்களுக்கு தானேயன்றி குழந்தைகளுக்கும், வயது முதிர்ந்தவர்களுக்கும், நோயிலிருந்து தேறியவர்களுக்கும் பொருந்துவதல்ல. அவர்கள் குழந்தைகள், வயது முதிர்ந்தவர்கள், நோயிலிருந்து தேறியவர்கள், உரிய காலத்தில் எண்ணெய்த் தேய்த்துக் குளிக்கலாம். நாள் பார்த்துக்கொண்டிருக்கவேண்டியது இல்லை. *(390)*

விலக்கப்பட்ட நாட்கள், நக்ஷத்திரங்களும் இரவிலும் எண்ணெய்த் தேய்த்துக்கொள்ளலாம், ஆனால் அந்த எண்ணெயுடன் நெய்யை அல்லது தண்ணீரைக் கூட்டவேண்டும். *(391)*

### *விலக்ககப்பட்ட நக்ஷத்திர நாட்களிலும் செய்யக்கூடியவை*

பொதுவாக கேட்டை, பூரம், பூராடம், பூரட்டாதி, பரணி, திருவாதிரை, ஆயில்யம், க்ருத்திகை, விசாகம், மகம் இந்த நக்ஷத்திரங்களில் சுபகார்யங்கள் விலக்கப்படும். சுபகாரியங்கள் செய்யும் விஷயத்தில் மேலே கூறப்பட்ட நக்ஷத்திரங்கள் பொதுவாக விலக்கத்தக்கவை. ஆயினும், சில காரியங்கள் செய்யலாம் என்பதாகக் கூறப்படுகிறது. *(392)*

***அவையாவன, மரங்கள், கொடிகள், கிழங்குகள் பயிரிட :*** ரோகிணியில் தோட்ட நிர்மாணம் செய்யவும், ஆயில்யத்தில் வெற்றிலைக்கொடி நடவும், பரணியில் கத்திரிச்செடி வைக்கவும், ஸ்வாதியில் நெல், வரகு, சோளம் முதலான தான்யங்கல் விதைக்கவும், மூல நக்ஷத்திரத்தில் கிழங்குகள் பயிரிடவும் நல்லது. *(393)*

அச்வினியில் கமுகு, பனை, தென்னை முதலான மரங்கள் வைக்கவும், பரணியில் பயிர்க்குழி போடவும்,

கார்த்திகையில் காட்டுமரங்கள் (காடுகளில் மரங்கள்) பயிரிடவும், ரோகிணியில் தோப்புகள் (Park) அமைக்கவும், மிருகசீர்ஷத்தில் தேக்கு போன்ற மஹாவிருக்ஷங்கள் பயிரிடவும், புனர்பூசத்தில் சர்க்கரைவள்ளிக்கிழங்குகள் போன்ற படரும் கிழங்குகள் (கடலை போன்றவைகள் உட்பட) பயிரிடவும், பூச நக்ஷத்திரத்தில் வாழை, கரும்பு முதலானதுகள் வைக்கவும், ஆயில்யத்தில் வெற்றிலைக் கொடி பயிரிடவும் நல்லது. *(394 - 395)*

## *கிணறு, குளம் வெட்ட*

ஹஸ்தம், ஆயில்யம், சதயம், ரேவதீ, திருவோணம், மகம், அனுஷம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, ரோஹிணி, பூசம், மிருகசீர்ஷம் ஆகிய இந்த நக்ஷத்திரங்களில் சுக்ரன், புதன், குரு இந்த வாரங்களில் ரிக்தை-பக்ஷச்சித்திரை தவிர - மற்ற திதிகளில் விருஷபம், கடகம், மகரம், கும்பம், மீனம் ஆகிய லக்னங்களில் எட்டாமிடம் சுத்தியுள்ள லக்னத்தில் கிணறும், குளமும் வெட்டவேண்டும். (396)

***கிணறு வெட்டும் விஷயத்தில் ஜலம் உள்ள இடத்தை அறிய:-*** கிழக்கு - மேற்காக 4 கோடுகளும், தெற்கு - வடக்காக 5 கோடுகளும் அமைத்தால் 12 கட்டங்கள் அமையும். அதில் மத்தியில் உள்ள இரண்டு கட்டங்கள் ப்ரம்மஸ்தானமாகும்.

முற்பகலில் ப்ரச்னம் பார்க்கிறதானால், பிரச்ன லக்னம் தொடங்கி ப்ரம்மஸ்தானத்தில் மேற்குக் கட்டம் முதலாக பிரதக்ஷிணமாக எண்ணிவரும்பொழுது எந்தக் கட்டத்தில் சந்திரன் இருக்கிறாரோ அந்த இடத்தில் அதிகம் ஜலம் உண்டு. சூரியன் நிற்கும் ராசியில் ஜலமில்லை; கல்தான் கிடைக்கும்.

பிற்பகலில் ப்ரச்னம் பார்க்கிறதாயின், ப்ரச்ன லக்னம் தொடங்கி பிரம்மஸ்தானத்தில் கிழக்கு முதல் அப்பிரதக்ஷிணமாக எண்ணிவந்து எந்தக் கட்டத்தில் சந்திரன் இருக்கிறாரோ அங்கு மிகுந்த ஜலம் உண்டு என அறியவும்.

அந்த ப்ரச்ன லக்னத்திற்கு கேந்திரத்தில் சந்திர-சுக்ரர்கள் இருந்தால் அல்லது சந்திரன் அல்லது சுக்ரன் இருப்பினும் மிகுந்த ஜலம் உண்டு. கேந்திரங்களில் பாப கிரஹங்கள் இருப்பின் ஜலம் கிட்டுவதில்லை. ஜல ராசியில் சந்திரன் அல்லது சுக்ரன் இருப்பின் மிகுந்த ஜலம் கிடைக்கும். *(397-403)*

## *ஜல ராசிகள்*

ராசி சக்ரம் அமைத்து, பிரச்ன லக்னம்கண்டு, பிரச்ன லக்னத்திற்குக் கேந்திரங்களில் சந்திரன், சுக்ரன் இருந்தால் கூபபிரச்னம் சுபமாகும். ஜலம் கிடைக்கும்.

மேலும் ஒருவகை :- ராசி சக்ரம் அமைத்து, அதில் ஒரு கட்டத்தைத் தொடச்செய்து, தொட்ட கட்டம், ஜலராசியாகி அதில் சுக்ரனும் இருந்தால் அவ்விடத்தில் கிணறு வெட்ட நல்ல ஜலம் கிடைக்கும். *(405 - 406)*

## *கிணறுவெட்ட திக்பலம்*

வீட்டிலாக இருந்தாலும், தோப்பு - தோட்டம்போன்ற இடத்திலாக இருந்தாலும், ஈசான்ய மூலையில் கிணறு வெட்டினால் நலமுண்டு. கிழக்கு திசை - ஐச்வர்யம், அக்னிமூலை-புத்ரநாசம், தெற்கு-ஸ்த்ரீநாசம், நிர்ருதிமூலை-மனது துக்கம், மேற்கு ஐச்வர்யம், வாயுமூலை - சத்ருபீடை, வடக்கு - அற்பசுகம், நடுவில் கிணறு வெட்டுதல் கூடாது. *(406)*

## *ருதுபலன் (நக்ஷத்திரபலன்)*

ஹஸ்தம், சித்திரை, ஸ்வாதி, விசாகம், அனுஷம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, மூலம், ரேவதி, திருவோணம், அவிட்டம், சதயம், அச்வினி, பூசம், ரோஹிணீ, மிருகசீர்ஷம் ஆகிய 17 நக்ஷத்திரங்களில் ஒரு பெண் ருதுவானால் மிகவும் உத்தமம். அப்பெண்களுக்கு சௌக்யம், புத்திரலாபம், தீர்காயுஸ், சௌபாக்யம் ஆகியவை ஏற்படும், *(407)*

பூரம், பூராடம், பூரட்டாதி, பரணி, ஆயில்யம் ஆகிய 5 நக்ஷத்திரங்களில் ருதுவானால் சௌபாக்யக்குறைவு ஏற்படலாம். தக்க பரிஹாரம் செய்துகொள்ளவேண்டும். அவ்விதமே மகம், திருவாதிரை நக்ஷத்திரங்களில் ஏற்பட்டால் துயரம் ஏற்படும். அவ்வாறே புனர்பூசம், கேட்டையில் ருதுவானால் நல்லதல்ல. அப்பெண்களைப் பெற்றோர்களின் பார்வையில் இருக்கச் செய்யவேண்டியது அவசியம். கார்த்திகை நக்ஷத்திரத்தில் ருதுவானால் ஏழ்மை நிலை ஏற்படும். *(408)*

## *ருதுவான தினபலன்*

ஞாயிறில் - வியாதி, திங்களில் - பதிவிரதை, செவ்வாயில் - துயரம், புதனில் சந்ததி ஏற்படும், வியாழனில் சகலபோக போக்யங்களுடன் இருப்பாள். வெள்ளிக் கிழமையில் கணவனின் அன்பைப் பெற்றவளாவாள், சனிக் கிழமையில் துயரம் அனுபவிக்கலாகும். *(409)*

## *திதி பலன் (ருது)*

பௌர்ணமீ, அமாவாசை, ரிக்தை, அஷ்டமீ, ஷஷ்டி, துவாதசி, பிரதமை, பரிகயோகத்தின் முன்பாதி, வியதீபாதம், வைதிருதி, சந்தியாகால வேளை, கிரஹணகாலம் இவற்றில் ருதுவானால் மிகவும் அசுபம் ஏற்படலாம். *(410)*

## *ருது லக்ன பலன்கள்*

மேஷம் - தரமில்லை, ரிஷபம் - பதிவிரதை, மிதுனம் - ஸகல சம்பத்துகளும் ஏற்படும், கடகத்தில் - கண்காணிப்பில் இருக்கவேண்டியிருக்கும், சிம்மத்தில் - புத்ரலாபம், கன்னியில் - செல்வங்களுடன் விளங்குவாள், துலாத்தில் - திறமைமிக்கவளாக இருப்பாள், விருச்சிகம் - நல்லதில்லை, தனுர் லக்னம் முன்பாதியில் - சரியில்லை, பின்பகுதியில் - பதிவிரதை, மகரத்தில் கௌரவம் குறையலாம், கும்பத்தில் தான்யலாபம் ஏற்படும், மீனத்தில் - பதிவிரதையாக இருப்பாள் *(411 - 414)*

## ருதுகாலத்தில் அணிந்த வஸ்திர பலன்

ருது காலத்தில் ஒரு பெண் அணிந்துள்ள வஸ்திரம் கொண்டும் சிலபலன்களை அறியலாகும். ருது காலத்தில் வெண்ணிற ஆடை அணிந்திருந்தால் நற்குணவதியாக, சௌபாக்யம் உள்ளவளாக இருப்பாள். சிவப்பாடை அணிந்திருப்பின் நோய் ஏற்படலாம். கருப்புத்துணி அணிந்திருப்பின் அனுகூலமற்ற பலன் அமையலாம். மஞ்சள்-தங்கநிற ஆடை அணிந்திருந்தால் சகல சுகபோகங்களும் பெற்று விளங்குவாள். பச்சை நிற ஆடை அணிந்திருந்தால் பதிவிரதையாக இருப்பாள். கிழிந்த, கந்தலான ஆடை அணிந்திருப்பின் தௌர்பாக்யம் (சௌபாக்யத்திற்கு மாறான பலன்.) *(415 - 416)*

ருது காலத்தில் பட்டாடை அணிந்திருப்பின் புருஷனிடம் மாறாத அன்புள்ளவள். பல நிறமுள்ள ஆடை அணிந்திருப்பின் மிகுந்த திறமையுள்ளவள். குடும்ப நிருவாகத் திறமைமிக்கவள். மஞ்சள்நிற வஸ்திரம் அணிந்திருப்பின் நற்குணவதி. அழுக்கடைந்த ஆடை அணிந்திருப்பின் துயரவயப்படுவளாக இருப்பாள். *(417)*

## ருதுவான இடத்தின் பலன்

தேவாயலத்தில், நீர்நிலையில், பசு மாட்டுத்தொழுவம், தம் சொந்தவீடுவிட்டு வேறு வீட்டிற்குச் சென்ற சமயம் அல்லது வேறு ஊர் செல்லும் சமயம், வழியில், தாழ்ந்தவர் வீட்டில் ருதுவானால் அசுபமாகும். *(418)*

## ருது பலன் கேட்கவந்தவன் நின்ற திசைப்பலன்

ருது பலன் கேட்கவந்தவன் கிழக்கு திசையில் இருந்து கேட்டால் ருதுவானவளுக்கு ஐந்து பிள்ளைகள், வெள்ளைப் புடவை அணிந்திருப்பாள். அக்னிமூலையில் நின்று கேட்டால் ஒரு மகன் பிறப்பான், நீலநிற வஸ்திரம்

அணிந்திருப்பாள். தெற்கு திசையில் நின்று கேட்டால் எட்டு பிள்ளைகள், புத்தாடை அணிந்திருப்பாள். நிர்ருதி திசையில் (தென்மேற்கு) திசையில் இருந்து கேட்பின் சந்ததி ஏற்படுவது கடினம். அழுக்கடைந்த ஆடை அணிந்திருப்பாள். மேற்கு திசையில் இருந்து கேட்டால் ஆறு பிள்ளைகள், வெண்ணிற ஆடை அணிந்திருப்பாள், பதிவிரதை. வாயு திக்கில் (வடமேற்கில்) இருந்து கேட்டால் வெண்ணிற ஆடை, சக்களத்தி உண்டு. வடதிசையில் இருந்து கேட்டால் பத்து பிள்ளைகள், கிழிந்த ஆடை. ஈசான (வடகிழக்கு திசையில்) திக்கில் 11 பிள்ளைகள் கிழிந்த புடவை, இந்தப்படி பலன்கள் அறியவும். (422)

## ருது தர்சன பலன்கள்

ருதுவானதைத் தானே கண்டால் துக்கம். பிற சுமங்கலிப் பெண்கள் கண்டால் சௌபாக்யவிருத்தி, ஆயுள் விருத்தி. அமங்கலிகள் கண்டால் பாக்யக் குறைவு. பணி செய்யும் பெண்கள் கண்டால் சகலபோக பாக்ய விருத்தி ஏற்படும். கன்னிப்பெண்கள் கண்டால் பாக்யவிருத்தி, போக அனுபவம் ஏற்படும். புருஷன் கண்டால் ஏழ்மைநிலை. உணவு அருந்தும் சமயம் ஏற்படின் அல்லது படுக்கையில் ஏற்பட்டால் புருஷனுக்கு ஆகாது. (423)

## ருது லக்னத்திற்கு 7மிடத்தின் பலன்

ருதுவான லக்னத்திற்கு 7மிடத்தில் சனி இருந்தால் அமங்கலம். (குரு பார்வை பெற்றால் சுபமே.) செவ்வாய் இருந்தால் சிறைவாசம் ஏற்படும். குரு பார்வை ஏற்பட்டால் சுபபலன்தான். 7மிடத்தில் குரு இருப்பது நல்லதல்ல, தனநாசம். புதன் இருப்பின் மலடி. ராகு / கேது இருப்பின் ஏழ்மை. சூரியன் இருப்பின் துக்கம். சந்திரன் இருந்தால் புத்ர தோஷம் உண்டு. சுக்ரன் இருத்தல் கூடாது. (427)

ருதுவான லக்னத்திற்கு 7மிடத்தில் எந்த கிரஹமும் இல்லாமல் இருப்பதுதான் நல்லது. ஆயுள், புத்ர ஸம்பத்து ஏற்படும். 7ல் எந்த கிரஹம் இருந்தாலும் தோஷமே. (438)

## விஷமாஸம் - மலமாஸங்கள்

எந்த மாதத்தில் பௌர்ணமி - அமாவாஸ்யைகள் இல்லையோ அந்த மாதம் விஷமாஸம் எனப்படும். எந்த மாதத்தில் இரண்டு பௌர்ணமிகள் - அமாவாஸ்யைகள் வருகிறதோ அந்த மாஸம் மலமாதம் எனப்படும். இவ்விருவகை மாதங்களிலும் சுபகர்மங்கள் விலக்கப்படவேண்டும். *(429)*

## ஸம்ஸ்பர்ச மாதம் - அம்ஹஸ்பதி மாதம்

எந்த மாதத்தில் ஸங்க்ரமணம் இல்லையோ அந்த மாதம் ஸம்ஸ்பர்சம் என்று பெயர். ஒரு மாதத்தில் இரண்டு ஸங்க்ரமணம் (மாதப் பிறப்புக்கள்) நேரிட்டால் அதற்கு அம்ஹஸ்பதி என்று பெயர். இவ்விருவகை மாதங்களிலும் சுபகர்மாக்கள் விலக்கத்தக்கது. *(430)*

இதற்கு அபவாதம் : தனுஸ், மீனம், கடகம் இவற்றில் குரு பிரகாசமாக இருந்தால், இந்த 3 மாதங்களிலும் சுபகர்மாக்களைச் செய்யலாம். ஸம்ஸ்பர்ச தோஷமும், அம்ஹஸ்பதி தோஷம் இல்லை. *(431)*

குரு ஸ்வவர்கத்தில் இருந்து, சூரியன் ஸ்வ-உச்ச-மித்ர க்ஷேத்திரத்தில் இருந்தால் அதிமாஸ, மலமாஸ, ஸம்ஸ்பர்சாதி தோஷங்கள் இல்லை. *(432 - 433)*

## யாத்ரா விதி

ஆடி, கார்த்திகை, பங்குனி ஆகிய மூன்று மாதங்கள் தவிர மற்ற மாதங்களில் சுக்லபக்ஷத்தில் கோசாரத்தில் கிரஹநிலை அனுகூலமாக இருக்கிறபொழுது ரிக்தை, ஷஷ்டி, அஷ்டமீ, துவாதசீ இவையில்லாத திதிகளில், நந்தையில் கிழக்கு நோக்கியும், பத்ரையில் தெற்கு நோக்கியும் ஜயையில் மேற்கு நோக்கியும், பூர்ணையில் வடக்கு நோக்கியும் யாத்ரை கிளம்ப நலம்.

ஹஸ்தம், பூசம், அச்வினி, அனுஷம், அவிட்டம், ரேவதி, திருவோணம், மிருகசீர்ஷம் ஆகிய இந்த எட்டு நக்ஷத்திரங்களும் உத்தமம்.

ரோகிணி, புனர்பூசம், மூலம், சதயம், சித்திரை, உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி ஆகிய இந்த எட்டும் மத்யமம். பூரம், பூராடம், பூரட்டாதி, மகம், கேட்டை, பரணி, ஜன்மத்ரயம் (யாத்திரை செய்பவரின் ஜன்ம நக்ஷத்திரம், அனுஜன்ம நக்ஷத்திரம், த்ரிஜன்ம நக்ஷத்திரம்), கிருத்திகை, ஸ்வாதி, ஆயில்யம், விசாகம், திருவாதிரை, சித்திரை ஆகிய நக்ஷத்திரங்கள் விலக்கத்தக்கவை. திருவாதிரையும், பரணியும் அதிகம் தோஷமுள்ளவை. புதன், வெள்ளி, சனி, வியாழன், திங்கள் இவர்களின் வார - லக்னங்களும் சுபம். *(434 - 438)*

மிருகசீர்ஷம், அச்வினீ, பூசம், புனர்பூசம், ஹஸ்தம், அனுஷம், திருவோணம், மூலம், அவிட்டம், ரேவதி ஆகிய நாட்களில் பிராயணம் தொடங்கினால் சுபபலன் ஏற்படும் என்பதுடன், விரைவில் திரும்பிவந்துவிடலாம். *(439)*

## யாத்ரா லக்ன பலன்

தனுர் லக்னத்தில் பிரயாணப்பட்டால் சத்ருஜயம், ரிஷபத்தில் நன்மை, கன்யா லக்னத்தில் ஜ்வரம், கடகத்தில் பூமி லாபம், சிம்ம லக்னத்தில் சுகபோகம், விருச்சிக லக்னத்தில் உடலில் காயம், மேஷம் - மிதுனத்தில் மரணம், துலாத்தில் வெற்றி, மகரத்தில் சிறைவாசம், மீனத்தில் மழையால் பயம், கும்பத்தில் அடிபடுதல் ஆகிய பலன்கள் ஏற்படும். *(440)*

கேந்திரம், திரிகோணங்களில் சுபர்கள் இருக்க, கேந்திரம் அஷ்டமத்தில் பாபகிரஹம் இல்லாமல் இருந்தால் ஸர்வ கார்யஸித்தி ஏற்படும், இந்த விதி மாறுபட்டிருப்பின் பலனும் மாறுபடும். *(441)*

லக்னம், 2, 3, 5, 6, 8, 9, 10, 11, 12 ஆகிய இடங்களில் சுபகிரஹங்கள் இருந்தால் பிராயணம் சுபமாகும். சுக்ரன் 7ல் இருக்கலாகாது. 3, 6, 11மிடங்கள் தவிர்த்த மற்ற இடங்களில் அசுபர்கள் இருக்கத்தீமை. (3, 6, 11ல் அசுபர் இருப்பின் சுபம்.) யாத்ரா லக்னத்தில் குருவும், சுக்ரனும் இருந்தால் எல்லா தோஷங்களையும் போக்கி நன்மை அளிப்பர். (442)

## யாத்ரையில் சுபசகுனங்கள்

எதிரில் கன்னிப்பெண், பசு, பூர்ணகும்பம், தயிர், பழங்கள், புஷ்பங்கள் எடுத்துவருதல், சங்குஒலி, மிருதங்கம் முதலான வாத்யம், மாட்டுவண்டி, இரண்டு அந்தணர்கள், குதிரை, யானை, ரிஷபங்கள், பால்குடம், கொடி, கள்குடம், நல்ல மணல் (மண்), மீன், மாமிசம், கட்டுச்சாதம், பிணம், வேசிஸ்தீரி முதலானோர் வருதல் மங்களகரமான வார்த்தைகள் பேசப்படுதல் ஆகிய நிமித்தங்கள் ஏற்படின் யாத்ரைக்குச் சுபம் அளிப்பவை. (443)

## அபசகுனம்

எதிரில் மோர் எடுத்துவருதல், எண்ணெய் தேய்த்த தலையுடன் எதிரில் வருதல் அல்லது வழியில் காண நேரிடுதல், பாம்பு எதிரில் வருதல், தலைவிரிகோலமாக வருதல், ஆடையில்லமல் எதிரில் வருதல், விதவை, காலிக்குடம், ரத்தம் (ரத்தக்காயம் பட்டவனைக் காண நேரிடுதல்), விறகு சுமந்துவருகிறவன், பன்றி, சன்யாசி, மூக்கிழந்தவன் (மூக்கரையன்) சடைமுடி தரித்தவன், எண்ணெய் வாணியர், சிகப்பான புஷ்பங்கள், ஈர ஆடை அணிந்தவன், பித்துப்பிடித்தவன், மொட்டைத் தலை உள்ளவன் ஆகியவர் எதிர்பட்டால் காரியம் கெடும் என்பதுடன், மரண பயமும் ஏற்படலாம். (444)

யாத்திரைப்படும் சமயம் இடறினாலும், இடைப்புடவை நழுவினாலும், கீழேவிழ நேர்ந்தாலும்,

அழுகையுடன் புறப்பட்டாலும், சர்ப்பத்தைக் கண்டாலும் அல்லது முயலைக் கண்டாலும் யாத்திரையை நிறுத்துவது நல்லது. (445)

யாத்திரை புறப்படும் காலத்தில் "இங்கே வா" என்றோ, "நில்" என்றோ, "இதோ வருகிறேன்" என்றோ, அழுகை ஒலியையோ, கலஹத்தின் தொடர்பான ஒலிகளையோ கேட்க நேரிட்டால் யாத்திரையை மேற்கொள்ளலாகாது. (446)

***பிரயாண சமயத்தில் எம்மாதிரி அபசகுனம் ஏற்பட்டால் எத்தனை காலம் விலக்குவது என்பதுபற்றி:*** பிரயாணம் தொடங்கும் காலத்தில் தும்மல் ஒலி ஏற்பட்டால் ஒருநாள் தள்ளி பிரயாணத்தை மேற்கொள்ளலாம். அபசகுனங்கள் காணில் மூன்று நாட்கள் தள்ளிப் பிரயாணத்தை மேற்கொள்ளலாம். பாம்பையும், பூனையையும் காணில் 6 மாதங்கள் சென்று யாத்திரை மேற்கொள்ளலாம். முயலைக் கண்டாலோ முற்றிலும் பிரயாணத்தை நிறுத்திவிட வேண்டும். (447)

## *கிரஹநிலை கொண்டு சகுனநிலை அறிதல்*

குரு கேந்திரம், த்ரிகோணத்தில் இருந்தால், காகம் வலதுபுறம் போகும். குரு-சந்திரனோடு சேர்ந்துவரின் இரண்டு அந்தணர்கள் எதிர்படுவார்கள். சுக்ரனோடு சேர்ந்து இருப்பின் நரையான் வலமாகும். குரு - சனியுடன் கூடியிருப்பின் இடதுபுறம் கௌளி ஒலி எழும். லக்னத்திற்கு 5, 8ல் சுக்ரன் இருந்தால் காடை இடப்புறம் செல்லும். 3, 7, 10ல் சந்திரன் இருந்தால் கருடன் இடம்செல்லும், லக்னத்திற்கு 9ல்குரு இருந்தால் வலியன் இடமாகும், புதன் கேந்திரம் - திரிகோணத்தில் இருந்தால் இரு அந்தணர்கள் எதிர்படுவர். புதன், செவ்வாயுடன் கூடிவரின் மாமிசம் எடுக்கொண்டு எதிரில் வருவர். புதன், ராகுவுடன் கூடியிருப்பின் சாரைப்பாம்பு இடப்புறமிருந்து செல்லும். லக்னத்தில் கேது இருப்பின் சர்ப்பம் குறுக்கே செல்லும்.

குருவும், சுக்ரனும் லக்னத்தில் இருந்தால் பால்குடம் எதிரில் வரும். இவ்விதமாக கிரஹங்கள் அனுகூலப்படின் யாத்ரையின் பயனும் அனுகூலமாகும். பாதகப்படின் பலனும் பாதகப்படலாம். *(448 - 454)*

ஒரு அந்தணன் எதிர்பட்டால் அவனுடைய முகத்தில் மரணதேவதை இருக்கிறது. இரண்டு அந்தணர்கள் எதிர்பட்டால் காரியஸித்தி கட்டாயம் உண்டு. (ஒற்றைப் பிராமணன் எதிர்ப்பட்டால் பிரயாணத்தை நிறுத்திவிடலாம். இரண்டு அந்தணர்கள் எதிர்வரின் பிரயாணப்பயன் ஸித்தியாகும்.) *(455)*

## *ஸ்த்ரீயாத்திரை*

ஸ்த்ரீ யாத்திரை தொடங்கினால் ஆடி, புரட்டாசி, மாசி இந்த மூன்று மாதங்களையும்; புதன் - வெள்ளி ஆகிய இரண்டு கிழமைகளையும் பிரதமை திதி, உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி ஆகிய நக்ஷத்திரங்களையும் தவிர்க்க வேண்டும் என்பதுதான் இந்த ஸ்த்ரீ யாத்ரை விஷயத்தில் விசேஷம். இதற்குமுன்னால் சொல்லப்பட்ட திதிகள் - வாரங்களில் ஸ்த்ரீ யாத்திரை சுபம் *(456)*

சுபகிரஹங்கள் யாத்ரா லக்னத்திற்குக் கேந்திர, த்ரிகோணங்களில் இருந்தால் சுபத்தைச் செய்வர். ராகு, கேது, செவ்வாய், சனி இவர்கள் இருப்பின் பூனை, பாம்பு, தும்மல் முதலான அசுபசகுனங்களைச் செய்வர். *(457)*

## *கோயாத்திரை*

.கேட்டை, அச்வினி, மகம், மிருகசீர்ஷம், கார்த்திகை, பூரம், பூராடம், பூரட்டாதி, ரேவதி, சதயம், திருவோணம், விசாகம், பரணி, ரோகிணி நக்ஷத்திரங்களில்; திங்கள், சனிக்கிழமைகளில் அஷ்டமசுத்தியுள்ள ரிஷபம், மேஷம், மீனம் ஆகிய லக்னங்களில் கோயாத்திரை செய்ய நலமுண்டாம். *(458)*

முன்நாட்களில் கடல் கடந்து வியாபாரம் செய்பவர்கள் கடல் யாத்திரைக்கு அனுகூலமாகன காலம் அறிந்து நாள், நக்ஷத்திரம் பார்த்து யாத்திரை மேற்கொண்டனர். கடல் யாத்திரைக்கு திருவோணம், ஹஸ்தம், மிருகசீர்ஷம், அனுஷம், ஸ்வாதி, ரேவதி, அச்வினி, அவிட்டம் ஆகிய எட்டு நக்ஷத்திரங்களும் ஜல யாத்திரைக்கு உத்தமம். இதற்கு முன்பு கூறப்பட்ட விதிமுறைகளையும் சேர்த்துக்கொண்டு நன்கு ஆராய்ந்துணர்ந்து ஜல யாத்ரைக்கான (கப்பல் - படகு யாத்திரைக்கான) நாள் பற்றிக் கூறவேண்டும். *(459)*

## *பரஸ்தானம்*

முக்யமான சுபகார்யங்களுக்குக் கிளம்பும் நேரம் (நாள்) அசுபமாக இருக்கக்கூடும் என்பதால் அன்றைய (கிளம்ப வேண்டிய) நாளில் நல்ல நேரம் கண்டு, அந்த நேரத்தில் கிளம்பச்செய்து வேறு ஒருவருடைய வீட்டில் தங்கவைத்து சௌகர்யப்பட்டபொழுது கிளம்பலாம். அனுஷ நக்ஷத்திரத்தில் பரஸ்தானம் செய்துவைத்து, கேட்டையில் தங்கியிருந்து, மூலத்தில் புறப்படலாம். *(460)*

நல்ல லக்னத்திலாவது பிரயாணம் புறப்படலாம் அல்லது அந்த நல்ல லக்னத்தில் பரஸ்தானமாவது (பிரயாணம் புறப்படுவதற்கு முன்பாக நல்ல நேரத்தில் வேறு ஒரு இடம் சென்று தாற்காலிகமாகத் தங்குதல்) செய்தல் வேண்டும். அல்லது அந்த சுபநேரத்தில் தனக்கு மிகமுக்யமாகத் தோன்றும் பொருளை வேண்டிய நபர் மூலம் அனுப்பிவிட்டுப் பிறகு தாம் புறப்படலாம். *(461)*

## *ராஜ யாத்திரை*

ஹஸ்தம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, அச்வினி, அவிட்டம், திருவோணம், கேட்டை, ரேவதி, சித்திரை, ரோகிணி, மிருகசீர்ஷம் ஆகிய இந்த நக்ஷத்திரங்களில் ரிக்தை

இல்லாத திதிகளில், 5மிடம் சுத்தியுள்ள ஸ்திர லக்னத்தில், திங்கள், வியாழன், புதன், வெள்ளி வார - லக்ன - அம்சங்களில் அரசன், தம் ஆட்சிக்கு உட்பட்ட இடங்களில் அவ்வப்போது சிலநாட்கள் தங்குவதற்குப் புறப்படவேண்டும். *(462)*

## *யுத்த யாத்திரை*

முன்காலங்களில் போருக்குப் புறப்படும் அரசர்கள் சில குறிப்பிட்ட திதி-வார-நக்ஷத்திர காலங்களில் புறப்பட்டு வெற்றிபெறுவர். திருவாதிரை, கிருத்திகை, மகம், மூலம், பரணி, பூரம், பூராடம், பூரட்டாதி, சதயம், ஆயில்யம், ஸ்வாதி, சித்திரை, அச்வினி ஆகிய நக்ஷத்திரங்களில், கிருஷ்ணபக்ஷத்தில் ஜயா-ரிக்தா-விஷ்டிகளில், செவ்வாய்-வியாழன்-சனி-ஞாயிறு இவர்களுடைய வார லக்ன அம்சங்களில் போருக்குப் புறப்பட்டால் சத்ருக்களை வென்று திரும்புவர். இது இக்காலத்திற்குப் பொருத்தமற்றதாயினும் பகைவரை நீதி ஸ்தலத்தில் வெற்றிகொள்வதற்கு இந்த நாட்களைத் தேர்வுசெய்யலாம். *(463)*

***யாத்திரை சென்றவர்கள் திரும்பிவருவதற்கான காலம்:-*** லக்னத்தில் சூரியனும், சந்திரனும் இருந்தகாலம் ஹோரையானால் வருஷமும், பாகமானால் மாதமும், நவாம்சமானால் தினம் கண்டு திரும்பிவரும் காலம் காண வேண்டும்.

குரு-சந்திரன்-சுக்ரன் இவர்கள் கேந்திரத்தில் இருந்தால் (புறப்படும் காலத்தில்) யாத்திரை சென்றவர் ஒரு மாதத்தில் திரும்பலாம். அந்த கேந்திரங்கள் ஸ்வக்ஷேத்திரமானால் பதினைந்து நாட்களில் திரும்பலாம். அந்த கேந்திரங்கள் அவர்களின் ஸ்வக்ஷேத்திரமாகவும் இருந்து மித்ர கிரஹங்களால் பார்க்கப்பட்டால் எட்டு நாட்களில் திரும்பலாம் என்று காண்க. *(465)*

லக்னத்திற்கு த்ரிகோணங்களில் பாபர் இருந்தால் ஒன்பது நாட்களில் திரும்பிவரலாம். 11ல் இருந்தால் எட்டு நாட்களில் திரும்பலாம். இந்தப்படி த்ரிகோணங்களில் பாபர்கள் இருந்து மித்ர கிரஹங்களால் பார்க்கப்பட்டால் பத்து நாட்களில் காரியஸித்தியுடன் திரும்பலாம். 11ல் சூரியன் இருப்பின் போன இடத்தில் நட்பும் லாபமும் உண்டு என்று காண்க. (466)

## வக்ர - நீச கிரஹபலன்

கிரஹங்கள் வக்ரமானால் ஒன்றரை மாதங்களில் பலன் தருவார். யுத்தத்தில் தோற்றிருப்பின் 20 நாட்களில் பலன் தருவார். சத்ரு ஸ்தானத்தில் இருப்பின் ஒரு மாதத்தில் பலன். நீசமானால் எட்டு மாதங்களில் பலன் கொடுப்பார். (467)

நீச கிரஹங்கள் நீசமடையும் காலத்தில், தன் வாரம், ஹோரை, அம்சங்களில் இருப்பின் யாத்திரையில் சுபமாகத் திரும்பிவரச் செய்வர். அப்படியின்றி மாறாக இருப்பின் பலன் இல்லை. (468)

பிரயாண லக்னத்திற்கு 7ல் சந்திரன் அல்லது சுக்ரன் பலமுள்ளவனாக இருந்தால் நடுவழியில் நற்பலன் பெற்றுத் திரும்பலாம். அல்லது மீண்டும் பிரயாணம் நேரிடலாம். (469)

சுபகிரஹங்கள் கேந்திர - திரிகோணங்களில் 2, 11, உச்சஸ்தானம், மித்ரக்ஷேத்ரம் ஆகியவற்றில் இருந்தால், பாப கிரஹங்கள் 3-6-11ல் இருந்தால் யாத்திரை சென்றவர்களுக்குத் தனலாபத்தைத் தருவர். விரைந்துசென்று சத்ருக்களை அழித்து ஒரு மாதத்திற்கு உள்ளாகவே திரும்பிவரலாம். (470)

சனியும், புதனும் வக்ரமில்லாமல், கேந்திரங்களில் இருந்தாலும், அவர்கள் மித்ர கிரஹங்களால் பார்க்கப்பட்டாலும் யாத்ரை செல்பவர் க்ஷேமத்துடனும் லாபத்துடனும் இருபத்தொரு நாட்களில் திரும்பிவருவார். குருவும், சுக்ரனும் கேந்திரத்தில் இருந்தாலும், யாத்ரைக்கான பிரயாண லக்னத்திலேயே இருந்தாலும், இவ்விதம் சந்திரன் இருந்தாலும் யாத்திரை சென்றவர் வெற்றிபெற்று யாத்திரையின் சுபபலனை அடைந்து பத்து தினங்களில் திரும்புவார். *(472)*

## *ஸாத்விக - ராஜஸ - தாமஸ வேளைகள்*

வியாழன், திங்கட்கிழமைகளுக்குச் சூரியோதய காலத்தில் ஸாத்விக வேளை, நான்கு நாழிகைகள் (1½ மணி - 3¾ நாழிகையை நான்கு நாழிகைகள் என்று கூறப்பட்டுள்ளது) அதற்குமேல் நான்கு நாழிகைகள் ராஜஸவேளை, அதற்குமேல் நான்கு நாழிகைகள் தாமஸவேளையாகும்.

செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் உதயகாலத்தில் 1½ மணி ராஜஸவேளை, அதற்குமேல் 1½ மணி தாமஸவேளை, அதற்குமேல் 1½ மணி ஸாத்விகவேளையாகும்.

ஞாயிறு, சனி, புதன்கிழமைகளில் உதயகாலத்தில் 1½ மணி தாமஸவேளை, அதற்குமேல் 1½ மணி ஸாத்விக வேளை, அதற்குமேல் 1½ மணி ராஜஸவேளையாகும்.

ஸாத்விகவேளையில் சுபகர்மாக்கள், ராஜஸ வேளையில் வழக்கு சம்பந்தமான கார்யங்கள், க்ரூர கார்யங்களைத் தாமஸவேளையிலும் செய்யவேண்டும்.

## ஸாத்விக - ராஜஸ - தாமஸ நேரங்கள் - அட்டவணை

| மணி | வியாழன் திங்கள் | செவ்வாய் வெள்ளி | சனி, ஞாயிறு புதன் |
|---|---|---|---|
| **பகல்** | | | |
| 6.00 - 7½ | ஸாத்விகம் | ராஜஸம் | தாமஸம் |
| 7½ - 9.00 | ராஜஸம் | தாமஸம் | ஸாத்விகம் |
| 9.00 - 10½ | தாமஸம் | ஸாத்விகம் | ராஜஸம் |
| 10½ - 12.00 | ஸாத்விகம் | ராஜஸம் | தாமஸம் |
| 12.00 - 1½ | ராஜஸம் | தாமஸம் | ஸாத்விகம் |
| 1½ - 3.00 | தாமஸம் | ஸாத்விகம் | ராஜஸம் |
| 3.00 - 4½ | ஸாத்விகம் | ராஜஸம் | தாமஸம் |
| 4½ - 6.00 | ராஜஸம் | தாமஸம் | ஸாத்விகம் |
| **இரவு** | | | |
| 6.00 - 7½ | தாமஸம் | ஸாத்விகம் | ராஜஸம் |
| 7½ - 9.00 | ஸாத்விகம் | ராஜஸம் | தாமஸம் |
| 9.00 - 10½ | ராஜஸம் | தாமஸம் | ஸாத்விகம் |
| 10½ - 12.00 | தாமஸம் | ஸாத்விகம் | ராஜஸம் |
| 12 .00 - 1½ | ஸாத்விகம் | ராஜஸம் | தாமஸம் |
| 1½ - 3.00 | ராஜஸம் | தாமஸம் | ஸாத்விகம் |
| 3.00 - 4 | தாமஸம் | ஸாத்விகம் | ராஜஸம் |
| 4 - 6.00 | ஸாத்விகம் | ராஜஸம் | தாமஸம் |

இதன் பலன் : தனுஸ், கடகம், மீனம், கன்னி ஆகிய லக்னங்களில் ஸாத்விககாலம் கூடினால் அதில் யாத்திரை செல்பவர்களுக்கு அனுகூலமில்லை; தீமையுண்டு. ரிஷபம், துலாம், விருச்சிகம், மேஷம் இவைகளுடன் ராஜஸவேளை கூடினால் அதில் யாத்திரை புறப்படுகிறவர்களுக்கும் தீமையே. மிதுனம், கும்பம், சிம்மம், மகரம் இவைகளுடன் தாமஸவேளை கூடினால் யாத்ரா லக்னமாக இருக்குமாகில்) யாத்திரை செல்பவர்களுக்கு நலமில்லை. கடுமையான தீமைகளை எதிர்நோக்கவேண்டியிருக்கும். (474)

***காலஹோரை :*** சூரிய உதயகாலம் முதல் மறுநாள் சூரிய உதயம் ஆகும் வரையில் ஒருநாள் என்பது இந்திய ஜோதிஷ சாஸ்திரத்தின் கணக்கு. சூரிய உதயம் 6-00 என்று வைத்துக் கொண்டால் அதுமுதல் ஒருமணி அந்தக் கிழமைக்குரிய ஹோரையாகும். சூரியன்-சுக்ரன்-புதன்-சந்திரன்-சனி-குரு-செவ்வாய் என்ற வரிசைப்படி ஹோரை காலமாகும்.

## கிரஹ ஹோரைகள்

| | கிழமைகள் | 6-7 | 7-8 | 8-9 | 9-10 | 10-11 | 11-12 | 12-1 | 1-2 | 2-3 | 3-4 | 4-5 | 5-6 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பகல் | ஞாயிறு | சூரி | சுக் | புத | சந் | சனி | குரு | செ | சூரி | சுக் | புத | சந் | சனி |
| | திங்கள் | சந் | சனி | குரு | செ | சூரி | சுக் | புத | சந் | சனி | குரு | செ | சூரி |
| | செவ்வாய் | செ | சூரி | சுக் | புத | சந் | சனி | குரு | செ | சூரி | சுக் | புத | சந் |
| | புதன் | புத | சந் | சனி | குரு | செ | சூரி | சுக் | புத | சந் | சனி | குரு | செ |
| | வியாழன் | குரு | செ | சூரி | சுக் | புத | சந் | சனி | குரு | செ | சூரி | சுக் | புத |
| | வெள்ளி | சுக் | புத | சந் | சனி | குரு | செ | சூரி | சுக் | புத | சந் | சனி | குரு |
| | சனி | சனி | குரு | செ | சூரி | சுக் | புத | சந் | சனி | குரு | செ | சூரி | சுக் |
| இரவு | ஞாயிறு | குரு | செ | சூரி | சுக் | புத | சந் | சனி | குரு | செ | சூரி | சுக் | புத |
| | திங்கள் | சுக் | புத | சந் | சனி | குரு | செ | சூரி | சுக் | புத | சந் | சனி | குரு |
| | செவ்வாய் | சனி | குரு | செ | சூரி | சுக் | புத | சந் | சனி | குரு | செ | சூரி | சுக் |
| | புதன் | சூரி | சுக் | புத | சந் | சனி | குரு | செ | சூரி | சுக் | புத | சந் | சனி |
| | வியாழன் | சந் | சனி | குரு | செ | சூரி | சுக் | புத | சந் | சனி | குரு | செ | சூரி |
| | வெள்ளி | செ | சூரி | சுக் | புத | சந் | சனி | குரு | செ | சூரி | சுக் | புத | சந் |
| | சனி | புத | சந் | சனி | குரு | செ | சூரி | சுக் | புத | சந் | சனி | குரு | செ |

## *ஹோரை*

காலஹோரை என்பது 2½ நாழிகை காலமாகும். குரு, செவ்வாய், சூரியன், சுக்ரன், புதன், சந்திரன், சனி என்ற வரிசையில் காலஹோரை அமையும். வியாழக்கிழமையை எடுத்துக்கொண்டால் சூரிய உதயத்திலிருந்து முதல் 2½ நாழிகை (அதாவது 1 மணிநேரம் - காலை 6-00 மணிமுதல் காலை 7-00 மணிவரை) குருஹோரையே முதல் ஹோரை ஆகிறது. அடுத்து 2½ நாழிகை செவ்வாய் ஹோரை, அடுத்து 2½ நாழிகை சூரிய ஹோரையாகும், அதற்கு அடுத்த 2½ நாழிகை சுக்ரஹோரையாகும். இந்த அளவில் காலஹோரையைக் கணக்கிட்டுக் கொள்ளவேண்டும். விவரத்திற்கு அட்டவணையைக் காண்க. (475)

## *ஹோரா பலன்*

குரு ஹோரை - காரியஸித்தி, பொருள் வரவு; செவ்வாய் ஹோரை - சண்டை ஏற்படும்; சூரிய ஹோரை - மரணம்; சுக்ரஹோரை - சுபமங்களம்; புதன் ஹோரை - மகிழ்ச்சி; சந்திரஹோரை - ஸௌக்கியம்; சனிஹோரை - கலகம் என்றவாறு பலன்கள் அமையும். சுபபலன் கருதினால் சுபஹோரைகளில் பணிகளைத் தொடங்கவும். (476)

## *குளிகன்*

பகல் பொழுதை எட்டு பாகமாகச் செய்தால் அதன் முதலாவது பாகம், எட்டாவது பாகம் ஆகியவற்றிற்கு அந்த வாராதிபதியே அதிபர். அடுத்துள்ள பாகங்களுக்குத் தொடரும் வாராதிபதிகள் அதிபர்கள். அவற்றுள் சனியின் காலம் எதுவோ அது குளிகன் எனப்படும்.

## *குளிகனில் செய்யத்தக்கக் காரியங்கள்*

தானியங்களைச் சேமித்துவைக்க, (பத்தாயம், குதிரில் தானியங்கள் போடுவதற்கு) எண்ணெய் ஸ்நானம் செய்ய,

வயலில் அறுவடை தொடங்க, தானியத்தை விலைக்குப் போடுவதற்கு, வாங்குவதற்கு, கோயில் தேவதா மூர்த்திகளுக்குக் கண் திறக்க, புது ஆபரணங்கள் அணிவதற்கு, கடன் தீர்ப்பதற்கு, யாகம் ஆரம்பம் செய்ய, கிருஹப்ரவேசம், கிராமப் பிரவேசம் செய்ய, ராஜ்யாபிஷேகம் செய்ய, மந்திரி சபையில் பொறுப்பேற்பதற்கு, உத்தியோகத்தில் பொறுப்பு மேற்கொள்வதற்கு, குதிரை முதலான வாஹனங்களில் ஏற, மந்திர உபதேசம் பெறுவதற்கு, அபிசாரஹோமம் நடத்த, பெரிய தானங்கள் செய்ய, வேதாரம்பம் செய்ய, புதுவிடத்திற்குத் தூண்கள், வாசல்கள் அமைக்க, யானை, குதிரை கட்டுவதற்குக் குளிகன் காலம் உகந்தது. (478 - 481)

## யமகண்டகம்

பலதீபிகையில் யமகண்டம்[1] என்பதை குரு பகவானுக்கு இணையாகச் சொல்லப்படுகிறது. ஆனால் இங்கு யமகண்டகம் என்ற காலத்தை எந்தச் சுபகர்மாக் களையும் செய்வதற்கு ஏற்றதல்ல என்று கூறப்பட்டுள்ளது. நன்மையைக் கருதுபவர் சுபகர்மாக்களை யமகண்டக காலத்தில் செய்யலாகாது என்று இதன் பொருள். ஆனால் சிலர் யமகண்டகம் யமனுக்கே முள்போன்றது என்பதால் சுபகாலமாகக் கருதுகிறார்கள்.

---

1. शनिवद् गुलिके प्रोक्तं गुरुवद् यमकण्टके ।

குளிகனுக்குச் சனியைப் போலவும், யமகண்டகனுக்குக் குருவைப் போலவும் பலன் காணவேண்டும் என்பது பலதீபிகை 25ஆவது அத்யாயம், 20வது ச்லோகம் கூறுகிறது. மேலும்,

दोषप्रदाने गुलिको बलीयान् शुभप्रदाने यमकण्टकः स्यात् ।

கெடுதலைச் செய்வதில் குளிகன் பிரபலன், நன்மை செய்வதில் யமகண்டகன். எனவே, சிலர் யமகண்டகத்தைப் பெரிய தோஷமாகவே கருதுவதில்லை. ( பலதீபிகை 25 அத்யாயம், 19ம் ச்லோகம்)

## நக்ஷத்திர தியாஜ்யம்

நக்ஷத்திரங்கள் பலவற்றின் சில பாகங்கள் அசுபமாகக் கூறப்பட்டுள்ளன. கிருத்திகைக்கு 30 நாழிகைக்குமேல் 3 ¾ நாழிகை தியாஜ்யம். ரோகிணிக்கு 40 நாழிகைக்குமேல், மிருகீர்ஷத்திற்கு 14 நாழிகைக்குமேல், திருவாதிரைக்கு 21 நாழிகைக்குமேல், புனர்பூசம் மற்றும் பூசத்திற்கு 20 நாழிகைக்குமேல், ஆயில்யத்திற்கு 32 நாழிகைக்குமேல், மகத்திற்கு 30 நாழிகைக்குமேல், பூரம் 20 நாழிகைக்குமேல், உத்தரத்திற்கு 18 நாழிகைக்குமேல், ஹஸ்தத்திற்கு 21 நாழிகைக்குமேல், சித்திரைக்கு 20 நாழிகைக்குமேல், ஸ்வாதி மற்றும் விசாகத்திற்கு 14 நாழிகைக்குமேல், அனுஷத்திற்கு 10 நாழிகைக்குமேல், கேட்டைக்கு 14 நாழிகைக்குமேல், மூலத்திற்கு 20 நாழிகைக்குமேல் மற்றும் 54 நாழிகைக்குமேல், பூராடத்திற்கு 24 நாழிகைக்குமேல், உத்தராடத்திற்கு 20 நாழிகைக்குமேல், திருவோணம் மற்றும் அவிட்டத்திற்கு 10 நாழிகைக்குமேல், சதயம் 18 நாழிகைக்குமேல், பூரட்டாதிக்கு 16நாழிகைக்கு மேல், உத்தரட்டாதிக்கு 24 நாழிகைக்கு மேல், ரேவதிக்கு 30 நாழிகைக்குமேல், அச்வினிக்கு 50 நாழிகைக்குமேல், பரணிக்கு 24 நாழிகைக்குமேல் 3 ¾ நாழிகை தியாஜ்யமாகும் - விஷகாலமாகும். (483)

விஷகடிகை (தியாஜ்யத்தில்) விலக்கத்தக்க சுபங்கள் - மனையாளுடன் படுக்கை பகிர்தல், விருந்துண்ணல், விசேஷ தெய்வ வழிபாடு (பிரார்த்தனை செலுத்துதல்) ஷேவிங் மற்றும் எண்ணெய் தேய்த்துக்குளித்தல், உபநயனம், யாத்திரை, அக்னிஸந்தானம் செய்வது, புதுவேலை தொடங்குதல் (எந்த வேலையானாலும்) மரவேலை மேற்கொள்ளுதல் போன்றவற்றை தியாஜ்ய காலத்தில் செய்யலாகாது(484)

## திதி விஷகாலம்

வளர்பிறை பிரதமை முதல் திதி விஷகாலம் கூறப்படுகிறது. பிரதமையில் 24 நாழிகைக்குமேல் 4

நாழிகைகளும், த்விதீயையில் 12 நாழிகைக்குமேலும், த்ருதீயையில் 55 நாழிகைக்குமேலும், சதுர்த்தியில் 55 நாழிகைக்கு மேலும், பஞ்சமியில் 54 நாழிகைக்குமேலும், ஷஷ்டியில் 5 நாழிகைக்குமேலும், ஸப்தமியில் 33 நாழிகைக்குமேலும், அஷ்டமியில் 10 நாழிகைக்குமேலும், நவமியில் 21 நாழிகைக்குமேலும், தசமியில் 7 நாழிகைக்கு மேலும், ஏகாதசியில் 9 நாழிகைக்குமேலும், த்வாதசியில் 10 நாழிகைக்குமேலும், திரயோதசியில் 30 நாழிகைக்குமேலும், சதுர்தசியில் 10 நாழிகைக்குமேலும், பௌர்ணமியில் மற்றும் அமாவாசையில் 32 நாழிகைக்குமேல் 4 நாழிகைகளும் விஷகாலமாகும். (485 - 486)

## வார விஷம்

ஞாயிற்றுக்கிழமை 32 நாழிகைக்கு மேலும், திங்கள் 24 நாழிகைக்குமேலும், செவ்வாய் 31 நாழிகைக்குமேலும், புதன் 41 நாழிகைக்குமேலும், வியாழன் 31 நாழிகைக்கு மேலும், வெள்ளி 21 நாழிகைக்குமேலும், சனி 14 நாழிகைக்கு மேலும் விஷகாலம். (487)

**இதில் வேறுவகை :** புதனுக்கும் - சனிக்கும் ஆதியில் 4 நாழிகை, உதயாதி 4 நாழிகையும், திங்கள் - வெள்ளிக்கு நடுவில் 4 நாழிகையும், செவ்வாய் - ஞாயிறு - வியாழக் கிழமைகளுக்கு முடிவில் 4 நாழிகைகளும் விஷகாலம் என்றும் கூறப்படுகிறது. (488)

## தியாஜ்ய பலம்

தியாஜ்யம் நான்கு நாழிகையாகும். இந்த விஷ காலத்தில் முதல் ஒரு நாழிகையில் ஏதேனும் சுபகாரியம் மேற்கொள்ளப்பட்டால் எடுத்த காரியம் நாசம். 2ம் நாழிகையில் செய்பவர்களுக்குத் தீமை. 3ம் நாழிகையில் ஸகலநாசம், 4ம் நாழிகையில் குலநாசம் என்பதால் தியாஜ்ய காலத்தில் சுபச்செயல்களைத் தவிற்பபது நலம். (489)

## ராசி விஷம்

மேஷம், விருஷபம், தனுஸ், கன்னி இந்த நான்கும் ஆரம்பத்தில் ¾ நாழிகை புஜங்க எனும் விஷகாலம். மீனம், மகரம், கடகம், விருச்சிகம் இந்த நான்கும் அந்தத்தில் ¾ நாழிகை வராஹம் எனும் விஷகாலமாகும். மிதுனம், சிம்மம், துலாம், கும்பம் இந்த நான்கும் நடுவில் க்ருத்ரம் எனும் விஷ காலமாகும். (490)

## திதிசூலம்

பிரதமை - நவமீ கிழக்கே சூலம், த்விதீயை - தசமி வடக்கே சூலம், த்ருதீயை - ஏகாதசி அக்னிமூலை, சதுர்த்தி - துவாதசி நிருருதி, பஞ்சமி, திரயோதசி தெற்கே சூலம், ஷஷ்டி - சதுர்தசி மேற்கில் சூலம். திதி சூலத்தில் யாத்திரை செய்வது சுபமல்ல. தீமை ஏற்படலாம். (492)

## வாரசூலம்

திங்கள், சனி கிழக்கில் சூலம். வியாழன் தெற்கில் சூலம், ஞாயிறு, வெள்ளி மேற்கில் சூலம். செவ்வாய், புதன் வடக்கே சூலம். (493)

## வார சூலத்திற்குப் பரிஹாரம்

வியாழக்கிழமை 22 நாழிகை வரையில்தான் சூலதோஷம். செவ்வாய்க்கிழமை 12 நாழிகை வரையில்தான் சூலதோஷம். ஞாயிறு - வெள்ளிக்கிழமைகளில் 15 நாழிகை வரையில்தான் சூலதோஷம். திங்கள் - சனிக்கிழமைகளில் 8 நாழிகை வரையில்தான் சூலதோஷம். குறிப்பிட்ட நாழிகைகள் கழிந்துவிட்டால் சூலதோஷமில்லை. மிகுந்த காலத்தில் பிராயணம் செய்ய சுபமே. (494 - 495)

## வாரபலன்

சில குறிப்பிட்ட கிழமைகளில் குறிப்பிட்ட திசைகளில் பிரயாணப்பட்டுச் சென்றால் சிறந்த நன்மைகளும் ஏற்படுகின்றன என்பதை இங்கு குறிப்பிடுகிறார்கள். (496)

### நக்ஷத்திர சூலம்

கேட்டை - அவிட்டம் கிழக்கே சூலம். அச்வினி - திருவோணம் தெற்கே சூலம். ரோகிணி - பூசம் மேற்கே சூலம். ஹஸ்தம்-உத்தரம்-உத்தராடம்-உத்தரட்டாதி வடக்கில் சூலம். இந்த நக்ஷத்திர சூலத்தில் பிரயாணம் செய்வதும் விலக்கத்தக்கது. (497)

### நக்ஷத்திரசூல அபவாதம்

கிருத்திகை, திரயோதசி, பரணி இந்த மூன்றுக்கும் 7 நாழிகைகள்தான் தோஷம். 7 நாழிகைக்குமேல் சூலதோஷம் இல்லை. இதுபோலவே மகம்-பூரம்-பூராடம்-பூரட்டாதி ஏகாதசிக்கு 16 நாழிகைக்குமேல் தோஷமில்லை. கேட்டையும்-திருவோணமும் கிழக்கில் சூலம். மகம்-அச்வினி இரண்டும் தெற்கில் சூலம். ரோகிணியும் - பூசமும் மேற்கில் சூலம். உத்தரம்-உத்தராடம்-உத்தரட்டாதி இந்த மூன்று நக்ஷத்திரங்களில் வடக்கு நோக்கிப் பிரயாணம் மேற்கொள்ளலாகாது. சென்றவர் ப்ரம்மாவானாலும் திரும்பமாட்டார்.

### சந்திரகண்டகம்

மேஷம், ரிஷபம், மேற்கு திசையாகும். மிதுனம், வாயு மூலை. கடகம், சிம்மம் இரண்டும் வடக்கு திசையாகும். கன்னி, ஈசான்ய மூலையாகும். துலாம், விருச்சிகம் இரண்டும் கிழக்கு திசையாகும். தனுஸ், அக்னிமூலையாகும். மகரமும் கும்பமும் தெற்கு திசையாகும். மீனம் நிருருதி மூலையாகும். இவ்வாறு கணக்கிட்டு எந்த ராசியில் சந்திரன் இருக்கிறானோ அந்த ராசி குறிப்பிடும் திசையில் பிரயாணம் செய்யலாகாது. இது சந்திரகண்டம் எனப்படுகிறது. (502)

### மஹாசூலம்

அபிஜித்துடன் கூடிய நக்ஷத்திரங்கள் மொத்தம் 28. கிருத்திகை முதல் 28 நக்ஷத்திரங்களையும் கிழக்கு முதல் 7 - 7ஆக வைத்து, எந்த திக்கில் எந்த நக்ஷத்திரம் இருக்கிறதோ அந்த நக்ஷத்திரத்தில் அந்த திக்கில் பிரயாணம் செய்யலாகாது. (503)

## அடலப்ரமணம்

சூரியன் இருக்கின்ற நக்ஷத்திரம் முதல் சந்திரன் இருக்கும் நக்ஷத்திரம் வரையில் எண்ணி 7ல் கழித்தால் 2, 6 ப்ரமணம் ஆகும். 3, 7 ப்ரஹரமாகும் (பிறர் தாக்குதலுக்கு உள்ளாக நேரிடலாம.) 1, 5, 4 வருமானால் சுபம். அவற்றில் பிரயாணம் செய்ய சுபமுண்டு. (504)

அடலம் இரண்டு நாழிகை நேரம் ப்ரமணம் ஐந்து நாழிகையாகும். இவை தள்ளி மிகுந்த காலத்தில் யாத்திரை செய்ய உத்தமம். (505)

## யாத்திரா பஞ்சகம்

பிரயாண தினத்தில் திதி-வாரம்-நக்ஷத்திரம்-லக்னம் இவற்றைக் கூட்டி 15ஆல் பெருக்கி, 9ஆல் கழித்து, 5 மிகுந்தால் ரோகபஞ்சகம்; 12ஆல் பெருக்கி, 9ஆல் கழிக்க 5 மிகுந்தால் அக்னிபஞ்சகம், 10ஆல் பெருக்கி, 9ஆல் கழிக்க 5 மிகுந்தால் ராஜபஞ்சகம், 8ஆல் பெருக்கி, 9ஆல் கழிக்க 5 மிகுந்தால் சோரபஞ்சகம். 4ஆல் பெருக்கி, 9ஆல் கழிக்க 5 மிகுந்தால் ம்ருத்யுபஞ்சகம்.

ரோகபஞ்சகமானால் வியாதி, அக்னி பஞ்சகமானால் நெருப்பு பய்ம், ராஜபஞ்சகமானால் ராஜபயம், சோர பஞ்சகமானால் திருடர்பயம் ஏற்படும். மிருத்யு பஞ்சகமானால் மரணபயம் ஏற்படும். (506)

## ம்ருத நக்ஷத்ரம்

சூரியன் விட்ட நக்ஷத்ரம், இருக்கிற நக்ஷத்திரம், இருக்கப்போகும் நக்ஷத்திரம் இம்மூன்றும் ம்ருத நக்ஷத்திரங்கள் ஆகும். அதனை அடுத்துள்ள 7 நக்ஷத்திரங்கள் அர்தஜீவன் (பாதி ஜீவன்) உள்ளவை. அதற்குமேல் ஒரு நக்ஷத்திரம் ம்ருதம். அதற்கு மேல்வரும் 8 நக்ஷத்திரங்கள் பூர்ண ஜீவன். அதற்குமேல் உள்ள ஒரு நக்ஷத்திரம் மிருதம். அதற்குமேல் வரும் 7 நக்ஷத்திரங்கள் அர்தஜீவன்கள். (507)

சூரியன் இருக்கும் நக்ஷத்திரம் முதல் நான்கு நக்ஷத்திரங்கள் குருடு. அதற்குமேலுள்ள 4 நக்ஷத்திரங்கள் ஒரு கண் உள்ளவை. அதற்குமேல் 12 இரண்டு கண் உள்ளவை. அதற்குமேல் நான்கு குருடு. அதற்குமேல் மூன்று ஒருகண் இல்லாதவை.)

### இருகண்ணுள்ள, ஒரு கண்ணுள்ள, குருடான திதிகள்

த்விதீயை, த்ருதீயை, பஞ்சமீ, ஸப்தமீ, திரயோதசி, சதுர்தசி இந்த ஆறும் இரண்டு கண்கள் உள்ளவை. ப்ரதமை, பௌர்ணமி, அமாவாசை, அஷ்டமீ, ஏகாதசி, தசமீ, துவாதசி இந்த 7 திதிகளும் ஒற்றைக்கண் உள்ளவை. சதுர்த்தி, ஷஷ்டி, நவமீ இம்மூன்றும் குருடு. *(509 - 510)*

### ஊர்த்வோதயம் (சிரோதய) முதலான ராசிகள்

மிதுனம், விருச்சிகம், கும்பம், சிம்மம், கன்னி, துலாம் இவை ஆறும் சிரோதய ராசிகள். மீனம் உபயோதய ராசி. மேஷம், ரிஷபம், கடகம், தனுஸ், மகரம் இந்த ஐந்தும் பிருஷ்டோதய ராசிகள். ப்ருஷ்டோதய ராசிகளில் சுபகர்மாவைச் செய்யலாகாது.

### லக்னம் - தியாஜ்யத்துடன் இருந்தால்

ஒரு லக்னத்தின் ஆரம்பகாலத்தில் தியாஜ்யம் இருந்தால் தியாஜ்யகாலம் சென்றதும் மிகுதி காலத்தில் சுபகர்மாக்கள் செய்யலாம். ஒரு லக்னத்தின் முடிவில் தியாஜ்யம் இருக்குமானால் அந்த லக்னத்தையே விலக்கிட வேண்டும். *(512)*

### பகல் குருடு - இரவுக்குருடு முதலான ராசிகள்

மேஷம், விருஷபம், சிம்மம் இந்த மூன்றும் பகலில் குருடு. மிதுனம், கடகம், கன்னி இந்த மூன்றும் இரவில் குருடு. *(513)*

குருட்டு ராசியில் செய்யப்படும் கர்மா பலன் தராது. ஒருகண் குருடான ராசியில் சுபகர்மாக்கள் செய்வதும் சுபமல்ல. இருகண் உள்ள ராசியில் சுபகர்மாக்கள் நலம்தரும். ஒற்றைக்கண் ராசியும் (பலமுள்ளதாக) சுபகிரஹ சம்பந்தம், பார்வை முதலான காரணத்தால் பலமுள்ளதாக இருந்தால் அதிலும் சுபம் செய்யலாம். *(514)*

## *செவிடு ராசிகள்*

துலாம், விருச்சிகம் இருராசிகளும் முற்பகலில் செவிடு. தனுசு, மகரம் இரண்டும் பிற்பகலில் செவிடு. கன்னியும், கடகமும் நண்பகலில் குருடு. கும்பமும், மீனமும் காலை சந்தி, மாலை சந்திகளில் நொண்டி. *(515)*

குருட்டு ராசிகளில் சுபம் செய்தால் கார்யநாசம். செவிட்டு ராசிகள் பொருள் நஷ்டம். நொண்டி ராசிகள் ஆயுள்குறைவு. ஆகையால் இந்த ராசிகள் சுபகர்மங்களில் விலக்கத்தக்கவை. *(516)*

## *மழை யோகம்*

ஆஷாட (ஆனி) மாதத்தில் வளர்பிறை பஞ்சமீ ஞாயிற்றுக்கிழமையுடன் கூடுமானால் மழை இல்லை. திங்கட்கிழமையுடன் கூடிவந்தால் பெருமழை பெய்யும். செவ்வாயுடன் கூடிவந்தால் போர் நிகழலாம். புதன்கிழமை யுடன் கூடிவந்தால் காற்றுவீசும். வியாழக்கிழமையுடன் கூடிவந்தால் சுபிக்ஷம். வெள்ளிக்கிழமையுடன் கூடிவந்தால் பெருவெள்ளம் ஏற்படும். சனிக்கிழமையுடன் கூடிவந்தால் கலகம் விளையலாம். *(517)*

ஆடி மாதத்தில் வளர்பிறை நவமியோடு ஸ்வாதி நக்ஷத்திரம் கூடிவந்தால் காற்றும் இல்லை, மழையும் இல்லை. துர்பிக்ஷம் (பஞ்சம்) ஏற்படும். அந்த நாட்டிலிருந்து வெளியேறிவிடலாம். *(519)*

## பெருங்காற்று யோகம்

ஒரு லக்னத்தில் சந்திரனும், சுக்ரனும், புதனும், செவ்வாயும் இருந்தால் அவர்களுக்கு 12ல் சூரியனும், 7ல் சனியும் இருந்தால் பெரும் காற்று வீசும். (புயல் என்றும் கொள்ளலாம்.) (520)

சுக்ரனும், புதனும், சூரியனும், சந்திரனும் தனுஸில் இருக்கும் சமயம் 12மிடமான விருச்சிகத்தில் செவ்வாய் இருந்தால் மலையையும் புறட்டும் காற்று வீசலாம். (521)

கார்த்திகை மாதத்தில் சந்திரன் மறையும் அமாவாசை யுடன் ஞாயிற்றுக்கிழமை, சனிக்கிழமை, செவ்வாய்க்கிழமை கூடிவந்து, ஸ்வாதி நக்ஷத்திரத்தில் சுக்ரனும், குருவும் புதனும் இருந்தால் பூமியில் மனிதர்கள், விலங்குகள், பறவைகள் முதலான ஸகல பிராணிகளும் காற்றினாலோ, வெள்ளத்தாலோ துயரப்படலாகும். (522)

சுக்ரனும், புதனும், குருவும் ஒரு ராசியில் இருந்து 2ம் இடத்தில் சூரியன் இருந்தால் பெருங்காற்றினாலும், சொற்ப மழையாலும் உலகிற்குத் துயரம் ஏற்படும். (523)

## கிரஹணபலன்

புரட்டாசி - பங்குனி மாதங்களில் சூரிய - சந்திர கிரஹணம் ஏற்பட்டால் பூமியில் எங்கும் பெருமழையால் நீர்சூழ்ந்து, வெள்ளம் வரும். (524)

## கிரஹவக்ர பலன்

சனி. செவ்வாய், குரு இவர்களுக்கு 5மிடத்தில் சூரியன் வந்தால் வக்ரம். 9மிடம் வந்தால் வக்ர நிவர்த்தி. (525)

குருவின் வக்ர - அதிசாராதி கதியால் மூன்று ராசிகளில் பிரவேசிக்க நேரிட்டால் அந்த ஆண்டில் பூமியில் ஏழுகோடி பிணங்கள் விழும். (526)

குருவைத் தவர்த்த மற்ற கிரஹங்களுக்கு அதிசாரம் - வக்ரம் ஆகிய சமயத்தில் அவரவர்கள் இருக்கும் ராசியின் பலன் ஏற்படும். குருவிற்கு முந்தின ராசியின் பலன். *(527)*

செவ்வாய் - ஸ்வாதி, விசாகம், மகம், உத்தரம், ஹஸ்தம், ரேவதி, மூலம் ஆகிய நக்ஷத்திரங்களில் இருக்கும் வரையில் மழை இருக்காது. *(528)*

செவ்வாயும் சனியும் ஒரே ராசியில் இருந்தாலும், ஸமஸப்தமத்தில் இருந்தாலும், ஒருவருக்கு மற்றவர் மூன்றாமிடத்திலோ, ஐந்தாமிடம் மற்றும் ஆறாமிடத்திலோ இருந்தாலும் மழைக்குறைவும், துர்பிக்ஷமும், ஜனங்களுக்கு மஹாபயமும் ஏற்படும். *(529)*

கிழக்கில் வால் நக்ஷத்திரம் தோன்றினால் அந்த நாட்டிற்குத் தீமை. மேற்கில் வால்நக்ஷத்திரம் காணப்பட்டால் நாட்டிற்கு சுபிக்ஷம். *(530)*

சூரியன் வடக்கு திசையில் இருக்க (உத்தராயணத்தில்) வால்நக்ஷத்திரம் காணப்படின் ஜனங்களுக்குத் தீமை. சூரியன் தென்திசையில் இருக்க (தக்ஷிணாயணத்தில்) வால்நக்ஷத்திரம் காணப்பட்டால் பிராணிகளுக்குத் தீமை. *(531)*

இரவில் கிழக்கிலாகட்டும், மேற்கிலாகட்டும் வால் நக்ஷத்தரம்தோன்றி விரைவில் மறைந்து விட்டால் சுபிக்ஷம். அதிககாலம் மறையாது இருப்பின் துர்பிக்ஷம். *(532)*

ஏதோ ஒரு சமயம் சனியும், செவ்வாயும், குருவுடன்கூடி ஒரே ராசியில் இருக்கநேர்ந்தாலும், ஸமஸப்தமமாக இருந்தாலும் இமயமலைக்கும் இலங்கைக்கும் இடையில் உள்ள பிரதேசத்தில் மூன்றில் இரண்டு பங்கு ஜனங்களுத் தீமையாகும். *(533)*

குரு, மகரம், மிதுனம், சிம்மம் இவற்றில் இருந்தால் யானை, குதிரை, ஆடு, மாடுகள் அழிவுறும் பயிர்களும்

நாசமாகும். யுத்தமும் ஏற்படும். தீ விபத்துக்களும் ஏற்பட்டு ஜனங்களுக்கும் நாசம். மரங்களும் அழிந்துபோகும். யுத்தமுஸ்தீபும், திருடர் பயமும் உண்டு என்பதாம். (534)

மேஷம், தனுஸ், மீனம், ரிஷபம், விருச்சிகம், சிம்மம் ஆகிய ராசிகளில் சனி, செவ்வாய்கூடி வக்ரித்தால் பூமியில் யானை, குதிரைகள், பிற பிராணிகள், மனிதர்கள் ஆகியவர்களுக்கு அழிவு ஏற்படும். மூன்றில் ஒரு பகுதியே தப்பிப் பிழைக்கலாம். (535)

மேஷம், ரிஷபம், மிதுனம், தனுஸ், கும்பம், மீனம் ஆகியவற்றில் குருவும், சனியும், செவ்வாயும் சேர்ந்திடில் உலகில் பஞ்சம், வியாதி, ஜ்வரம் காரணமாக பயமும், தீ விபத்துக்களும் அரசருக்கும் நாசம் ஏற்படும். (536)

சனியும், ராகுவும் ஒரு ராசியில் கூடினால் பூமி முழுவதும் ரத்தத்தினால் நனையும் (யுத்தத்தின் காரணமாக) நிலையை ஏற்படுத்துவர். (537)

## ஒரு ராசியில் பல கிரஹங்கள் கூடினால்

ஒரு ராசியில் ஐந்து கிரஹங்கள் சேர்ந்துவருமானால் பஞ்சம். ஆறு கிரஹங்கள் கூடினால் ஆட்சி கவிழும். ஏழு கிரஹங்கள் கூடினால் பிரளயம். (538)

## கிரஹமாலை

துலாம் முதல் மீனம் முடிய அல்லது ரிஷபம் முதல் கன்னி முடிய கிரஹங்கள் அமையுமானால் அது கிரஹமாலை என்பர். அப்படி கிரஹமாலை அமைந்தால் குடிமக்களுக்குத் தீமை. அரசருக்குத் தீமை. இந்தப் பலன் கௌடதேசம், மகததேசங்களுக்கு மட்டுமேயன்றி மற்ற தேசங்களுக்கு அல்லவாம். (539)

## ஆடி மாத பௌர்ணமியில் மேகம் சூழ்ந்திடில்

ஆடி மாத பௌர்ணமி திதியில் முற்பகலில் மேகம் சூழ்ந்து சூரியனை மறைத்தால் ஐப்பசி மாதத்தில் மழை உண்டு. நண்பகலில் 10 நாழிகையில் மேகம் சூழ்ந்து சூரியனை மறைத்தால் கார்த்திகையில் மழை உண்டு. பின் 10 நாழிகையில் மேகம் சூழ்ந்து சூரியனை மறைத்தால் மார்கழியில் மழை ஏற்படும். (540)

குருவும், சுக்ரனும் ஒரே நக்ஷத்திரத்தில் இருப்பின் நால்வகைப் படைக்கும் சேதம் ஏற்படும் வண்ணம் போர் நிகழலாம். உலகில் எங்கிலும் பயம் மிகும். (541)

செவ்வாயும், சுக்ரனும் ஏக நக்ஷத்திரத்தில் கூடி இருந்தாலும்,இயல்பாக ஓடும் ஆறுகள் எதிர்திசையில் செல்லும் நிலை ஏற்பட்டாலும், கிணறுகள், குளங்கள், ஏரிகளில் உள்ள நீர் நிறம் மா றியிருக்க நேரிட்டாலும் நாட்டு மக்களுக்கு மனக்கலக்கமும், அரசர்களுக்கு மஹாபயத்தையும் செய்யும். (542)

தை, மாசி, பங்குனி மாதங்களில் புதன் அஸ்தமன தோஷத்திலிருந்து விடுபட்டுப் பிரகாசமடைந்தால் பசுக்களுக்கு ஆகாது. சித்திரை, வைகாசி, ஆனியில் பிரகாசம் அடைந்தால் துர்பிக்ஷம் (பஞ்சம்). ஆடி, ஆவணியில் பிரகாசம் அடைந்தால் கடும் மழை பெய்யும். ஐப்பசி, கார்த்திகை, மார்கழியில் பிரகாசம் அடைந்தால் சுபிக்ஷம். (543)

## பூகம்பம் நேரிட்டால்

பேரிடி விழுதல், கொள்ளிவிழுதல், ஆகாச வெளிச்சம், பூகம்பம், வானில் கந்தர்வ நகரத் தோற்றம், வால் நக்ஷத்திரம் தோன்றுதல், கிரஹங்கள் வக்ரித்தல், பூர்ண சூரிய கிரஹணம் நிகழ்தல் ஆகியவை தோன்றினால் பஞ்சம், நோய், மன்னருக்குத் தீமை ஏற்படும். (544)

## வானவில் தோன்றுதல்

இரவின் முற்பகுதியில் (மாலை மங்கும் நேரத்தில்) வானவில் தோன்றிடின் ஜனங்களுக்குத் தீமை. பின் இரவில் (விடியற்காலை நேரத்தில்) வானவில் தோன்றினால் தான்யங்கள் விளையாது. நள்ளிரவில் தோன்றினால் அரசர் பீடையாம். (585)

இரவில் கிழக்கிலோ, மேற்கிலோ வானவில் தோன்றினாலும் ஏதேனும் ஒரு பக்கத்தில் தோன்றினாலும் கூட அரசர்க்குப் பீடை. (546)

பகல் நேரத்திலும், மழை இல்லாத நேரத்திலும் வானவில் காணப்பட்டால் மழை வரும். மழை நேரத்தில் கிழக்கே வானவில் தோன்றிடின் மழை தொடராது; நின்றுவிடும். மேற்கு திசையில் வானவில் காணப்படின் மழை விருத்தி உண்டு. (547)

இரவு நேரத்தில் கிழக்கு திசையில் வானவில் ஏற்பட்டால் அரசருக்குத் தீமையாம். தெற்கில் காணப்பட்டால் சேனாதிபதிக்குத் தீமை. மேற்கில் காணப்பட்டால் அரசருக்குப் பீடை. வடக்கிலாகில் மந்திரிக்குப் பீடை. (548)

வால் நக்ஷத்திரம், வால் உள்ள தவளை, வெள்ளைக் காக்கை, இரவில் வானவில் காணநேரிட்டால் அந்த தேசம் பலவிதத் துயரங்களுக்கு உள்ளாகும் என்பதால் அந்நாட்டை விட்டு வேறு நாடு சென்றுவிடலாம்; அந்நாட்டில் வசிக்கலாகாது. (549)

முதல் யாமத்தில் சூரியனைச் சுற்றி வட்டமான கோட்டை ஏற்பட்டால் மன்னருக்கு ஆகாது. இரண்டாவது யாமத்தில் ஏற்பட்டால் பெருமழை ஏற்படும். மூன்றாவது யாமத்தில் தென்பட்டால் பெரிய யுத்தம் ஏற்படக்கூடும். நான்காம் யாமத்திலாகில் லோகநாசம். (550)

## அர்தோதயம் - மஹோதயம்

தை மாதத்திலேயோ அல்லது மாசி மாதத்திலேயோ அமாவாசை வியதீபாதம் - திருவோணம் - திங்கள் அல்லது புதன்கிழமை உதயகாலத்தில் கூடிவந்தால் மஹோதயம். ஞாயிற்றுக்கிழமை கூடினால் அர்தோதயம். (551)

## சனியின் ஸஞ்சாரபலன்

சனி பகவான் மேஷம், ரிஷபம், தனுஸ், விருச்சிகம், மீனம், சிம்மம் ஆகிய ராசிகளின் அந்தங்களில் குருவுடனோ, செவ்வாயுடனோ கூடியிருந்தால் - சேர்ந்திருக்கும் காலம் வரையில் நாட்டில் பஞ்சம், பீடை, அரசர் மரணம், உலகில் பசிக்கொடுமை ஆகியவை ஏற்படுவதுடன் நாடெல்லாம் பாழடைந்து பேய்கள் நடமாடும் என்பதாம். (552)

## பஞ்சம் ஏற்படுவதற்கான அறிகுறி

காலை நேரத்தில் சிறுதூறல் இருந்து, நடுப்பகலில் வானில் மேகக்கூட்டம் இருந்து, மழை பெய்வதற்கான ஆடம்பரம் இருந்து, மழை பெய்யாமல் இருந்துவிட்டு இரவு நேரத்தில் வானம், மேகம் இருந்த சுவடே தெரியாமல் நிர்மலமாக இருந்தால் மழை பெய்யாது, மழை பொய்த்துப் போகும். தானியங்கள் விளைச்சல் பாழாகும். (553)

ஆவணி மாதப் பிறப்பு நாளில் தூறல் போட்டால் அவ்வருஷத்தில் மழை இல்லை. ஆடி மாதப் பிறப்பு நாளில் மழைத்தூறல் விழுந்தால் மழை உண்டு. புரட்டாசி மாதப் பிறப்பு நாளில் தூறல் விழுந்தால் நல்ல மழையுண்டு.

வைகாசி மாதம் மிருகசீர்ஷம் நக்ஷத்திரத்தில் சூரியன் பிரவேசிக்கும் நாளில் மழைத்தூறல் விழுந்தால் சூரியன் அந்த நக்ஷத்திரத்தில் இருக்கும்வரை மழை உண்டு. அன்று தொடங்கி தொடர்ந்து 5 நாட்கள் மழை இருப்பின் சூரியன் ஆயில்யம் நக்ஷத்திரம் செல்லும்வரை இரண்டு மாதம் வரையில் மழை இருக்கும், மக நக்ஷத்திரத்தில் சூரியன் பிரவேசித்த நாளில் வானில் இடிமுழக்கம் இருந்து,

அன்றிலிருந்து ஐந்து நாட்கள் மழை இருந்தால் சூரியன் ஸ்வாதி செல்லும்வரையில் இரண்டரை மாதம் வரையில் மழையுண்டு. ஸ்வாதி நக்ஷத்திரத்தில் சூரியன் பிரவேசிக்கும் நாளில் தூறல் விழுந்து ஐந்து நாட்கள் மழை பெய்தால் சூரியன் மூல நக்ஷத்திரம் செல்லும் வரையில் பெருமழை உண்டு என்று அறியலாம். *(555)*

தென்திசையில் மேகம் எழுந்தாலும், கீழ்க்காற்று அடித்தாலும், வடதிசையில் மின்னல் தோன்றினாலும் மேற்குத் திசையில் வானவில் தோன்றினாலும் கட்டாயம் மழையுண்டு என்று அறியவும். *(556)*

புதன் கிரஹமும், சுக்ர கிரஹமும் நெருக்கமுடன் இருந்தால் மழை அதிகம் உண்டு. அவ்விருவருக்கும் நடுவில் சூரியன் இருப்பின் மழை பெய்யாது; கடலும் கட்டாந்தரை ஆகும். *(557)*

அச்வினி நக்ஷத்திரம் முதல் புதன், சுக்ரன் ஸாமீப்யம் (நெருக்கம்) இருந்தால் அதன் பலன் பலவாறாகக் கூறப்படு கிறது. அச்வினி தொடங்கி முதல் மூன்று நக்ஷத்திரங்களில் புத, சுக்ரர்களின் நெருக்கம் இருந்தால் கடும்மழை. அடுத்த மூன்றில் புத, சுக்ரர் நெருக்கம் ஏற்படின் மழையே பெய்யாது. அதற்கு அடுத்த மூன்று நக்ஷத்திரங்களில் புத-சுக்ரர் நெருக்கம் அமைந்தால் போதுமான அளவு நல்ல மழை ஏற்படும். அதற்கு அடுத்த 7 நக்ஷத்திரங்களில் புத-சுக்ரன் நெருங்கி இருந்தால் போதும் போதும் என்ற அளவுக்குக் கடும் மழை பொழியும். அதற்கு அடுத்த ஒன்பது நக்ஷத்திரங்களில் புதன், சுக்ரன் சேர்ந்திடில் மழை சுத்தமாக இருக்காது. அதற்குமேல் இரண்டு நக்ஷத்திரங்களில் புதன், சுக்ரன் கூடியிருப்பின் சுபிக்ஷமாம். *(558 - 559)*

சுக்ரன் கீழ்த்திசையில் இருக்கும் சமயம் ஸ்வாதி, விசாகம், அனுஷம் ஆகிய நக்ஷத்திரங்களில் இருந்தாலும், மேற்கில் ருக்கும் சமயம் மகம், பூரம், உத்தரம், ஹஸ்தம், சித்திரை ஆகிய நக்ஷத்திரங்களில் இருந்தாலும் மழை

பெய்யாது இதற்கு மாறாக இருந்தால் மேற்கில் ஸ்வாதி முதல் மூன்று நக்ஷத்திரங்களிலும், கிழக்கில் மகம் முதலான ஐந்து நக்ஷத்திரங்களிலும் இருந்தால் அதிகம் மழை உண்டு. *(560)*

ஆடி மாதம் வளர்பிறையில் ஸ்வாதி - நவமி இரண்டும் கூடிய நாளில் மழை அல்லது சாரல் காற்று இல்லையேல் அந்த வருஷத்தில் மழை ஏற்படாது. *(561)*

மீனம், கடகம், மகரம், விருஷபம், துலாம், விருச்சிகம் ஆகியவை ஜல ராசிகளாகும். இந்த ராசிக்காரர்களுக்கு எருமை மாடுகள், ராசியாம். (விருத்திக்கு வரும்.) *(562)*

## உழவுபோட

கோசாரம் அனுகூலமாக இருக்கும் காலத்தில் முற்கோப்பிலேயே உழவு செய்தல், விதை விதைத்தல் போன்ற பயிர் வேலை தொடங்கவேண்டும். ரிஷபம், கடகம், கன்னி, விருச்சிகம், மகரம், மீனம் ஆகிய இரட்டித்த மாதப் பிறப்பில் தூறல் விழுந்தால் அந்த மாதத்தில் மழை உண்டு என்று அறியலாம். ஒற்றைப்பட்ட ராசிகளான மேஷம், மிதுனம், சிம்மம், துலாம், தனுஸ், கும்பம் ஆகியவற்றில் மழை பெய்தால் அந்த மாதத்தில் மழை இல்லை என்று அறியலாம். *(563 - 564)*

## பிறக்கப்போவது ஆணா ? பெண்ணா ?

கர்பிணியின் பெயரில் உள்ள எழுத்தை எண்ணி அதனுடன் 25க் கூட்டியும், அன்றைய தினம் வரையிலான திதியையும் கூட்டி ஒன்பதினைக் கழித்ததில் கிடைக்கும் எண் இரட்டித்ததாகில் பெண் எனவும்; ஒற்றைப்பட்டதாகில் ஆண் பிள்ளை என்றும் அறியலாம். *(565)*

## மழைபற்றிய பிரச்னம்

வளர்பிறையில் சந்திரன் ஆட்சியில் அல்லது கேந்திரத்தில் அல்லது ஜலராசியில் இருந்து சுபகிரஹங்களால் பார்க்கப்பட்டால் மழைக்காலத்திலும்கூட சொற்பமழை ஏற்படும். *(566)*

சூரியன் திருவாதிரை நக்ஷத்திரத்தில் பகலில் பிரவேசம் செய்தால் பயிர்கள் நாசம், ஸந்த்யா காலங்களில் பிரவேசித்தால் பயிர்விருத்தி உண்டு. இரவில் பிரவேசம் நிகழ்ந்தால் சுபிக்ஷம் உண்டு. (567)

சூரியன் திருவாதிரை நக்ஷத்திரத்தில் பிரவேசிக்கும் காலம் பகலிலோ, இரவிலோ மழை அல்லது தூறல் ஏற்படின் மழை சொற்பம் ஆகும். விலைவாசியில் குழப்பம் ஏற்படும்.

மார்கழி மாதத்தில் சூரியன் பூராடத்தில் சஞ்சாரம் செய்யுங்கால் அதுமுதல் 13 நாட்களில் மேகமூட்டம் ஏற்படுமானால் அடுத்த ஆண்டு சூரியன் திருவாதிரையில் சூரியன் பிரவேசப்பது முதல் மழை இருக்கும். (569)

சூரியன்-சந்திரன் ஆகியவர்களுக்கு அருகில் கோட்டை ஏற்பட்டாலும், வடக்கு திசையில் மின்னல், இடிமுழக்கம் ஏற்பட்டாலும், தவளைகள் குரல் எழுப்பினாலும் மழை வரப்போகிறதற்கு அடையாளமாம். (570)

பொதுவாக அதி(க)மாஸத்தில் சுபகர்மாக்கள் செய்யப் படுவதில்லை. ஆனால் அதி(க)மாஸத்தில் ஏதாவது கிரஹம் உச்சமானால் அந்த மாதத்தில் அதி(க)மாஸமானாலும் சுபகர்மாக்கள் செய்யலாம்.

## நக்ஷத்திரகண்டம்

உத்தரத்தில் முதல் பாதம், பூச நக்ஷத்திர 2ம் பாதம், பூராடத்தில் 3ம் பாதம், சித்திரை நக்ஷத்திரம் 2ம் பாதமானாலும் சரி இவை பிள்ளையின் நக்ஷத்திரமாகில் தந்தைக்குக் கண்டம். பெண்ணின் நக்ஷத்திரமாகில் தாய்க்குக் கண்டம்.

## கண்டாந்தக நக்ஷத்திரம்

ஆயில்ய நக்ஷத்திரம் கடைசி பாதம், மக நக்ஷத்திரம் முதல் பாதம், கேட்டை நக்ஷத்திரம் 4ம் பாதம், மூல நக்ஷத்திரம் முதல் பாதம், ரேவதி 4ம் பாதம், அச்வினி முதல் பாதம் இந்த நக்ஷத்திரக் கால்களுக்கான நாழிகையில் நான்கு நாழிகை,

ரேவதி 4ம் பாதத்தின் கடைசி இரண்டு நாழிகை, அச்வினி 1ம் பாதத்தின் ஆரம்ப இரண்டு நாழிகை ஆக இந்த நான்கு நாழிகைகள் கண்டாந்த நக்ஷத்திரம் எனப்படும். (573)

பூராடம், பூசம் இவ்விரண்டு நக்ஷத்திரத்திற்கு முதல் பாதம் பிதாவுக்குக் கண்டம், இரண்டாம் பாதம் தாய்க்குக் கண்டம், 3வது பாதம் பிறந்த குழந்தைக்கே கண்டமாகும். நான்காவது பாதம் மாமனுக்குக் கண்டம், பூச நக்ஷத்திரத்தின் முதல்பாதம் பிதாவிற்குக் கண்டம், 2வது பாதம் மாதாவிற்குக் கண்டம், 3வது பாதம் தன் கண்டம், 4வது பாதம் சுபம் என்று சொல்கிறார்கள். (575)

ஹஸ்தம், பரணி இந்த இரண்டு நக்ஷத்திரங்களின் மூன்றாம் பாதம் பித்ரு கண்டம், பூராடம், பூசம் இவற்றின் முதல் பாதம் பித்ரு கண்டம். சித்திரை நக்ஷத்திரம் முதல் இரண்டு பாதங்களும் பித்ரு கண்டம் - மாத்ரு கண்டம் இரண்டும் உண்டு. பரணியின் முதல் பாதம் மாதாவிற்கு ஆகாது. (576)

மூலம் - மகம் - அச்வினி இம்மூன்றுக்கும் முதல் (ஆரம்ப) நாழிகை நான்கும், கேட்டை - ஆயில்யம் - ரேவதி இவற்றின் கடைசி நான்கு நாழிகைகளும் கண்டமாகும். (577)

லக்னாதிபதியோ, குருபகவானோ, சுக்ரனோ கேந்திரத்தில் இருந்தால் ஜனனமான ஜாதகன் தீர்க்காயுள் உள்ளவனாக பெரும் செல்வந்தனாக, அரசியல் செல்வாக்கு உள்ளவனாக இருப்பான். (578)

## லக்னாதி பாவங்களில் உள்ள கிரஹங்களன் பலன்

லக்னத்தில் சூரியன் இருந்தால் தாய்க்கு ஆகாது. லக்னத்தில் சந்திரன் இருந்தால் தந்தைக்கு ஆகாது. லக்னத்தில் செவ்வாய் இருந்தால் அந்த சிசுவிற்கு ஆகாது. லக்னத்தில் கேது இருந்தால் அந்த சிசுவிற்கு ஆகாது. இரண்டாம் இடத்தில் சூரியன், சனி, செவ்வாய் இருந்தால் தாய்க்கு

ஆகாது. மூன்றாமிடத்தில் புதன் இருந்தால் தாய்க்குக் கெடுதல். நான்காம் இடத்தில் ராகு இருப்பின் அந்த சிசுவிற்குக் கெடுதல். ஐந்தாமிடத்தில் சூரியன், சந்திரன், சனி, செவ்வாய் இருப்பின் முறையே தந்தை-தாய்-அந்த சிசுவிற்கு-உடன்பிறந்தவர்களுக்கு ஆகாது. ஆறாமிடத்தில் சந்திரன் பாபியுடன் கூடியிருந்தால் தாய்க்கும், சிசுவிற்கும் தோஷமாம். ஏழாமிடத்தில் பாபி இருந்தால் தாய்க்குக் கெடுதல். எட்டாமிடம் மற்றும் ஒன்பதாமிடங்களில் சந்திரன் இருந்தால் அந்த சிசுவிற்கு ஆகாது. பத்தாமிடத்தில் சூரியன், சந்திரன், சனி, செவ்வாய் இருப்பின் முறையே தந்தை - தாய் - சிசு - உடன்பிறந்தவர்களுக்கு ஆகாது. பதினோறாமிடத்தில் எந்த கிரஹம் இருந்தாலும் சுபமே (நன்மைதான்). பன்னிரெண்டாம் இடத்தில் சனி, செவ்வாய் இருப்பின் பிள்ளை - தாய் இருவருக்கும் கண்டமாம். *(579 - 583)*

## குருடாகப் பிறக்கக் காரணம்

12மிடத்தில் சனி இருந்தால், சிசுவின் வலதுகண் பாதிக்கலாம். செவ்வாய் இருந்தால் இடதுகண் பாதிப்பு அடையும். ராகு காலத்தில் ஜனனமாகி 7ல் சூரியன் இருந்தால் இரண்டு கண்களும் பாதிப்படையலாம். நான்காமிடம் அல்லது எட்டாமிடத்தில் சந்திரன் பாபியுடன் கூடியிருப்பினும் குருடாகலாம். எட்டில் சூரியனும் - சந்திரனும் இருந்தாலும் குருடாகலாம். *(584 - 585)*

சர ராசி - லக்னமாக இருக்கும்பொழுது குழந்தை பிறந்தால் தந்தை வேறு ஊர்களில் இருக்கலாகும். ஸ்திர ராசி-லக்னமாகும்பொழுது ஜனனம் ஏற்பட்டால் தந்தை அந்த வீட்டிலேயே இருப்பான். உபயராசி - லக்னமானால் பிறந்த குழந்தையின் தந்தை அந்த ஊரில் இருக்கலாகும். *(586)*

சந்திரனும் - சூரியனும் சேர்ந்து, ஆக்ஷியில்லாத வேறு ராசியில் இருந்து லக்னத்தைப் பார்க்காவிட்டால் அந்த சிசு பரஜாதன் என்று அறியலாம். *(587)*

கண்ட நக்ஷத்திரம் என்பது மூன்று பாத நக்ஷத்திரமாகும். கண்ட நக்ஷத்திரம் ஜன்ம நக்ஷத்திரமாகி அத்துடன் த்விதீயை - ஸப்தமீ - த்வாதசி திதிகளும் கூடி, சனி - ஞாயிறு - செவ்வாய்க் கிழமைகளுடன் கூடினால் அன்யபீஜம் என்று அறியலாம். (588)

5-மிடம், 7-மிடம், 8-மிடம், 9-மிடம், 12-மிடம் ஆகியவற்றில் ஏதோ ஒன்றில் சந்திரன் சுபகிரஹ சம்பந்தம் இல்லாமல், பாப கிரஹத்துடன் கூடியிருந்து சுக்ரன், புதன், குரு ஆகிய சுபர்களின் பார்வையும் இல்லாமல் இருந்தால் சிசுவின் உயிருக்குக் கெடுதலைச் செய்வான். (589)

ஜனன காலத்தில் கேந்திரம், த்ரிகோணம், 3, 11, 2ம் இடங்களில் சுபகிரஹங்களும், 3-6ம் இடங்களில் அசுபரும், 6-8-12-7-லக்னம் தவிர்த்த இடங்களில் சந்திரன் இருந்தாலும் சுபம். (590)

எட்டாமிடத்தில் சந்திரன், ஏழாமிடத்தில் செவ்வாய், ராகு, ஜன்ம லக்னத்தில் சனி, மூன்றில் குரு, ஆறாமிடத்தில் சுக்ரன், 7ல் புதன், ஜன்ம லக்னத்தில் கேது, 12ல் சூரியன் இந்த நிலையில் கிரஹங்கள் இருப்பின், அது ஜனித்த குழந்தையின் ஆயுளைப் பாதிக்கச்செய்யும். (591)

ஜன்ம லக்னத்திற்கு 8ல் சந்திரன் அல்லது லக்னத்தில் சந்திரன் இருந்து அசுபகிரஹங்களாலும் பார்க்கப்பட்டால் ஜனித்த குழந்தைக்கு மரணம் ஏற்படுவது நிச்சயம். (592)

லக்னத்திற்கு 12ல் சந்திரன் இருந்தால் தாயாருக்கும், சூரியன் இருந்தால் தந்தைக்கும், சனி இருந்தால் ஜனித்த சிசுவிற்கும் வியாதி ஏற்படும். (593)

சந்திர லக்னத்திற்கு 7ல் சனியும், செவ்வாயும் இருந்தால் குழந்தை ஜனனமாகி 7 அல்லது 8வது மாதத்தில் தாய் மரிப்பாள். (594)

சந்திரன் லக்னத்தில் இருக்க, சூரியனால் பார்க்கப்பட்டால் ஜனித்த சிசு நீண்ட ஆயுளுடன்,

தந்தையைக் காட்டிலும் புகழ்பெற்றவனாகவும், புறமுதுகு காட்டாத, சேனாதிபதியாகவும் விளங்குவான். (595)

அஷ்டமாதிபதி கேந்திரத்திலும், லக்னாதிபதி பலம் இல்லாமலும் இருந்தால் 30 ஆண்டுகள் ஆயுள் உண்டு. தப்பினால் 32ம் வயதைத் தாண்டுவது கடினம். (596)

சூரியன், செவ்வாயுடன் கூடியிருந்து, சனியால் பார்க்கப்பட்டால் செவ்வாய், சூரியனுடன் இருக்கும் நாட்களுக்குள் சிசு - பிதாவிற்கு மரணம். (597)

சூரியனோ, சனியோ, செவ்வாயோ கேந்திரத்தில் இருந்து, குருவால் பார்க்கப்பட்டாவிட்டால் பத்து நாட்களிலோ, 10 மாதங்களிலோ, 10 வருடத்திலோ சிசு மரணம் அடையும். (598)

சுக்லபக்ஷ இரவில் அல்லது லக்னத்தில், கிருஷ்ணபக்ஷம் பகலில் அல்லது 6- 12 - 8ம் இடத்தில் சந்திரன் இருந்து, சுபகிரஹங்களுடைய பார்வை பெற்றால் எந்தவித ஆபத்தும் ஜாதகனை அணுகாது. (599)

பத்தாமிடத்தில் செவ்வாய் இல்லாவிட்டால் நன்மை இல்லை. (600)

## அதிஉச்ச ஸ்தானங்களும் - பலன்களும்

சூரியனுக்கு மேஷம் உச்சஸ்தானம். சந்திரனுக்கு ரிஷபம், செவ்வாய்க்கு மகரம், புதனுக்குக் கன்னி, குருவுக்குக் கடகம், சுக்ரனுக்கு மீனம், சனிக்கு துலாம் உச்சஸ்தானங்கள். உச்சஸ்தானத்திற்கு நேர் 7மிடம் நீசஸ்தானம். ஒரு ராசியை 30 பாகமாக்கி, அதில் சூரியனுக்கு 10ம் பாகம் அதிஉச்சம். சந்திரனுக்கு 3வது பாகம், செவ்வாய்க்கு 14வது பாகம், புதனுக்கு 15வது பாகம், குருவுக்கு 5வது பாகம், சுக்ரனுக்கு 27வது பாகம், சனிக்கு 20வது பாகம் அதியுச்சமாகும். அதிநீச விஷயத்திலும் இந்த முறையிலேயே காணவும். (601)

## உச்ச கிரஹ பலன்

ஜன்ம காலத்தில் சூரியன் உச்சனாகில் ஜாதகன் உக்ரனாக இருப்பான். ஆனால் தனவானாக இருப்பான். பிறரை ஹிம்சை செய்பவனாக இருப்பான். சந்திரன் உச்சமானால் ஆடை, ஆபரண வசதிகள், சௌக்யம், விருந்து உணவு. செவ்வாய் உச்சமாகில் பராக்ரமம் உள்ளவனாகவும், கொடூர குணம் உள்ளவனாகவும், கர்வமுள்ளவனாகவும் இருப்பான். புதன் உச்சமாகில் புத்திமானாக, வித்வானாக, திறமைசாலியாக விளங்குவான். குரு உச்சமானால் லோக பிரஸித்தனாக, நல்ல அறிவாற்றல் பெற்றவனாக, பேச்சுவன்மை உள்ளவனாக விளங்குவான். சுக்ரன் உச்சமாகில் சேனாதிபதியாக, சங்கீதம், நாட்டியம் போன்ற கலையார்வம் உள்ளவனாக, சுகபோகமுள்ளவனாகவும் விளங்குவான். சனி உச்சமாகில் புகழ்பெற்றவனாகவும், பகைவரால் வெல்லப்படாதவனாக, பணப்பேராசை உள்ளவனாகவும் இருப்பான். கிரஹம் உச்சமாகவுள்ள லக்னத்தில் ஜனனமானால் எல்லா தோஷங்களையும் போக்குகிறது.

இரு கிரஹங்கள் உச்சமாகில் ஆட்சிபெறலாகும். மூன்று கிரஹங்கள் உச்சமாகில் அரசனாவான். (அதிகப் பரப்புள்ள பூமிக்கு அதிபதியாவான்). நான்கு கிரஹங்கள் உச்சமாகில் குறுநிலப்பகுதிகளை ஆளும் அரசன் ஆவான். (இக்காலப் பிரதமர் பதவி போன்ற பதவியை என்று பொருள் கொள்ளலாம்.) ஐந்து கிரஹங்கள் உச்சமாகில் லோக நாயகனாவான். (604)

## சர - ஸ்திர - உபய ராசிகள்

மேஷம் முதல் மீனம் முடிவாகவுள்ள ராசிகள் முறையே சரம்-ஸ்திரம்-உபயம் என்று வகைப்படுத்தப்படுகின்றன. மேஷம், கடகம், துலாம், மகரம் இவை சரராசிகள். ரிஷபம், சிம்மம், விருச்சிகம், கும்பம் ஆகியவை ஸ்த்திர ராசிகளாகும். மிதுனம், கன்னி, தனுஸ், மீனம் ஆகிய நான்கும் உபயராசிகள் ஆகும். (605)

### உபசய - அபசய ஸ்தானங்கள்

லக்னத்திற்கு 3, 6, 10, 11ஆகிய இடங்கள் உபசய ஸ்தானங்கள் ஆகும். 2, 5, 9, 12ம் இடங்கள் அபசய ஸ்தானங்களாகும்.

### கேந்திரம் - த்ரிகோணம் - சதுரச்ரம் பற்றி

லக்னம், 4மிடம், 7மிடம், 10மிடம் இவை கேந்திரம் எனப்படும். 5மிடம், 9மிடம் இவை த்ரிகோணம் எனப்படும். 4, 8மிடங்கள் சதுரச்ரம் எனப்படும். (607 - 608)

### கிரஹங்களின் சத்ரு - மித்ர பாவம்

| | |
|---|---|
| சூரியனுக்கு | சுக்ரனும் - சனியும் பகை<br>புதன் சமன். மற்றவர்கள் மித்ரர் |
| சந்திரனுக்கு | சூரியனும் - புதனும் மித்ரர்கள்<br>மற்ற அனைவரும் சமன். |
| செவ்வாய்க்கு | குரு - சந்திரன் - சூரியன் மித்ரர்கள்<br>புதன் சத்ரு. மற்றவர்கள் சமன் |
| புதனுக்கு | சூரியனும் - சுக்ரனும் மித்ரர்கள்<br>சந்திரன் சத்ரு. மற்றவர்கள் சமன். |
| குருவுக்கு | புதனும் - சுக்ரனும் சத்ருக்கள்<br>சனி சமன். மற்றவர்கள் மித்ரர்கள். |
| சுக்ரனுக்கு | புதனும் - சனியும் மித்ரர்கள்<br>செவ்வாயும் - குருவும் சமன்.<br>மற்றவர்கள் சத்ருக்கள். |
| சனிக்கு | சுக்ரனும் - புதனும் மித்ரர்கள்.<br>குரு சமன்; மற்றவர்கள் சத்ருக்கள் (609 - 610) |

ஒருவருக்கொருவர் 12மிடம் - 2மிடத்திலும்; 11மிடம் 3மிடத்திலும்; 10மிடம்-4மிடத்திலும் இருந்தால் அவர்களிடம் தாத்காலிக மித்ரத்வம் உண்டு. உச்சத்தில் இருக்கிற கிரஹங்கள் இடையேயும் தத்காலமித்ரத்வம் உண்டு. (611)

இயற்கையில் ஹித - ஸம-ரிபு (சத்ரு) என்ற பெயர் உடைய கிரஹங்கள் ஜனன காலத்தில் தத்கால மித்ரர்களுடன் சேர்ந்தார்களானால் அந்த கிரஹங்கள் ஹிதமாகில் அத்யந்த ஹிதமாகவும், ஸமகிரஹமாகில் மித்ரமாகவும், ரிபுகிரஹ மாகில் மத்யமமாகவும் ஆகிறார்கள். அவ்வாறாகவே சத்ரு - ஸம- ஸுஹ்ருத் (மித்ர) என்றும் கிரஹங்கள் ஜனன காலத்தில் தத்கால சத்ருவுடன் சேர்ந்தால் சத்ருகிரஹம் அதிசத்ருவாகவும் ஸமகிரஹம் சத்ருவாகவும், ஸுஹ்ருத் (மித்ர) கிரஹம் ஸம கிரஹமாகவும் ஆகிறது. (612)

## நரசக்ரம்

ஸூர்யன் இருக்கும் நக்ஷத்திரம் தொடங்கி ஜன்ம நக்ஷத்திரம் முடிய எண்ணவேண்டும். மனித வடிவம் சித்திரமாக எழுதிக்கொண்டு, சூரியன் இருக்கும் நக்ஷத்திரம் தொடங்கி நரசக்ரத்தின் தலையில் மூன்று நக்ஷத்திரங்கள், முகத்தில் மூன்று, தோளில் இரண்டு, கக்ஷங்களில் இரண்டு, கைகளில் இரண்டு, வயிற்றில் ஐந்து, தொப்பூழில் ஒன்று, மறைவிடத்தில் ஒன்று, முழங்கால்களில் இரண்டு, கால்களில் ஆறு. இவ்வாறு நக்ஷத்திரங்களை எழுதிக்கொள்ள வேண்டும். ஜன்ம நக்ஷத்திரம் எந்தப் பகுதியில் அமைகிறதோ அதற்கான பலன் கூறலாம். (613 - 615)

**பலனாவது :**

காலில் ஜன்ம நக்ஷத்திரம் வந்தால் அற்ப ஆயுள். முழங்கால் இடம்பெயர்ந்து செல்லவேண்டும். மறைவிடத்தில் பிற பெண்டிரிடம் பற்று. தொப்பூழ் சொற்ப சுகம். வயிற்றில் ஐச்வர்யம் பெறிவான். கைகளில் அமைந்தால்

திருடன். கக்ஷம் (அக்குள்) சூரன். திறமைசாலி. தோளில் பெரும் செல்வம். முகத்திலாகில் சிறந்த அறிஞன் தலையிலாகில் பட்டாபிஷேகம் (உயர்ந்த நிலை) என்று அறியவும். (616 - 617)

## *கஜகேஸரி யோகம்*

சந்திரனுக்குக் கேந்திரத்தில் (சந்திரன் இருக்குமிடம் தொடங்கி 4-7-10 மிங்களில்) குரு இருந்தால் கஜகேஸரி யோகம் என்று சொல்லப்படும். யானைக் கூட்டத்தை ஒரு சிங்கம் தனியாக எப்படி துறத்துமோ, அவ்விதம் இந்த யோகம் ஜாதகனின் தோஷங்களையெல்லாம் போக்கும். (618)

## *நரபதி யோகம்*

சுக்ரனைக் குருபார்த்தால் தலைவனாக ஸர்ப்பராஜன் போல் பெருமையுடன் இருப்பான். (619)

## *ராஜாதி ராஜயோகம்*

ராகு - சிம்மம், ரிஷபம், கன்னி, கடகம் ஆகிய ராசிகளில் இருப்பின் உச்சபலன் சொல்லவேண்டும். ஜாதகன் பெரும் செல்வத்தைப் பிறருக்கு வழங்கக் கூடியவனாக பகைவரை ஒடுக்கும் திறன் உள்ளவனாக இருப்பான். இது ராஜாதிராஜ யோகம் எனப்படும். (620)

## *ராகுவின் உச்ச ஸ்தானம்*

ராகு - கேதுக்களின் உச்ச - நீசஸ்தானம்பற்றிய கருத்து வேற்றுமை தொடருகிறது. நூலாசிரியர் கருத்தின்படி மேஷம், விருஷபம், கடகம் ஆகியவற்றில் இருந்தால் அது ராகுவின் உச்சஸ்தானமாகும். அவ்விடங்களில் ஒன்றில் உள்ள ராகு எல்லாக் கஷ்டங்களையும் அகற்றுவார். (621)

## மங்களயோகம்

செவ்வாய், சந்திர லக்னத்திற்குக் கேந்திரத்தில் இருந்தால் அது மங்களயோகமாகும். இந்த யோகம் உள்ள ஜாதகன் எல்லா நன்மைகளையும் இடைவிடாமல் பெறுவான். சந்திரமங்கள யோகத்திற்கும் இதற்கும் சிறிது வேறுபாடு உண்டு. *(622)*

## சந்திரமங்கள யோகம்

ஜன்ம லக்னத்தில் சந்திரனும் - செவ்வாயும் சேர்ந்து இருந்தால் அது சந்திரமங்கள யோகமாகும். அவ்வாறான லக்னத்தில் பிறந்தவனை, குலப்பெண்டிர் வெட்கத்தை எவ்வாறு விட்டுவிடமாட்டார்களோ அவ்வாறு மஹாலக்ஷ்மி விட்டு விலகமாட்டார். அவன் செல்வமும், செல்வாக்கும் எப்போதும் பெற்றிருப்பான். *(623)*

## அமலயோகம்

எந்த ஜாதகனுடைய ஜனன காலத்தில் சந்திர லக்னத்திற்கு 10மிடத்தில் சுபகிரஹம் இருக்குமோ, அவன் குறைவற்ற கீர்த்தி உள்ளவனாகவும், குறைவற்ற செல்வம், செல்வாக்கு உள்ளவனாகவும் ஜீவிததசை முடிய விளங்குவான். *(624)*

ஜன்ம லக்னதில் நீச கிரஹம் இருந்தால், அந்த (ராசி) லக்னாதிபதியாவது அல்லது அந்த ராசியில் உச்சம் பெறும் கிரஹமாவது राशिनाथोऽपि என்று இருப்பதால் அந்த ராசிநாதனும், அந்த ராசியில் உச்சம் பெறும் கிரஹமும் சந்தரனுக்குக் கேந்திரத்தில் இருந்தால் ராஜாதிராஜன் ஆவான்.

## அனபா - ஸுனபா - துருதரா யோகங்கள்

சந்திரனுக்கு 12மிடத்தில் சூர்யனைத் தவிர வேறு கிரஹம் இருந்தால் அது அனபா யோகம் எனப்படும். சந்திரனுக்கு இரண்டாமிடத்தில் சூரியனைத் தவிர வேறு

கிரஹம் இருந்தால் அது ஸுனபாயோகம் ஆகும். 12லும் - 2லும் கிரஹம் இருந்தால் அது துருதராயோகம் என்று சொல்லப்படும். இந்தவிதமான யோகத்தில் ஜனனமான ஜாதகன் நீண்ட ஆயுளுடன் இருப்பான். (626)

## வாஸி - வேஸி - உபயசரீ யோகங்கள்

சூரியனுக்கு 12மிடத்தில் சந்திரனைத் தவிர வேறு கிரஹம் இருந்தால் அது வாஸியோகம் என்றும்; 2மிடத்தில் சந்திரனைத்தவிர வேறு கிரஹம் இருந்தால் அது வேஸி யோகம் என்றும், இருபுறமும் அதுபோல் கிரஹமிருந்தால் உபயசரீயோகம் என்றும் சொல்லப்படும். இந்த யோகத்தில் ஜனித்தவனுக்கு நீண்ட ஆயுள், ஆரோக்யம், சந்ததி, ஐச்வர்யம் முதலான நற்பலன்கள் அமையும். (627)

ஜனன காலத்தில் கேந்திரம் - த்ரிகோணம் ஆகியவற்றில் கேந்திரத்திலோ, த்ரிகோணத்திலோ புதன், குரு, சுக்ரர்கள் இருப்பின் அல்லது அவர்கள் லக்னத்தைப் பார்த்தாலும் ஜனித்தவன் அறம், பொருள் முதலான புருஷார்த்தங்களைப் பெறுகிறவனாகவும், நற்செயல்கள் செய்பவனாகவும், சிறந்த அறிஞனாகவும், நீண்ட ஆயுள் உள்ளவனாகவும் இருப்பான்.

## சூரியன் முதலான அம்சபலன்

சூரியனின் அம்சத்தில் ஜனித்தவன் மிகுந்த வீர்யசக்தி உள்ளவனாகவும், மெல்லிய தலைமயிர் உள்ளவனாகவும், விரிந்த கண்கள் உள்ளவனாகவும், பித்தம் மிகுந்தவனாகவும், யானைபோல் உணவு முதலான போக அனுபவம் உள்ளவனாகவும், நல்ல அறிவாற்றல் உள்ளவனகவும், பிற ஸ்த்ரீகளிடம் ஈடுபாடு இருப்பவனாகவும், தன் மனைவி - மக்களை ரக்ஷிக்கும் குணமுள்ளவனாகவும், யாரேனும் உதவி வேண்டில் உடனே ஆலோசியாமல் கொடுப்பவனாயும் இருப்பான். (629)

## சந்திரன் பலன்

சந்திர அம்சத்தில் ஜனித்தவன் நடுத்தரமான உடல்கட்டு உள்ளவனாகவும், நயம்மிக்க பேச்சு உள்ளவனாகவும், நெறிவழி பிறழாதவனாகவும், தன் மனையாளிடம் அன்புள்ள வனாகவும், ஆரோக்கிய நலம் பெற்றவனாகவும், அறிவாற்றல் மிக்கவனாகவும், நெய்கலந்த சுவையுள்ள நல்லுணவு உண்பதில் விருப்பம் உள்ளவனாகவும், தாய்ப் பற்று மிக்கவனாகவும், உறவினர்களிடம் உறவினர்களுக்குப் ப்ரியம் உள்ளவனாகவும் இருப்பான். (630)

## செவ்வாய் அம்சபலன்

கொடியவனாகவும், செய்நன்றியில்லாதவனாகவும், சற்றே குள்ள சிறிய உடல் வடிவின் உள்ளவனாகவும், பிறர் தன்னை உயர்வாக மதிக்கவேண்டும் என்பதற்காக பெருந்தன்மை உள்ளவனாகக் காண்பித்துக் கொள்பவனாகவும், சுயவிளம்பரத்தில் (தற்பெருமை பேசுவதில்) விருப்பம் உள்ளவனாகவும், இன்முகம் காண்பித்துக்கொண்டே தீங்கு செய்யும் தீயகுணம் உள்ளவனாகவும், தன்னிலும் தாழ்ந்த திருட்டு கொள்ளை முதலான தீயசெயல்களைச் செய்கிறவர்களின் குழுவுடன் தொடர்புள்ளவனாகவும், உறவினர்களுக்கு நன்மை செய்யாத வனாகவும், உறவினர்கள் வெறுக்கும்படி ஒதுக்கும்படி நடந்துகொள்பவனும், கூசாமல் ஆணையிட்டுப் பேசுகிறவனாகவும் இருப்பான். (630)

## புதன் அம்சத்தின் பலன்

சற்றே கருத்த (மாநிறம் என்று சொல்லும்படிக்கு) வடிவம் உள்ளவனாகவும், மெலிந்த உடல்வாகு உள்ளவனாகவும், இன்சொல் பேசுபவனாகவும், சிரித்த முகம் உள்ளவனாகவும், உறவினர்களிடையே மதிப்பும் - பிரியமும் உள்ளவனாகவும், பிறருக்கு நன்மை செய்யும் இயல்பினனாகவும், அறிவாற்றல் மிக்கவனாகவும்,

ஆலோசியாமல் விரைந்து வீரச்செயலில் இறங்கக் கூடியவனாகவும், பிறர் மனைவியிடம் மோகம் உள்ளவனாகவம், பிறருக்குப் புத்திசொல்லும் அறிவாற்றல், தகுதியுள்ளவனாகவும், பிறர் சொல்லும் புத்திமதியை ஏற்பனாகவும் இருப்பான். (632)

### குரு அம்சபலன்

அறிவாற்றல் உள்ளவனாகவும், சற்றே பருத்த உடல்வாகு உள்ளவனாகவும், உயர்குணங்கள் நிறம்பியவனாகவும், நன்னெறி தவறாமல் நடந்துகொள்பவனாகவும், புண்யகர்மபற்றுள்ளவனாகவும், சொன்ன சொல்லை நிறைவேற்றுபவனாகவும், ஞானம் மிக்கவனாகவும், கலைகளில் ஆற்றல் உள்ளவனாகவும், ஸத்யம் தவறாத வனாகவும், நற்புகழ்பெற்றவனாகவும், விளையாட்டாகவும், பரிஹாஸமாகவும் சுவைபட விவரிக்கத்தக்கவனாகவும், கவிதா சக்தி (கற்பனைவளம்மிக்க மனம்கொண்டவனாகவும் இருத்தலால் கவிதை புனையும் சக்தி) உள்ளவனாகவும் இருப்பான். (633)

### சுக்ரன் அம்சபலன்

கேட்டதும் கொடுப்பவனாகவும், பாட்டு - நாட்டியம் இவற்றிலும், பரிஹாரம், வேடிக்கை இவற்றில் பிரியம் உள்ளவனாகவும், பெரியோர்கள், நண்பர்கள், வேலை ஆட்கள் ஆகியோர்களிடம் மகிழ்ச்சியுண்டாகும் விதத்தில் பழகுகிறவனாகவும், செல்வ வசதியுள்ளவனாகவும், அறிவாற்றல் மிக்கவனாகவும், காவிய - புராண - இதிஹாஸம்-ஸ்ம்ருதி ஆகியவற்றில் திறன் உள்ளவனாகவும், பல ஸ்திரீ சம்பந்தம் உள்ளவனாகவும், தனக்குக் கிடைத்த செய்தியைப் பிறருக்கு உடனே தெரிவிப்பனாகவும் இருப்பான். (634)

### சனி அம்சபலன்

வெட்கமற்றவனுமாய், கோட்சொல்லும் இயல்பு உள்ளவனுமாகவும், கருமியாகவும், பரம தரித்திரனாகவும்,

அதிகம் தூங்குகிறவனாகவும், வக்ரமான புத்தியுள்ள வனாகவும், துஷ்டனாகவும், தன் மனம் விரும்பிய வண்ணம் நடந்துகொள்பவனாகவும், எலும்பு, தலைமயிர், பல், நகம் ஆகியவை விஷயத்தில் விகாரத் தோற்றம் உள்ளவனாகவும், உண்மைக்கும்-நியாயத்திற்கும் மாறாக நடந்துகொள்ப வனுமாகவும் இருப்பான். (635)

## கோசாரபலன்

இதற்குமேல் கோட்சார பலன் கூறப்படுகிறது. சந்திரன் நின்ற ராசி முதல் 12 ராசிகளிலும் சூரியன் முதலான கிரஹங்கள் சஞ்சாரம் செய்வதால் ஏற்படும் சுப - அசுப பலன்கள் எழுதப்படுகிறது.

சூரியன் ஜன்ம ராசியில் ஸஞ்சாரம் செய்யும் காலத்தில் இருந்துவரும் நிலையிலிருந்து வீழ்ச்சி. உயர்பதவியில் இருந்தால் பதவி இறக்கம் ஏற்படும். 2-மிடத்தில் பொருளாதார நிலையில் சற்று ஆரோக்கியமான நிலை அளிப்பான். 3-மிடத்தில் பெருஞ்செல்வம், கௌரவம் ஏற்படும். 4-மிடத்தில் நெருக்கம் உள்ளவருடன் மனப்பிணக்கு (மனஸ்தாபம்), 5-மிடத்தில் மனோவியாதி, 6-மிடத்தில் பகைவர் அழிவு, 7-மிடத்தில் பிரயாணம் நிகழும், 8-மிடத்தில் மனப்பீடை, உடல்பிணி, 9-மிடத்தில் பகையுணர்வு, 10-மிடத்தில் வெற்றி, 11-மிடத்தில் செல்வ லாபம், 12-மிடத்தில் சஞ்சாரம் செய்யும் காலத்தில் பொருள் நஷ்டம் ஏற்படும். கோசார பலன்கள் யாவும் அவரவருடைய தசைபுக்தி நிலையை அனுசரித்துத்தான் அமையும் என்பது குறிப்பு. (636 - 637)

## சந்திரன் - கோசாரபலன்

ஜன்ம ராசியில் சந்திரன் சஞ்சாரம் செய்யும் 2 ¼ நாட்களில் சுவையுள்ள விருந்து, 2-மிடத்தில் சஞ்சாரம் செய்யும் நாட்களில் தனஹானி, 3-மிடத்தில் தனலாபம்,

4-மிடத்தில் வயிற்றில் நோய், 5-மிடத்தில் எண்ணிய (தொடங்கிய) காரியம் தடைபட்டுப்போதல், 6-மிடத்தில் செல்வம் - பொருள் வரவு, 7-மிடத்தில் ஸ்திரீ லாபம், 8-மிடத்தில் பயம், ஆரோக்கியக் குறைவு, பலவிதங்களிலும் கஷ்டம், 9-மிடத்தில் மனதில் பயம், 10-மிடத்தில் சௌக்யம், 11-மிடத்தில் தனலாபம், 12-மிடத்தில் பொருள் நஷ்டம் ஏற்படச்செய்யும், (638 - 639)

## செவ்வாய் - கோசாரபலன்

செவ்வாய் ஜன்ம ராசியில் இருக்கும் காலத்தில் பகைவர் தொந்தரவு, 2-மிடத்தில் பொருள் நஷ்டம், 3-மிடத்தில் தனலாபம், 4-மிடத்தில் பகைவர் பயம், 5-மிடத்தில் பொருள் நஷ்டம், 6-மிடத்தில் தனலாபம், 7-மிடத்தில் உற்றார், நண்பருடன், அலுவலகத்தில் பகை, 8-மிடத்தில் ஆரோக்கியஹானி, 9-மிடத்தில் பலவிதங் களிலும் கஷ்டம், 10-மிடத்தில் துயரம், 11-மிடத்தில் பூமி லாபம், 12-மிடத்தில் பலவிதங்களிலும் கஷ்டங்கள் ஏற்படலாம். (640 -641)

## புதன் - கோசாரபலன்

புதன் ஜன்ம ராசியில் ஸஞ்சாரம் செய்யும் காலத்தில் சிக்கலில் அகப்பட்டுக்கொள்ளுதல், 2-மிடத்தில் செல்வம் வரவு, 3-மிடத்தில் பெருஞ்செல்வம், 4-மிடத்தில் புத்ர லாபம், 5-மிடத்தில் சௌக்யம், 6-மிடத்தில் பதவிபெறுதல், 7-மிடத்தில் நோய்த்தொல்லை, 8-மிடத்தில் லாபம், 9-மிடத்தில் நோய், 10-மிடத்தில் சுகம், 11-மிடத்தில் தனலாபம், 12-மிடத்தில் பெரும் செலவு ஏற்படும். (642)

## குரு - கோசாரபலன்

ஜன்ம ராசியில் குரு ஸஞ்சாரம் செய்யும் காலத்தில் இடமாற்றம் நேரிடலாம், 2-மிடத்தில் தனவரவு, சௌக்யம்,

3-மிடத்தில் மனதில் பயம், 4-மிடத்தில் பொருள் இழப்பு, 5-மிடத்தில் சௌக்யம், 6-மிடத்தில் நோய், மனக்கவலை, பகை, கடன் வாங்க நேரிடுதல், 7-மிடத்தில் செல்வம், 8-மிடத்தில் விபத்து, 9-மிடத்தில் தனலாபம், 10-மிடத்தில் வேலை இழப்பு, இடமாற்றம், 11-மிடத்தில் தனலாபம், 12-மிடத்தில் செலவு, உடல் ஆரோக்கியக் குறைவு. (643)

## சுக்ர - கோசாரபலன்

சுக்ரன் ஜன்ம ராசியில் ஸஞ்சரிக்கும் காலத்தில் ஸந்தோஷம், 2-மிடத்தில் செல்வம், பொருள் லாபம், 3-மிடத்தில் சுகம், 4-மிடத்தில் சுபம், 5-மிடத்தில் மகிழ்ச்சி, 6-மிடத்தில் பகைவர் பயம், நோய் பயம், 7-மிடத்தில் சுபம், 8-மிடத்தில் தனலாபம், 9-மிடத்தில் ஆடை, ஆபரண லாபம், 10-மிடத்தில் விரோதம், 11-மிடத்தில் லாபம், 12-மிடத்தில் சுபம் ஏற்படும். (644)

## சனி - கோசாரபலன்

சனி பகவான் ஒரு ராசியில் 2½ வருடங்கள் ஸஞ்சரிப்பவர். அவர் ஜன்ம ராசியில் ஸஞ்சாரம் செய்யும் காலத்தில் விபத்துக்களில் சிக்கநேரிடுதல், 2-மிடத்தில் பொருள் நஷ்டம், பேச்சில் தவறு காரணமாக கெட்டபெயர், 3-மிடத்தில் பொருள் வரவு, 4-மிடத்தில் ஆரோக்கியக் குறைவு, இடமாற்றம், உறவினர்களிடத்தில் மனஸ்தாபம், 5-மிடத்தில் புத்ரன் (மகன்) - புத்ரி (மகள்) பீடையால் கவலை, 6-மிடத்தில் செல்வம், 7-மிடத்தில் செலவுக்குப் பணம் கிடைக்காமல் அவதிப்படுதல், 8-மிடத்தில் மரணம் (மரணத்திற்கு ஈடான கஷ்டம்), 9-மிடத்தில் பகை, 10-மிடத்தில் வியாதி, 11-மிடத்தில் தனலாபம், 12-மிடத்தில் வீண் செலவு, பொருள் நஷ்டம், திருட்டுக் கொடுத்து நஷ்டப்படுதல், நோய் போன்ற பலன்கள் ஏற்படும். (646)

## ராகு / கேது - கோசாரபலன்

சனிபோல் ராகுவும், செவ்வாய்போல் கேதுவும் பலன் அளிப்பவர்கள். ஜன்ம ராசியில் ராகு / கேதுக்கள் சஞ்சாரம் நடக்கும் காலத்தில் பயம், 2-மிடத்தில் வியாதி, சொல்குற்றம் ஏற்படுதல், 3-மிடத்தில் ஆரோக்கியம், மகிழ்ச்சி, 4-மிடத்தில் நஷ்டம், 5-மிடத்தில் புத்ரன்-புத்ரீகளுக்கு ஏற்படும் கஷ்டத்தால் கவலை, 6-மிடத்தில் லாபம், 7-மிடத்தில் அரசாங்க பயம், 8-மிடத்தில் ஆரோக்கியம், 9-மிடத்தில் மனஸ்தாபம் (பகை), 10-மிடத்தில் கலகம், 11-மிடத்தில் தனலாபம், 12-மிடத்தில் பொருள் நாசம் ஏற்படும். (647)

12-மிடத்தில், 8-மிடத்தில் ஜன்ம ராசியில் சனி - சூரியன்-செவ்வாய்-குரு இவர்கள் இருக்கையில் உடல் ஆரோக்கியஹானி, ஸ்தானப்ரம்சம் (வேலையைவிட்டு வெளியேற நேரிடுதல்), பெருமளவு செலவு செய்ய நேரிடுதல் ஏற்படும். (648)

## கிரஹங்களின் அதிசாரம் / வக்ரகதியில் பலன்

கிரஹங்கள் பொதுவாக ஒரு குறிப்பிட்ட வேகத்தில்தான் நகரும் இயல்புள்ளவை. ஆனால் சில சமயம் அதிக வேகத்துடன் சஞ்சாரம் செய்யும் நிலையும் ஏற்படும். இதற்கு அதிசாரம் என்று பெயர். இதேபோல் முன்னோக்கிச் செல்லாமல் திடீரென்று பின்னோக்கிச் செல்வதும் உண்டு. இதற்கு வக்ரகதி என்று பெயர். கிரஹங்கள் அதிசாரவசத்தால் ஒரு ராசியைக் கடந்து அடுத்த ராசிக்கும் செல்வதுண்டு. அக்காலத்தில் கிரஹங்கள் கொடுக்கும் பலன் விஷயத்தில் சில வித்தியாசங்கள் உண்டு. எல்லா கிரஹங்களுமே பொதுவாக அதிசாரகாலத்தில் ஜன்ம ராசியிலிருந்து எத்தனையாவது ராசியில் சஞ்சாரம் செய்கிறார்களோ, அந்த ராசிக்குரிய அந்தந்த இடத்திற்குரிய பலன் அளிப்பர். அனால் குருவின் ஸஞ்சாரத்தில் அதிசாரமானாலும் / வக்ரமானாலும் முதலில் எந்த இடத்தில் இருந்தாரோ அந்த ராசிக்கு அந்த இடத்திற்கு உரிய பலனையே அளிப்பார். (649)

## மாதபலன்

ஜன்ம நக்ஷத்திரம் முதல் மாதப்பிறப்பு நக்ஷத்திரம்வரை எண்ணி அதை ஏழால் பெருக்கி, எட்டால் கழிக்க மீதி

1 வந்தால்-ரோகம், 2. லாபம், 3. நடக்கவேண்டியநிலை (அலைச்சல்), 4. காவலில் இருக்க நேரிடலாம், 5. தனலாபம், 6. ஐச்வர்யம், 7. பொருள் நஷ்டம், 8. அபமிருத்யு (எதிர்பாராத விபத்து என்றும் கொள்ளலாம்). (650 - 651)

## நித்ய கிரஹபலன்

ஜன்ம நக்ஷத்திரம் முதல் அன்றைய நக்ஷத்திரம் வரையில் எண்ணி, அதை நாலால் பெருக்கி அத்துடன் அன்றைய திதியையும், கிழமையையும் கூட்டி ஒன்பதைக் கழித்தால் மிகுதிக்கு.

1 ஆகில் - கவலை (கஷ்டம்), 2. பொலிவு, 3. மரணம் (கண்டம்), 4. லாபம், 5. தனதான்ய லாபம், 6. தேகசௌக்யம், 7. இடமாற்றம், 8. மரணம், 9. விரோதம். (652 - 653)

## கிழமை - ஜன்ம நக்ஷத்திர யோகபலன்

ஞாயிற்றுக்கிழமையில் ஜன்ம நக்ஷத்திரம் வந்தால் நடந்துசெல்லவேண்டியிருக்கும், (நடைப்பயணம்), திங்கட் கிழமை வந்தால் நல்ல சுவையுள்ள விருந்து, செவ்வாய்க் கிழமை வந்தால் சோம்பல், புதன்கிழமை வந்தால் கற்பதில் ஈடுபாடு, வியாழக்கிழமை வந்தால் வஸ்திரலாபம், வெள்ளிக்கிழமை வந்தால் ஸ்திரீலாபம், சனிக்கிழமை ஜன்ம நக்ஷத்திரம் வந்தால் வியாதி, பீடை. (654)

## கோசாரத்தில் கிரஹங்கள் அளிக்கும் பலன்கள்

**சூரியன்:** ஜன்ம ராசிக்கு 11, 3, 10, 6மிடத்தில் இருந்தால் சுபபலனை அளிப்பார். அது சமயம் 5-9-4-12ல் சனியைத் தவிர வேறு எந்த கிரஹம் இருந்தாலும் சுபபலனைத் தரமாட்டார், வேதையாம். (655)

***சந்திரன் :*** ஜன்ம ராசி 7-6-11-3மிடம் இவைகளில் சஞ்சரிக்கும்பொழுது சுபபலன் தரவேண்டும். ஆனால் அப்பொழுது 2-5-12-8-4-9மிடம் இவைகளில் புதன் தவிர வேறு எந்த கிரஹமும் இருக்கலாகாது. இருந்தால் சந்திரன் சுபபலனைத் தரமாட்டார். *(656)*

***செவ்வாய் :*** ஜன்ம ராசிக்கு 3-11-6ல் இருப்பின் சுபபலன் தரவேண்டியவர். ஆனால் 12-5-9ஆமிடங்களில் சூரியனும்-சனியும் தவிர வேறு கிரஹங்கள் இருக்கலாகாது.

***புதன் :*** ஜன்ம ராசிக்கு 2-4-6-8-10-11மிடங்களில் சஞ்சரிக்கும் சமயம் சுபபலன் அளிக்கவேண்டியவர். ஆனால் 8-12மிடம் இவற்றில் சந்திரன் தவிர வேறு ஒரு கிரஹமும் இருக்கலாகாது. *(658)*

***குரு :*** ஜன்ம ராசிக்கு 2-11-9-5-7மிடங்களில் இருப்பின் சுபபலன் தரவேண்டும். ஆனால் 12-8-10-4-3மிடங்களில் ஒரு கிரஹமும் இருக்கக்கூடாது.

***சுக்ரன் :*** ஜன்ம ராசிக்கு 5-8-12-11ம் இடங்களில் சுபபலன் அளிக்கவேண்டும். ஆனால் 8-12-ஜன்ம ராசி-10-11-5-6-3ம் இடங்களில் எந்த கிரஹமும் இருத்தல்கூடாது. இருந்தால் வேதை. *(660)*

***சனி- ராகு-கேது :*** இவர்களுக்குச் செவ்வாயைப்போல் காணவும்.

சொல்லப்பட்ட ஒன்பது கிரஹங்களுக்கும் மேலே குறிப்பிட்டிருக்கிற நல்ல சுபஸ்தானங்களில் கிரஹங்கள் இருந்தால் வேதை உண்டு என்பதால் சுபபலன் தருவதற்கில்லை. *(661)*

## வேதை

| | |
|---|---|
| கார்த்திகைக்கும் | - விசாகத்திற்கும் வேதை. |
| பரணிக்கும் | - அனுஷத்திற்கும் வேதை |
| திருவோணத்திற்கும் | - மகத்திற்கும் வேதை |

அவிட்டத்திற்கும் - ஆயில்யத்திற்கும் வேதை
அச்வினிக்கும் - பூரத்திற்கும் வேதை
ரேவதிக்கும் - உத்தரத்திற்கும் வேதை
உத்தரட்டாதிக்கும் - ஹஸ்தத்திற்கும் வேதை
சித்திரைக்கும் - பூரட்டாதிக்கும் வேதை
சதயத்திற்கும் - ஸ்வாதிக்கும் வேதை
கேட்டைக்கும் - பூசத்திற்கும் வேதை
மூலத்திற்கும் - புனர்பூசத்திற்கும் வேதை
பூராடத்திற்கும் - திருவாதிரைக்கும் வேதை
உத்தராடத்திற்கும் - மிருகசீர்ஷத்திற்கும் வேதை
ரோகிணிக்கும் - அபிஜித்துக்கும் வேதை. (662- 663)

## நக்ஷத்திர நிகண்டு

***அச்வினி :*** அஸ்வி, தஸ்ரம், துரங்கம, ஆத்ய, துரங்க, துரக, அச்வ, வாஜி, ஹய, ஹரி இவை அச்வினி நக்ஷத்திரத்தைக் குறிப்பிடும். (664)

***பரணி :*** யமம், யாம்யம், அந்தக, யமஸம்ஞக இவை பரணியைக் குறிக்கும் பெயர்கள்.

***கார்த்திகை :*** க்ருத்திகை, பஹுலா, ஹுதபுக், வன்ஹி, ஷட்தாரதகம், பாவகம், அனல, ஜ்வனல இந்த எட்டும் க்ருத்திகைக்குப் பெயர்கள். (665 - 666)

***ரோகிணி :*** ரோகிணி, விதி, ப்ரம்மா, ப்ராஜாபத்ய, சதுர்முக, ப்ரஜாபதி, ப்ரஜேச, விதாதா, பங்கஜாஸன, ஆத்மபூ, பத்மயோனி, ப்ரம்மநாம இவை ரோகிணியைக் குறிப்பிடும் பெயர்கள். (667)

***மிருகசீர்ஷம் :*** மிருகம், சந்திரன். ஐந்தவ, ஹிமதீதிதி, சிசுப, ஸெளம்ய, நிசாநாத, நிசாகர இவை மிருகசீர்ஷ நக்ஷத்திரத்தைக் குறிப்பிடும் பெயர்கள். (668)

***திருவாதிரை :*** ஆர்த்ரா, புரஜித், சர்வ, ஸ்தாணு, பவ, ஹர இவை திருவாதிரையைக் குறிப்பிடும் பெயர்கள்.

***புனர்பூசம் :*** புனர்வசு, அதிதி, தேவமாதா, ஆதித்ய இவை புனர்பூசத்தைக் குறிப்பிடும் பெயர்கள். *(669)*

***பூசம் :*** இஜ்யம், ஆத்யம், திஷ்யம், புஷ்யம், பூஜித, குருநாமக, வாகீச, அமரேஜ்ய, ஜீவி, தேவபுரோஹித இவை பூச நக்ஷத்திரத்தைக் குறிப்பிடும் பெயர்கள். *(670)*

***ஆயில்யம் :*** ஆச்லேஷா, உரக, ஸர்ப்ப, அஹி, புஜங்க, வ்யாள இவை ஆயில்யத்தைக் குறிப்பிடும் பெயர்கள்.

***மகம் :*** மகா, பிதா, பைத்ரம், மேகலா, பித்ருப இவை மக நக்ஷத்திரத்தைக் குறிப்பிடும் பெயர்கள். *(671)*

***பூரம் :*** பாக்யம், பூர்வபல்குனி, பகாக்ய, பக, ஸம்ஞித இவை பூரத்தைக் குறிப்பிடும் பெயர்கள்.

***உத்தரம் :*** ஆர்ய, அர்யமண, அர்யம்ண, உத்தர இவை உத்தர நக்ஷத்திரத்தைக் குறிப்பிடும் பெயர்கள். *(672)*

***ஹஸ்தம் :*** ஸவிதா, ஸாவித்ர, அர்க்க, ஸூர்ய, திவாகர இவை ஹஸ்தத்தைக் குறிப்பிடும் பெயர்கள்.

***சித்திரை :*** த்வஷ்ட்ருதைவத்ய, த்வாஷ்டிர, இந்திரன், சுரவர்தக இவை சித்திரை நக்ஷத்திரத்தின் பெயர்கள். *(673)*

***ஸ்வாதி :*** ஸமீரண, வாயி, பவன, அநில, மருத் இவை ஸ்வாதியைக் குறிப்பிடும் பெயர்கள்.

***விசாகம் :*** விசாகா, சூர்ப்பம், இந்த்ராக்னி, த்விதைவத்ய இவை விசாக நக்ஷத்திரத்தைக் குறிப்பிடும் பெயர்கள். *(674)*

***அனுஷம் :*** மித்ர, மைத்ர, அனுராத இவை அனுஷ நக்ஷத்திரத்தைக் குறிப்பிடும் பெயர்கள்.

***கேட்டை :*** ஜ்யேஷ்ட்ட, ஐந்த்ர, புருஹூத, இந்திர, சதமக இவை கேட்டையைக் குறிப்பிடும் பெயர்கள்.

***மூலம் :*** நிசாசர, ஆஸுர, நிர்ருதி, நக்தஞ்சர, கோணப, ராக்ஷஸ, பிசிதாசன ஆகியவை மூல நக்ஷத்திரத்தைக் குறிப்பிடும் பெயர்கள். (676)

***பூராடம் :*** ஜல, தோய, உதக, ஆப்ய ஆகிய பெயர்கள் பூராட நக்ஷத்திரத்திற்கான பெயர்கள்.

***உத்தராடம் :*** "விச்வ" என்பது உத்தராட நக்ஷத்திரத் தையும்,

***அபிஜித் :*** அப்ரகாசக என்பது அபிஜித் நக்ஷத்திரத்தையும் கூறும் பெயர்கள். (677)

***திருவோணம் :*** வைஷ்ணவ, ஸ்ரீச, ஸ்ரீகாந்த, முரஜித், ஹரி ஆகிய பெயர்கள் திருவோண நக்ஷத்திரத்திற்கான பெயர்கள்.

***அவிட்டம் :*** தனிஷ்ட்டா, வஸு, வாஸவ இவை அவிட்ட நக்ஷத்திரத்தைக் குறிப்பிடுபவை. (678)

***சதயம் :*** ப்ராசேதஸ, ஜலநிதி, சததாரா, வாருண ஆகியவை சதய நக்ஷத்திரத்தின் பெயர்கள்.

***பூரட்டாதி :*** அஜைகபாத், ப்ரோஷ்ட்டபதா, பூர்வபாத்ரபதா என்பன பூரட்டாதி நக்ஷத்திரத்தின் பெயர்கள். (679)

***உத்தரட்டாதி :*** உத்தரப்ரோஷ்ட்டபதா, அஹிர்புத்ன்ய, நிசாமுக ஆகியவை உத்தரட்டாதி நக்ஷத்திரத்தைக் குறிக்கும்.

***ரேவதி :*** பௌஷ்ண்ய, அந்த்ய, பூஷா ஆகியவை ரேவதி நக்ஷத்திரத்தைக் குறிக்கும் பெயர்கள். (680)

## *ராசி நிகண்டு*

***மேஷம் :*** அஜா, க்ரியா, ச்சாக, பஸ்தா, துபா, விச்வபேஷஜீ, ஆத்ய, க்ரியா, பஸ்தீ, ச்சாகீ, ராகீ. ரய இவை மேஷத்தைக் குறிப்பிடும் பெயர்கள் (681)

***ரிஷபம் :*** உரு, கோ, விருஷப, உக்ஷா, அனட்வான், ஸௌரபேய, துரக்ஷோபி இவை ரிஷபத்தைக் குறிக்கும். *(682)*

***மிதுனம் :*** யமள, யுக்ம, ந்யுக்ம, யுக இவை மிதுன ராசியைக் குறிப்பிடும் பெயர்கள்.

***கடகம் :*** குலீர, கர்க்கி, கடக, கர்க்கிணி, நிசனி, ஜ்ஜம இவை கடத்தைக் குறிப்பிடும் பெயர்கள். *(683)*

***சிம்மம் :*** மிருகாரி, மிருகராட், மிருகேந்திர, மிருகநாயக, ஹரி, பஞ்சானன, ராஜா, லேயம், கண்டீரவம் இவை சிம்ம ராசியைக் குறிப்பிடும் பெயர்கள்.

***கன்னி:*** அங்கனா, ஸ்த்ரீ, வதூ, கன்யா, பார்ஷேய, கன்யகா, அபலா இவை கன்னி ராசியைக் குறிப்பிடும் பெயர்கள். *(684)*

***துலாம் :*** துலா, தௌலி, வணிக, ஜூக, துலாப்ருத், தட இவை துலா ராசியைக் குறிக்கும்.

***விருச்சிகம் :*** அளி, ஸரீஸ்ருப, கோர்பி, கீட, விருச்சிகம் ஆகியவற்றைக் குறிக்கும். *(685)*

***தனுஸ் :*** சார்ங்கம், சராஸன, கௌலிக, மார்கணாஸன, சாப, தூணீர, பாண, தனுஸ், கோதண்ட, கர்முக இவைகள் தனுஸ் ராசியைக் குறிக்கும் பெயர்கள். *(686)*

***மகரம் :*** ம்ருக, நக்ர, அகோகேக இவைகள் மகர ராசியைக் குறிக்கும் பெயர்கள்.

***கும்பம் :*** கட, ஜலதர, ஹ்ருத், ரோக இவைகள் கும்பராசியைக் குறிக்கும் பெயர்கள்.

***மீனம் :*** அந்த்ய, அநிமிஷ, மத்ஸ்ய, ஜஷ, வாரிஜ, அண்டஜ, ஜலஜ, ப்ருதுரோமா ஆகியவை மீன ராசியைக் குறிப்பிடும் பெயர்கள்.

